# ஸ்ரீமத் பாகவத ஸாரம்



இது

திரு. சுப்பிரமணிய பாரதி

இயற்றியது



மயிலாப்பூர், பி. எஸ். ஹைஸ்கூல்

தலைமை ஆசிரியர் (காலஞ்சென்ற)

ஏ. பஞ்சாபகேசய்யர், எம். ஏ., எல். டி.,

அவர்கள் முன்னுரையுடன் கூடியது.




விவேக போதினி ஆபீஸ்

மயிலாப்பூர், சென்னை.

 [ரு. 1-6-0

# ஆரியமத உபாக்யானம்

எங்கள் வெளியீடுகளில் தலைமை வகிப்பது. தெலுங்கு, கன்னடப் பதிப்புகளும் உண்டு. **150,000**—பிரதிக ளுக்கு அதிகம் செலவாகி யிருப்பதே, இவைகளின் சிறப்புக்கும், உயர்வுக்கும் தகுந்த அத்தாட்சி அல்லவா? இவைகளில், அரிய நீதிக் கதைகளும், கண்ணைக் கவரும் போடோ படங்களும் நிறைந்துள்ளன. சிறுவர் சிறுமிகளும் களிப்புடன் வாசிக்கக்கூடிய எளிய நடையில் எழுதப்பட்டவை.

காகிதம், அச்சு, பைண்ட் மிக நேர்த்தி

(முதல் பாகம், 24-ம் பதிப்பு) (2-ஆம் பாகம், 18-ம் பதிப்பு)

— விலை அணு **10** : : விலை அணு **12** —

விநோதன் பிரஸ்,
சென்னை (194: 72863)



ஸ்ரீ கிருஷ்ண ஜனனம்

# FOREWORD

Of the Eighteen Puranas which are, in fact, the Vedas popularised, the foremost and the best Purana is undoubtedly Srimat Bhagavatam. It is to the Hindus as sacred as the Bible is to the Chiristans, and the Koran to the Muhammadans. It contains even more than these Sacred Books, for, it includes in it the history of the ancient Kings of India and as such, from a historical point of view, it is of great importance to those interested in Ancient Indian History. This book has been the inspiring motive to the many generations of the Hindus that are gone by and will be so for endless time to come. It is a great source of encouragement, comfort and pleasure for householders and a solace to those who are either advanced in years or have renounced the world. Embodying in it the stories of the Ten Avatars of God Vishnu, it is replete with the highest philosophical teachings beyond which human mind cannot go. It is highly necessary that the story portion at least of such a work should be known to the boys and girls reading in

our schools and Hindu women-folk who, either for want of time or sufficient literary equipment, cannot study either the original or its translation. I am glad to see that the story of the Ten Avatars *has been pleasantly told in easy and lucid Tamil* by Varakavi Thiru A. Subramania Bharati *in the Bhagavata Saram* and I am sure that, if this book is introduced as a non-detailed reading book in our Secondary Schools, the rising generation will not be strangers to the story of the Bhagavata which, being the Bible of the Hindu, is a *sine qua non* for one to be such. The reading public should be thankful to Mr. V. Kuppuswami Aiyar, Editor and Proprietor, the Viveka Bodhini who has benefited the Tamil world by many valuable publications of the kind.

A. PANCHAPAGESA AIYAR,
*Headmaster, P. S. High School.*

---

## விஷய அட்டவணை

முகப்புப் படம்

கிருஷ்ண ஜனனம்

---



# ஸ்ரீமத் பாகவத ஸாரம்

## முதல் அத்தியாயம்

### பரீக்ஷித்தும் தருமதேவதையும்

பாண்டவர் ஐவருள் அர்ச்சுனன் என்பவனுக்கு அபிமன்யு என்று ஒரு புத்திரன் இருந்தான். அவன் விராடபூபதியின் பெண்ணுகிய உத்தரை என்பவளை மணம் செய்துகொண்டான். தந்தையைப் போலவே அபிமன்யு நிகரற்ற வீரன்; அதி சுந்தர ரூபன். அவன் பாரத யுத்தத்தில் கடுமையான போர்புரிந்து அரிய வெற்றி பெற்று முடிவில் பகைவரின் வஞ்சனையினுல் இறந்தான். அந்த யுத்தத்தில் பதினெட்டாம் நாள் இரவில் இளம் பஞ்சபாண்டவர் பாசறையில் தூங்குகையில் அசுவத்தாமா என்பவன் அவர்களைக் கொன்றுவிட்டான். அசுவத்தாமா பாண்டவர்களின் குருவினுடைய புதல்வ

ளுகையால் அவர்கள் அவனைக் கொல்லாமல் பிடித்துவந்து அவனது குடுமியை அறுத்துச் சிரோரத்தினத்தை மாத்திரம் வாங்கிக்கொண்டு விட்டுவிட்டனர். அசுவத்தாமா பாண்டவப் பூண்டே உலகில் இல்லாமல் ஒழியும்படி ஓர் அஸ்திரப் பிரயோகம் செய்தானுகையால், அந்த அஸ்திரமானது அப்பொழுது கர்ப்பமாயிருந்த உத்தரையைத் தொந்தரவு செய்தது. அவள் நல்ல விவேகமுடையவளாதலால், ஆபத்துக் காலத்தில் ரக்ஷிப்பவர் பகவானேயென்று அறிந்து கிருஷ்ண பகவானைச் சரணம் அடைந்தாள். பகவான் உடனே அவளுடைய கருப்பையினுட் புகுந்து, தமது கதாயுதத்தால் அந்த அஸ்திரத்தைத் தடுத்து அங்கிருந்த ஆண்சிசுவைக் காப்பாற்றினுர்.

பிறகு அவள் வயிற்றில் இருந்த அந்தச் சிசு ஒரு நல்ல சுபதினத்தில் பிறந்தது. பிறந்த சிசுவானது அஸ்திரத்தின் மகிமையால் வெறும் கரிக்கட்டையாக இருந்தது. அதனை ஸ்ரீகிருஷ்ண பகவான் ஓர் அழகிய குழந்தையாகச் செய்தார். இச்சிசு பாண்டுகுலத்தை உத்தாரணஞ் செய்ய உதித்த குழந்தை யாகையால், பாண்டவர்கள் அன்றைத் தினத்தில் திருவிழாக் கொண்டாடினுர்கள்; பரம சந்தோஷத்துடன் தானதருமங்களைச் செய்தார்கள். பிராம்மணர்கள் இக்குழந்தைக்கு விஷ்ணுராதன் என்று பெயரிட்டார்கள். விஷ்ணுராதன் என்ருல் விஷ்ணுவால் ரக்ஷிக்கப்பட்டவன் என்பது பொருள். இச்சிசுவைப் பகவான் உத்தரையின் கர்ப்பத்தில் அசுவத்தாமாவின் அஸ்திரத்தினின்றும் காப்பாற்றினுர் அல்லவா? இதனுலேயே பெரியோர்கள் இக்குழந்தைக்கு இப்பெயர் இட்டனர்.

குழந்தை பிறந்தது முதல், தன்னைக் கர்ப்பத்தில் காப்பாற்றியவனை அறிய விரும்பியது; அவனது உருவத்தை நினைத்தபடியே, தன்னை வந்து காண்பவரை

யெல்லாம் கவனித்துக்கொண்டே வந்தது. இதனால், அதனைக் கவனித்துவந்த சில மகான்கள், விஷ்ணுராதன் என்னும் இச்சிசுவுக்குப் பரீக்ஷித்து எனப் பெயரிட்டார்கள்.

பரீக்ஷித்து என்னும் உத்தமனைக் கண்ட பெரியோர்கள், 'இவன் இக்ஷுவாகுவைப்போல் தருமம் தவறாமல் அரசுபுரிவான்' என்றார்கள்; தசரத புத்திரனாகிய ஸ்ரீராமச்சந்திரனைப்போல் சத்தியம் தவறாதவனாக விளங்குவான் என்று சொன்னார்கள்; சிபிச் சக்கரவர்த்திக்குச் சமானமான கொடையாளியாய் இருப்பானென்றும், அர்ச்சுனனைப்போலவும் கார்த்தவீரியார்ச்சுனனைப் போலவும் வில்லாளியாக விளங்குவானென்றும், பூமியைப்போல் பொறுமையையும் பிரமனைப்போல் சாந்தத்தையும் கொண்டு தைரியத்தில் மகாபலியைப்போல விளங்குவானென்றும் கூறினார்கள்; கடைசியில் பிராம்மண குமாரனுடைய சாபத்தினால் தக்ஷகனாலே மரணம் அடையப் போகிறானென்றும் கூறிச் சென்றார்கள். இவற்றையெல்லாம் தருமராஜாவுக்கு அவர்கள் இரகசியமாய்க் கூறியபடியால், அவர் கேட்டு மனத்திருப்தி யடைந்து அவர்களுக்கு வேண்டிய வெகுமானங்களைக் கொடுத்தனுப்பினார்.

தருமராஜாவினுடைய ஸந்நிதியில் பரீக்ஷித்து சுக்கில பக்ஷத்துச் சந்திரனைபோல் வளர்ந்துவந்தான். அவன் இவ்வாறு வளர்ந்துகொண் டிருக்க, தருமபுத்திரர், யுத்தத்தில் தம் உறவினரெல்லோரையும் கொன்றதை எண்ணிப் பெரும் துக்கத்துக்கு ஆளானார். அதனால் அவருக்குப் பகவான் பீஷ்மர் மூலமாக அவருக்குப் பல தருமநியாயங்களை உபதேசம் செய்தார். அப்படியும் அவர் மனம் தேறுதல் அடையவில்லை.

அவர் அப்படியிருக்கையில் விதுரர், திருதராஷ்டிரன் முதலியவர்களுக்கு வைராக்கியம் முதிர்ந்து நற்கதி அடையும்படியான வழியைச் சொல்லிவிட்டுத் தாம் பரமபதம்

அடைந்தார். இது தருமபுத்திரருக்குத் தெரிந்தது. அவருடைய துக்கம் பின்னும் அதிகரித்தது. சில நாளைக்கெல்லாம் திருதராஷ்டிரன் முதலியவர்கள் காலஞ்சென்றனர். துவாரகையிலிருந்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும் இந்தக் காலத்தில் தம் அடிச்சோதியுள்ள வைகுண்டலோகம் சென்றார். யாதவர்கள் தமக்கு நேர்ந்த சாபத்தால் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு மடிந்தனர். இவற்றையெல்லாம் அப்பொழுது அங்கே போயிருந்த அர்ச்சுனன் வந்து தருமபுத்திரருக்குச் சொல்லி விசனப்பட்டான்.

இவ்வாறு எல்லாம் மாறுவதனால், கலியுகம் பிறந்து விட்டதென்று தருமபுத்திரர் அறிந்து தம்முடைய பேரனாகிய பரீக்ஷித்துக்குப் பட்டாபிஷேகம் செய்வித்துத் தாம் வடக்குத் திக்கை நோக்கிச் சென்று தம்முடைய தம்பிமார் மனைவி எல்லோரையும் விட்டுவிட்டுச் சுவர்க்கம் அடைந்தார். பின்னர் அவர் தம்பிமார்களும் திரௌபதியும் குந்திதேவியும் உத்தமர்கள் அடையும் கதியை அடைந்தனர்.

பரீக்ஷித்து பட்டம் பெற்றதும் விராடதேசத்து அரசனாயிருந்த உத்தரனுடைய புத்திரி இராவதியை மணம் செய்துகொண்டு தருமம் தவறாமல் அரசு புரிந்துவந்தான். பரீக்ஷித்துக்கு ஜனமேஜயன் முதலிய நான்கு புதல்வர்கள் பிறந்தனர். அவன் மூன்று அசுவமேத யாகங்களைச் செய்தான். அவனுக்குக் கிருபாசாரியர் குருவாயிருந்தார். ஆகவே, பரீக்ஷித்து சகல நன்மைகளையும் முன்னரே தெரிந்துகொண்டு அதற்கு எற்றவாறு நடந்துவந்தான்.

அவன் ஒரு சமயம் திக்கு விஜயஞ் செய்யப் புறப்பட்டு, பத்ராசுவ வருஷம், கேதுமால வருஷம், பாரத வருஷம், குரு வருஷம், இரைவிரதம், இரம்மியகம், இரண்மயம், ஹரிவருஷம், கிம்புருஷமென்னும் பெயர் கொண்டிருந்த இடங்களையெல்லாம் ஜயித்து அங்கங்கிருந்த

அரசர்களிடம் பகுதி வாங்கிக்கொண்டு ஜயசீலனாகத் திரும்பினான். அவன் சென்ற தேசங்களில் எல்லாம் ஜனங்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மகத்துவத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசினர்; அந்தக் கிருபாநிதியினால்தான் இந்த ராஜசிகாமணி அசுவத்தாமாவினுடைய அஸ்திரத்தினின்றும் காக்கப்பட்டாரென்று பரீக்ஷித்தைக் குறித்த செய்தியையும் சொன்னார்கள்; பாண்டவர்கள் கிருஷ்ண மூர்த்தியினிடம் வைத்திருந்த பக்தியையும் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு உயிர்த்துணையாயிருந்து உதவியதையும் கூறி வியந்தார்கள். இவற்றையெல்லாம் கேட்ட பரீக்ஷித்து மகிழ்ச்சி அடைந்து கிருஷ்ணபகவானிடம் அன்புகொண்டு, அவரையே சரணமாக அடைந்தான்; இவ்வாறு பேசிய அவர்களுக்கெல்லாம் அநேகவிதமான வெகுமதிகளைத் தந்து அவர்கள் தன்னை வாழ்த்த இந்திரப்பிரஸ்தத்திற்குத் திரும்பினான்.

பரீக்ஷித்து மகாராஜா திரும்பிவருகிற வழியில் ஒரு விசேஷம் நடந்தது. தருமதேவதை ஓர் எருதின் உருக்கொண்டு ஒரு காலால் நடந்துவந்து, கன்றையிழந்த தாயைப்போல் கதறியும், கண்ணீர் சொரிந்தும், மாறு வர்ணம் கொண்டும் இருந்த பூமிதேவியாகிய பசுவைக் கண்டு, "நீ இவ்வாறு துயரடைவதற்குக் காரணமென்ன?" என்று கேட்டது. பூமிதேவி, "என்ன செய்வேன்! எல்லா நன்மைகளுக்கும் காரணமான பகவான் என்னை விட்டு விலகினார். இனிமேல் இங்கே கலிபுருஷனுடைய அநியாயம் மேலிடப்போகிறது. தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பக்தர்களுக்கும் கேடு உண்டாகப் போகிறது. வர்ணாசிரம தர்மம், ஸத்தியம், தவம் முதலியவைகளுக்கும் அழிவு நேரப் போகிறது. இதனால் உன்னுடைய நான்கு பாதங்களில் மூன்றுக்குக் கேடு வந்திருக்கிறது. இதைக் கண்டுதான் துக்கப்படுகிறேன்" என்று கூறிற்று.

இச்சமயத்தில் அங்கே கலிபுருஷன் ஓர் அரச குமாரனைப்போல் வந்து, அந்த எருதையும் பசுவை யும் தன் கைத்தடியால் அடித்தான். இதனை அங்குற்ற பரீக்ஷித்து மகாராஜா கண்டு பரிதாபத்துடன் நின்று, அந்த அரசகுமாரனைத் தடுத்தான்; எருதையும் பசுவையும் நோக்கி, அவற்றிற்குத் தைரியம் உண்டாகும்படியாக, "துஷ்டர்களைச் சங்கரிக்க நான் காத்துக்கொண்டிருக்கை யில் நீங்கள் ஏன் இவ்வாறு துக்கப்படவேண்டும்? எந்த ராஜ்யத்தில் பிரஜைகள் துஷ்டர்களால் துன்பம் அடைகிறார்களோ, அந்த ராஜ்யத்தை ஆளும் வேந்த னுடைய புகழ்ச்சியும் ஆயுளும் பாக்கியமும் அவனுடைய பரலோக கதியும் அவன் தன் ராஜ்யத்தில் துன்பப்படுகிற ஜனங்களைக் காக்கும் தருமமாக இருக்கின்றன. ஆகையினால் உங்களுக்குத் தீங்கு விளைவிக்கும் இவனை இதோ வதைக்கிறேன்" என்று கூறினான். அப்பொழுது தரும தேவதையாகிய எருது, அவனுக்குச் சில தரும நியாயங்களை எடுத்துச் சொல்லிற்று. அதைக் கேட்டதும் பரீக்ஷித்து அதைத் தருமதேவதையென்றும், பசு ரூபத்துடன் இருப்பதைப் பூமிதேவியென்றும், ராஜகுமாரனைப்போல் வந்தவனைக் கலிபுருஷனென்றும் தெரிந்துகொண்டான். மேலும். 'தவம், சௌசம், தயை, சத்தியம் என்னும் நான்கும் தருமதேவதைக்கு நான்கு கால்கள்; இவற்றில் மூன்று கர்வம், ஈனசங்கம், மதம் என்னும் தீயகுணங் களினால் ஒழிந்தன. மீதியிருப்பது ஸத்யம் என்ற ஒன்றே. அந்த ஒன்றையும் இந்தக் கலிபுருஷன் வெட்டப் பார்க் கிறான். ஸ்ரீ ஹரியினுடைய திருவடி முத்திரைகளாகிய அலங்காரத்தினால் பாவங்கள் ஒழியப் பெற்றுச் சுகமா யிருந்த பூமிதேவி, அவர் நீங்கியதனாலும் இப்போது கலி புருஷன் தொந்தரவு செய்வதனாலும் துக்கப்படுகிறாள்' என்பதையும் உணர்ந்தான்.

தன் சூக்ஷ்ம புத்தியினால் இவ்வாறு உணர்ந்த பரீக்ஷித்து, கலிபுருஷனைக் கொல்வதற்காகத் தன் உடைவாளை உருவி ஓங்கினான். கலிபுருஷன் உடனே பரீக்ஷித்தின் காலில் விழுந்து சரணமடைந்தான். பரீக்ஷித்து மிகுந்த இரக்கம் உடையவனாதலால் அவனிடம் கருணை கொண்டு அவனைப் புன்முறுவலோடு பார்த்து, "ஏ கலிபுருஷ! நீ அதருமத்தின் துணை; ஆகையினால் எனது தேசத்தில் வாழ்வது கூடாது. கேசவனுடைய கீர்த்தியைப் பாடுகிற பக்தர்களிடம் அன்புடையவனாய் அவர்களை வணங்கு. அப்பொழுது உனக்குப் பயமிராது. ஆனால் ஒன்று கூறுவேன்: சூது, குடி, பொருமை, பொன் ஆகிய இவற்றை நீ இருப்பிடமாகக் கொள். இவற்றிலன்றி வேறு எங்கேயாவது நான் உன்னைக் கண்டால் சிறிதும் இரக்கமில்லாமல் கொல்வேன்" என்றான். கலிபுருஷன், "ஆணைப்படியே நடக்கிறேன்" என்று கூறி வணங்கி விடைகொண்டான்.

கலிபுருஷன் சென்ற பின்பு பரீக்ஷித்து, தரும தேவதையாகிய எருதுக்குத் தவம், சத்தியம், தயை ஆகிய மூன்று பாதங்களையும் திரும்பவும் கூட்டினான். அப்பால் பூமிதேவியையும் சமாதானம் செய்துவிட்டுத் தன் அரண்மனைக்குச் சென்றான்.

---

## இரண்டாம் அத்தியாயம்

---

### பரீக்ஷித்து சாபமடைதல்

பரீக்ஷித்து மகா பக்திமானாய் எல்லோருக்கும் நல்லவனாய்த் தருமம் தவறாமல் அரசுபுரியும் காலத்தில் ஒரு நாள் வேட்டையாடுவதற்காகக் காட்டிற்குச்

சென்றான். வனத்தில் நெடுநேரம் அலைந்து திரிந்து மிருக வேட்டையாடிக் கடைசியில் களைப்படைந்து, மிகவும் பரிதாபத்துடனே ஒரு முனிவரின் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அந்த ஆசிரமத்தில் ஓர் ஆசனத்தில், இடையில் மான்தோல் உடுத்து, நீண்ட தாடியும் நீண்ட சடையும் வற்றிய கபோலமும் உடைய ஒரு முனிவர், கண்களை மூடிக்கொண்டு தவம் செய்துகொண்டிருந்தார். அவரைக் கண்ட பரீக்ஷித்து கைகுவித்துக்கொண்டே அவரிடம் சென்று தாகத்திற்குத் தண்ணீர் வேண்டுமென்று கேட்டான். அவர் இந்திரிய நிக்கிரகஞ் செய்துகொண்டு சாக்கிரம், சொப்பனம், சுஷுப்தி என்கிற மூன்று அவஸ்தைகளும் இல்லாதவராய்ப் பிரமநிஷ்டையிலிருந்த படியால் அவருக்கு அரசன் கூறியது செவியிற் படவில்லை. ஆகையினால் அவர் அரசனுக்கு ஒரு மறுமொழியும் கூறாமல் இருந்தார். இதனால், அரசன் தன்னை முனிவர் அசட்டை செய்ததாகக் கருதி, சினங்கொண்டு அங்கே இறந்து கிடந்த ஒரு ஸர்ப்பத்தைக் கோல் நுனியால் எடுத்து அம்முனிவரின் கழுத்தில் போட்டுவிட்டு நகரத்திற்குத் திரும்பினான். இந்த முனிவர் இந்திரியநிக்கிரகம் செய்து நிஷ்டையில் இருக்கிறாரா அல்லது பொய்யாகச் சமாதியில் இருந்துகொண்டு, க்ஷத்திரியனாலே நமக்கு ஆகவேண்டியது என்னவென்று நினைத்திருக்கிறாரா என்று அறியவே அவன் இவ்வாறு செய்தான். செய்தானாயினும் நகரத்துக்குச் செல்லும் வழியில், "நான் பெரியவர்களுக்கு இவ்வாறு ஏன் குற்றம் செய்தேன்? இதற்காக எனக்குத் தண்டனை யில்லாமற் போகுமா? தண்டனை யிருந்தே தீரும். அவருடைய தண்டனை கிடைத்தால்தான் நான் அவருக்குச் செய்த குற்றத்தினால் உண்டான பாவம் தீர்ந்தவனாவேன்" என்று எண்ணிக் கவலையோடு அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

அரசன் சென்ற பிறகு முனிவருடைய புத்திரனுகிய சிருங்கி என்பவன் தன் தோழர்களோடு அங்கே வந்தான். தகப்பனுரின் கழுத்தில் செத்த பாம்பு இருப்பதைக் கண்டு கோபம் மிகக்கொண்டு, "இவ்வாறு செய்த கொடியவனுக்கு இதோ சாபம் கொடுக்கிறேன். என் தவப்பயனைப் பாருங்கள்" என்று கூறி, நண்பர்கள் முன்னிலையில் கவுசிகை என்னும் நதியின் ஜலத்தை ஸ்பரிசித்து, "தன் குலக்கொள்ளியாயும் என் தந்தைக்குத் துரோகியாயும் இருக்கிற இவன், இன்று முதல் ஏழுநாட்களுக்குள் தக்ஷகன் என்ற கொடிய ஸர்ப்பம் தீண்டி இறக்கக்கடவன்" என்று கடுஞ்சாபம் தந்தான்; உடனே தன் தந்தையாரிடம் வந்து அவரை நோக்கித் துக்கமடைந்து கண்ணீர்விட்டு அழுதான். அந்த அழுகுரலைக் கேட்டதும் சமீகர் என்னும் அம்முனிவர் கண்ணை விழித்துக்கொண்டு தம் தோளின்மீதிருந்த பாம்பைத் தள்ளிவிட்டு மகனை நோக்கி, "நீ ஏன் அழுகிருய்? காரணம் என்ன?" என்று கேட்டார். சிருங்கி நடந்ததை யெல்லாம் தன் தந்தையாருக்குச் சொன்னுன்.

அதைக் கேட்டதும் சமீகர் வருத்தமடைந்து, "ஆகா, என்ன காரியம் செய்தாய்? அந்தோ! பரம மூடனுக அல்லவா இருக்கிருய்? அப்பனே, நான் என்ன சொல்வேன்! ஒரு சிறு குற்றத்திற்காக நீ இவ்வளவு பெரிய தண்டனை விதித்தது என் மனத்தை வருத்துகிறது. பரீக்ஷித்து மகாராஜா தருமம் தவருத பரம புருஷன்; அவன் நரதேவன். அவனை மற்றவர்களுக்குச் சமானமாக நினைப்பது கூடாது. அவன் பெருமை பெரிது. சக்கரவர்த்தியானவன், ஜனங்கள் கண்ணுலே பார்ப்பதற்கு அரியவனுய் இருப்பானுனல், இந்த உலகமானது ரக்ஷிக்கப்படாத செம்மறியாட்டு மந்தையைப் போல் திருடர்களினுல் உபத்திரவமடைந்து ஒரு கணத்தில் நாசமாகும். அந்த

அரசன், பசிதாகத்தினால் களைப்பை அடைந்து தீனனாகி நம்முடைய ஆசிரமத்திற்கு வந்தான். அவனுக்குச் சாபம் கொடுத்தது பெருந்தவறு. அரசனே தவத்திற்கு ஆதாரமாய் இருப்பவன். அரசனில்லா ஊர் பாழ் என்பதை நீ உணராமற் போனாய். ஆலோசியாமல் சிறுபிள்ளைத் தனமாய்த் தகாத செய்கையைச் செய்துவிட்டாய்!" என்று கடிந்துகொண்டு உடனே தம் சீடர் ஒருவரை அழைத்து, அரசனிடம் போய் அவனுக்கு நேரிட்டுள்ள சாப வரலாற்றைக் கூறிவிட்டு வரும்படி ஆக்ஞாபித்தார்.

பரீக்ஷித்துக்கு இச்செய்தி தெரிந்ததும் அவன், "இது பகவானுடைய திருவருளினால் உலகப்பற்றை விரைவில் ஒழிப்பதன்பொருட்டு ஏற்பட்ட உபகாரமாகும்" என்று கருதிச் சந்தோஷமடைந்தான். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத் தியானஞ்செய்து உடனே தன் புத்திரன் ஜனமேஜயனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து அவனிடம் அரசை அன்றே ஒப்பித்தான்; பிராயோபவேசம் செய்து தேகத்தை விடுவதென நிச்சயித்து உடனே கங்கைக்கரை சென்றான்; அங்கே வடக்கு நோக்கி உட்கார்ந்து ஸ்ரீ முகுந்தனுடைய திருவடித் தியானம் செய்துகொண்டு மனத்தை வேறிடத்தில் செலுத்தாமல் மரணத்தை ஏற்றுக் கொள்ளச் சித்தமாய் இருந்தான்.

இப்படியிருக்கும் இந்த வைபவத்தைக் காணும் பொருட்டு வந்த விசுவாமித்திரர், வசிஷ்டர், சவுனகர், பிருகு, பராசரர், பரசுராமர் முதலிய மஹரிஷிகளையெல்லாம் பரீக்ஷித்து தகுந்த மரியாதைகளோடு வரவேற்றான்; அவர்களிடம் தனக்குச் சாபம் நேரிட்ட வரலாற்றைக் கூறி, "இதனைக் கடவுளின் அநுக்கிரகம் என்று கொண்டேன். இனி நான் எப்பிறவியை எடுத்தாலும், அந்தப் பிறவிகளிலெல்லாம் பெரியோர்களிடத்தில் எனக்கு விசுவாசம் இருக்கும்படி நீங்கள் அருள் புரியவேண்டும்,

கடவுளிடத்திலே பக்தி செலுத்தும் அன்பர்களிடத்தில் எனக்கு எப்போதும் அன்பிருத்தல் வேண்டும். பூததயை உண்டாகும்படியான மனம் இருக்கவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான். மகரிஷிகள், "உன் விருப்பப் படியே உனக்கு எல்லா நலனும் உண்டாகும். உன் குலத் தவர்களின் குணம் உன்னிடம் விளங்கக் காண்பதே அதற்குச் சான்ருகும். உனக்கு மரணம் வரும்வரையில் நீ தெய்வ சிந்தனை உடையவனாக இருக்கக்கடவாய். நீ பரம பதம் அடையும் சிறப்பைப் பார்த்துவிட்டே நாங்கள் இவ்விடம் விட்டுச் செல்வோம்'' என்று திருவாய்மலர்ந் தருளினர்.

பரீக்ஷித்து, "பரோபகார சிந்தை யுடையவர்களாகிய தங்களுக்கு நான் இச்சமயம் என்ன சொல்லப்போகிறேன்! உங்களுடைய வரவாலும், உங்களுடைய கருணையாலும், ஆசீர்வாதத்தாலும் நான் மகிழ்ச்சி அடைந்தேன். என் பிறவி பயன் அடைந்தது. மரணத்தை அடையப்போகும் ஒருவன் அச்சமயத்தில் செய்யவேண்டியது என்ன?'' என்று கேட்டான். மகரிஷிகள் அதைப்பற்றி ஒருவர்க் கொருவர் பலவிதமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

இச்சமயத்தில் அந்த இடத்திற்கு வியாஸ குமாரரான சுகப்பிரம்ம ரிஷி எழுந்தருளினர். அவர் பதினறு பிராயம் வாய்ந்த சிறுவராய், அழகிய திருமேனியை உடையவராய், அவதூதராய் விளங்கினர். அவரைப் பல சிறு பிள்ளைகளும் பல ஸ்திரீகளும் சூழ்ந்து பரிசாசம் முதலியன செய்து கொண்டு வந்தனர்; கல் மண் முதலியவற்றை அவர்மீது வாரி இறைத்து விளையாடினர். அவர் அதிவருணுசிரமி யாயும் பிரம்மஞானியாயும் இருந்தபடியால் பிள்ளைகளும் ஸ்திரீகளும் இவ்வாறு விளையாடுவது அவருக்குத் தெரியவில்லை.

---

## மூன்ரும் அத்தியாயம்

---

### பரீக்ஷித்துக்குச் சுகர் உபதேசம் செய்தல்

**ப**ரீக்ஷித்தினுடைய ஞான நிலையைக் கண்டு சுகப் பிரம்ம ரிஷி மகிழ்ந்து, "இவனே சிடனுகக் கொள்ளத் தக்கவன்" என்று கருதி மகிழ்ந்தார். அவர் பரீக்ஷித்தை அன்போடு பார்த்து, "ராஜனே! உன்னுடைய கேள்வி லோக ஹிதமானது. இதை எல்லா ஜனங்களும் கேட்க வேண்டும். ஜனங்கள் பணத்தில் ஆசைகொண்டு, அதைத் தேடுவதிலும், தேடி ஸம்ஸாரத்திற்குச் செலவழிப்பதிலும், இன்னும் பலவழியிலும் காலத்தைக் கழிக்கிருர்கள். நிலையற்ற சரீரத்திலும் மனைவி மக்களிடத்திலும் மிக விருப்பங்கொண்டு மரணமென்ற ஒன்று இருப்பதை அடியோடு மறந்து எல்லாவற்றையும் நியமிப்பவனுகிய ஸ்ரீ ஹரியையும் மறந்திருக்கிருர்கள். ஆகையினுல் இந்த ஸம்ஸார பயம் நீங்கவேண்டுமென்கிற விருப்பமுடையவர்கள், பகவானை எப்போதும் தியானித்து வரவேண்டும். முடிவில் நாராயணத் தியானமே சிறந்த பயனைத் தரும். அதற்கு மேலான பலன் ஒன்றுமே இல்லை. அந்த ஹரி பக்தியையும், ஹரி தாரணையையும் விளக்கிக் காட்டும் பாகவதம் என்கிற புராணத்தை உனக்குக் கூறுகிறேன்; கேட்பாயாக. இந்தப் புராணத்தை என் தந்தையாராகிய வியாஸரிடமிருந்து நான் அத்தியயனம் செய்தேன். அவரிடமிருந்து நான் கேட்டபடி இப்போது கூறுகிறேன். சிரத்தையோடு கேட்பவர்களுக்கு முகுந்தனிடத்தில் பரம பக்தி உண்டாகும்" என்ருர்.

இதைக் கேட்டதும் பரீக்ஷித்து, "நாம் இன்னும் ஏழுநாள்தானே உயிருடன் இருக்கப் போகிருேம்?

இதற்குள் நாம் என்ன செய்யமுடியும்?" என்று மனத்தில் எண்ணிச் சிறிது முகவாட்டம் அடைந்தான். இதை அறிந்த சுகப்பிரம்மரிஷி, "அரசனே! இப்பொழுதுள்ள உன் மன நிலையை உணர்ந்தேன். கவலைப்படாதே. ஸம்ஸாரத்தில் இச்சைகொண்டு தம் ஆயுளை அறியாதவர்களுக்கு வெகு காலம் இப்பூமியில் ஆயுள் இருந்தும் பயன் இல்லை. மோக்ஷமாகிற ஸம்பத்தைக் கொடுப்பதற்குக் காலம் கொஞ்சமாக இருந்தாலும் அது சிறந்ததாகும். இதைப் பற்றி முன் நடந்த கதை ஒன்று உண்டு; கேட்பாயாக" என்று சொல்லத் தொடங்கினார்.

* * *

"முன் காலத்தில் கட்வாங்கர் என்று ஓர் ராஜரிஷி இருந்தார். அவர் ஒரு சமயம் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடந்தபொழுது தேவர்களுக்குச் சகாயம் செய்தார். தேவர்கள் அவரிடம் சந்தோஷம் அடைந்து, "வேண்டிய வரத்தைப் பெற்றுக்கொள்" என்றார்கள். ராஜரிஷி, "எனக்கு என் ஆயுள் இன்னும் எவ்வளவு காலம் இருக்கிறதென்று தெரியவேண்டும். இதைத் தவிர வேறு ஒரு வரமும் எனக்கு வேண்டாம்" என்றார். அவர்கள், "இன்னும் ஒரு முகூர்த்தந்தான் உனக்கு ஆயுட்காலம் இருக்கிறது" என்று கூறினார்கள். கட்வாங்கர், 'சந்தோஷம்' என்று கூறி அவர்களிடம் விடைகொண்டு தமது தேசத்துக்கு வந்து, வெகு விரைவில் தம் ராஜ்யம் மக்கள் மனைவி எல்லோரையும் துறந்து தம் முழுமனத்தையும் ஸ்ரீ ஹரியினிடம் செலுத்தித் தாரணைசெய்து தாம் இறக்கும்வரையும் வேறு எந்த நினைவும் இல்லாமலிருந்து முத்தியை அடைந்தார். முத்தி இன்பம் ஒரு முகூர்த்த காலத்தில் கைகூடியதென்றால் உனக்கு ஏழுநாள் இருக்கும் போது ஏன் கவலைப்பட வேண்டும்? இதற்குள் நீ எவ்வளவோ சிறந்த நிலையை அடையலாமே" என்று உரைத்து அரசனைத் தேற்றிக் கூறுகிறார்:—

முடிவு காலத்தில், அதாவது சாகுந்தருணத்தில் பயத்தை விட்டுவிடவேண்டும். வைராக்கியம் என்கிற கத்தியினால், தேகத்திலும் தேகத்தைக் கட்டுப்படுத்தும் பொருள்களிலும் கொண்டிருக்கும் ஆசையை அறுக்க வேண்டும். சுத்தஜல ஸ்நானம் செய்து பரிசுத்தனாகி நல்ல ஆசனத்தில் இருந்து மூச்சை அடக்கி மனத்தைப் புத்தியினால் அடக்க வேண்டும். ஆஸன ஜயம், சுவாஸ நிரோதம், மனோ நிரோதம் இவை மூன்றும் கிட்டுமாயின், அப்பொழுது பகவானிடம் மனத்தைச் செலுத்துவது எளிதில் கைகூடும். பலவிதமான ஆராதனைகள் உண்டு. எல்லாம் பரம்பொருளாகிய ஹரியையே அடைகின்றன. ஆகையினால் மரணத்தருவாயில் ஸ்ரீ ஹரியையே தாரணை செய்யவேண்டும். ஆசனத்தையும் சுவாஸத்தையும் ஜயித்து, விஷயங்களில் சம்பந்தத்தை விட்டு ஞான கருமேந்திரியங்களையும் ஜயித்துப் புத்தியினால் மகத்தான பகவானது சொரூபத்தில் மனத்தை நிறுத்தவேண்டும். இதுவே தாரணையாகும்.

---

## நான்காம் அத்தியாயம்

——(o)——

### தாரணையின் விவரம்

தாரணை இரண்டு வகைப்படும். பகவானுடைய திருவுருவத்தைத் தியானம் செய்வது ஒருவிதமாகும். சுவாஸ நிரோதம் மனோ நிரோதம் மூலமாக அவரை அறிய முயல்வது மற்றொரு விதமாம். பகவானுடைய திருவுருவத் தியானம் இரண்டு விதமாகச் செய்யப்படுகிறது. முதலாவது அவரை இருதய குகையில் தியானிப்பது; இரண்டாவது, அவரைப் பிரபஞ்ச ரூபமாகத் தியானிப்பது.

பிரபஞ்சரூபத் தியானமாவது, ஒருவன் உலகத்தையும் உலக சராசரங்களையும் பகவானுடைய ஸ்தூல ரூபமாகப் பாவித்து யாவும் அவரே என எண்ணித் தியானிப்பது. இருதய குகையில் பகவானுடைய திருவுருவத்தைத் தியானிப்பதாவது, ஒருவன் பகவானைச் சங்குசக்கர கதாதரராயும், சதுர்புஜ முடையவராயும், தாமரை இதழ் போன்ற கண்களை உடையவராயும், திவ்விய ஆபரணங்களை அணிந்தவராயும் பாவனை செய்து தியானிப்பது.

இப்படியான இந்தத் தாரணைகளில் ஏதாவது ஒன்றன் மூலமாகப் பகவானைத் தாரணைசெய்து பழகவேண்டும். இரண்டுவிதமான தாரணைகளும் நல்ல பயனைத் தரக் கூடியனவேயாம். பகவான் பிரபஞ்சத்தினுள் அந்தர்யாமியாக இருக்கிறார்; சகல ஜீவராசிகளிலும் பகவான் விளங்குகின்றார். ஆகையினால், பகவானைப் பிரபஞ்சத்துள்ளிருக்கும் அந்தர்யாமியாகவாவது உயிர்க்குயிராய் இலங்கும் பரஞ்சோதியாகவாவது பாவனை செய்யலாம். இது மேலான கதியைத் தரும்.

சுவாஸ நிரோத மனோ நிரோதமூலமாகச் செய்யும் தாரணை சிறந்த யோகிகளாலேதான் செய்யத் தக்கது. இந்தத் தாரணை செய்து பழகுகிற பக்தன் இந்திரிய ஜயம் பெறுவான். சிறந்த தைரியசாலியாய்ச் சகல ஐசுவரியங்களும் தன்னை வந்து அடைய விளங்குவான். பிரபஞ்ச முழுவதும் அவனுக்கு அடங்கி நடக்கும். அந்தப் பக்தன் எப்போதும் ஸ்ரீ ஹரியைத் தியானிப்பவனாகவே இருப்பான். அவன் உலகப்பற்று அற்றவனாகவும், விஷய சுகங்களை மறந்தவனாகவும் இருப்பான். அவன் எல்லாவற்றையும் வெறுத்திருப்பானாதலால் அவனுக்குக் கஷ்டமே இராது. அவன் வீண்காலம் கழிக்கவே மாட்டான். சதாகாலமும் பகவானைத் தியானம் செய்துகொண்டே இருப்பான்.

இவ்வாறு பக்தி புரிந்துவரும் பக்தனுக்கு நிரதிசய ஆனந்தம் கைகூடும். பகவான் அவனைத் தன் திருவடி நிழலில் சேர்த்துக்கொள்ளத் திருவுள்ளம் கொள்ளுங் காலத்தில் அவன் தேகம் விடும் தருணம் ஏற்படும். அப்பொழுது அவனது ஜீவன் பிரம்மரந்திரத்தின் வழியே வெளிப்பட்டு எல்லா உலகங்களையும் கடந்து சென்று பகவானுடைய உலகம் போய்ப் பரமானந்தத்தை அநுபவிக்கும்.

சாகும் தருணத்தில் இருப்பவனுக்கு எந்த ஆசை உண்டாகிறதோ அந்த ஆசைக்கு ஏற்றபடி ஆராதனை செய்யவேண்டும். பிரம்மண்யத்தில் ஆசை இருந்தால் வேதத்தை ஆராதனை செய்தல் வேண்டும். இந்திரிய பலத்தில் ஆசையிருந்தால் இந்திரனை ஆராதனை செய்தல் வேண்டும். மக்கட்பேற்றில் ஆசையுண்டானால் சிருஷ்டி கர்த்தாக்களையும், சக்தி வேண்டுமானால் அக்கினியையும், பொருளில் ஆசையுண்டானால் வஸுக்களையும், அரசியலில் விருப்பமிருந்தால் வசுதேவர்களையும், பூர்ணாயுள் வேண்டு மானால் அசுவினி தேவர்களையும் ஆசிரயிக்க வேண்டும்.

இவ்வாறாக ஆசைக்குத் தக்க அதிதேவதைகளை ஆசிரயித்தலே முறையாகும். இந்த ஆராதனை செய்ப வருக்குப் பகவத்பக்தி உடையவனது நட்பு இருக்குமானால், அந்தப் பகவத்பக்தி விரைவில் கிட்டும். ஆயினும் புத்தி யுடையவன் உலகப் பற்றுக்களில் ஆசைகொண்டு விஷ்ணுபக்தியைக் கைவிடமாட்டான். ஆகையால் மோக்ஷ மடையப் பரம்பொருளினிடம் பக்தி செலுத்தித் தாரணை முதலிய தியானத்தில் அந்தப் பக்தியை விருத்தி செய்து கொள்ளவேண்டும்.

  

இங்ஙனம் சுகப்பிரம்மரிஷி கூறவே, பரீக்ஷித்து விரைவில் தனக்கு மரணம் நேரிடுமென்று தெரிந்த

ஞூலே கிருஷ்ணபகவானைத் தியானம் செய்யத் தொடங்கி ஞன்.

அப்பொழுது அவன் சகல ஆசைகளையும் துறந்து முத்தியடைய வேண்டுமென்கிற ஆசை மாத்திரம் கொண்டவனு யிருந்தான். அச்சமயம் அவன் மனத்தில், "ஒரு பந்தத்திலும் கட்டுப்படாத பரமாத்மா எவ்வாறு பிரகிருதியோடு சம்பந்தப்பட்டுப் பிரபஞ்சத்தை உண்டாக் கினர்? அவர் ஏன் அவதாரம் செய்தார்?" என்கிற சந்தேகம் தோன்றியது. அதைப்பற்றிச் சுகப்பிரம்மத்தி னிடம் வினவினுன்.

சுகப்பிரம்ம ரிஷி, உடனே பரம்பொருளைத் தியானித்து, பரீக்ஷித்தினுடைய பக்தி விசேஷத்தை நினைத்து சந்தோஷ மடைந்து கூறுகிருர் :—

"அப்பனே, சிருஷ்டி விஷயம் இரகசியம். அது மானிடர்களாலே அறிதற்கரியது. பிரம்மாவால் சிருஷ்டி உண்டாயிற்று. அந்தச் சிருஷ்டியில் தோன்றிய நாரதர் பிரம்மாவைப் பார்த்து, 'நீரே அனைத்திற்கும் ஆதிகாரணம் போலத் தோற்றுகிறீர். ஆயினும் நீர் தியானத்தில் இருக்கிறீரே; இதைக் கவனித்தால் உமக்கு மேலான பரம்பொருள் ஒன்று உண்டெனத் தெரிகிறதே' என்று கேட்டார்.

"பிரம்மா, 'எனக்கு மேலாக நாராயணர் என்னும் பரம்பொருள் ஒன்றுண்டு. அவருடைய திருவருளாலேதான் நான் இந்தச் சிருஷ்டி செய்கிறேன். அவர் குணங்குறி கடந்தவர். அவரிடம் யாவும் அடங்கிக் கிடக்கின்றன. அவர் ஜீவராசிகளினுடைய நன்மைக்காகவே சிருஷ்டியைத் தொடங்க நினைத்துக் காலம், விதி, குணங்கள் முதலிய வற்றை வெளியிட்டார். அவர் எண்ணின மாத்திரத்தில் முக்குணங்களில் ஏற்றத்தாழ்வும் சலனமும் ஏற்பட்டன.

இதனால் முறையே யாவும் உண்டாயின. முதலில் கால தத்துவத்திலிருந்து மகத் தத்துவம் உண்டாயிற்று. பின் அகங்காரம் உண்டாயிற்று. தாமஸ குணத்தால் ஆகாசம், வாயு, அக்கினி, பிருதிவி முதலியவை உண்டாயின. ராஜஸ குணத்தால் மெய், வாய் முதலியன வும், சாத்விக குணத்தால் இந்திரிய சக்திகளும் உண்டா யின. பகவானுடைய அங்கங்களிலிருந்து உலக விசித்திரங் கள் யாவும் வெளிவந்தன. நானும் அவரிடமிருந்துதான் வெளிவந்தேன். நான் அவருடைய அங்கங்களிலிருந்து ஸூக்ஷ்மமாக வெளிவந்தவற்றை ஸ்தூலமாக வெளிப் படுத்தினேன்' என்று இவ்வாறு சிருஷ்டி இரகசியத்தைக் கூறினார்.

"இப்படி சிருஷ்டிக்கப்பட்ட உலகத்தில் தருமத்திற்கு லோபம் ஏற்பட்டு அதருமம் மேம்படுங் காலத்தில் பகவான் அவதாரம் செய்கிறார். அவர் சாதுக்களை ரக்ஷிக்கிறார்; துஷ்டர்களைச் சங்கரிக்கிறார்" என்று கூறிப் பகவா னுடைய அவதார மகிமைகளையும் விளக்கியருளினார்.

பரீக்ஷித்து பின்னும் பிரபஞ்ச சிருஷ்டி விஷயமாயும், தேகம், ஆத்மா, கல்பம், திரிகாலம் இவற்றைப் பற்றியும் கேட்டான். சுகப்பிரம்மரிஷி யாவற்றையும் விவரமாய்ச் சொல்லிக்கொண்டு வந்து, "விஷ்ணுவின் மாயா வைபவங் கள் அடங்கிய பாகவதத்தைப் பிரம்மா நாரதருக்குச் சொல்ல, நாரதர் வியாஸருக்குக் கூறினார்" என்றார். பரீக்ஷித்து, பாகவத புராணத்தில் அடங்கியவை யாவையென, சுகர் இந்தப் புராணத்தில் அடங்கியவற்றை விஸ்தாரமாகச் சொன்னார். பிறகு ஸூக்ஷ்ம சிருஷ்டியை ஒருவாறு சுருக்கிச் சொல்லுகையில், "ஆதிபுருஷர் முதலில் பிரளயஜலத்தை உண்டாக்கி அதைத் தமக்கு இருப்பிட மாகக் கொண்டார். இதனாலேதான் பரம்பொருளுக்கு நாராயணன் என்னும் பெயர் உண்டாயது. சிருஷ்டி

விசித்திரம் பகவானுடைய ஸந்நிதான மாத்திரத்தில் ஏற்படுவது" என்று கூறியருளினர்.

---

## ஐந்தாம் அத்தியாயம்

—o—

### விதுரர் மைத்திரேயரை அடைவது

சுகர் பரீக்ஷித்தைப் பார்த்து, "அரசே, நீ கேட்ட கேள்விகளையெல்லாம், முன்னர் விதுரர் பூத பவிஷ்ய வர்த்தமான ஞானமுடையவரான மைத்திரேயர் என்னும் மகரிஷியைக் கேட்டிருக்கிறுர். அவற்றைச் சொல்லு கிறேன்" என்று சொல்லத் தொடங்கினர். பரீக்ஷித்து, "ஸ்வாமி, விதுரருக்கு மைத்திரேயர் இருக்கும் இடமும் அவருடைய மகிமையும் எவ்வாறு தெரிந்தன?" என்று கேட்டார். சுகர் கூறலானர்:

அரசனே, கேள்: திருதராஷ்டிரன் அதருமத்தினல் விவேகமிழந்து துஷ்டர்களான தன் மக்களை ஆதரித்தும், தன் தம்பி மக்களாகிய பாண்டவர்களைப் புறக்கணித்தும் வந்தான். பாண்டவர்களைத் துரியோதனுதியர் அரக்கு மாளிகையில் வைத்துக் கொளுத்தினர்கள். பகவானுடைய கிருபையினுல் அவர்கள் அந்த ஆபத்திலிருந்து தப்பி னர்கள். பின்பு அந்தக் கௌரவர்கள் பெரியோர்கள் நிறைந்திருந்த சபையில் திரௌபதியை மானபங்கம் செய்யத் தலைப்பட்டார்கள்; சூதிலே பாண்டவர்களை வஞ்சகமாக ஜயித்து அவர்களைப் பதின்மூன்று வருஷம் காட்டிற்குத் துரத்தினர்கள். இவற்றையெல்லாம் திருத ராஷ்டிரன் தடுக்கவில்லை. இவையன்றிப் பாண்டவர்கள் வனவாசம் கழித்து வந்து தங்களுக்குரிய பங்கைக் கேட்டபோது, துரியோதனுதியர் அதைக் கொடுக்க

மறுத்துவிட்டார்கள். இந்த அநியாயத்தையும் திருத ராஷ்டிரன் பார்த்துக்கொண்டிருந்தான். பின்பு அவன் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய பேச்சையும் கேட்கவில்லை. இதனால் விதுரர் அவனை அழைத்து, "பொறுத்தற்கரிய உம்முடைய குற்றத்தைப் பொறுத்துக்கொண்டு தருமபுத் திரர் தமக்குரிய பாகத்தைக் கேட்கிறார். அதைக் கிரமப்படி கொடுத்து விடவேண்டும். கொடுக்க மறுப்பது நீதியன்று. நீர் துரியோதனனைப் பிள்ளை யென்கிற புத்தியினால் ஆத ரிக்கிறீர். ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு விரோதியான பாப மானது, சரீரம் எடுத்துக்கொண்டு உம்முடைய வீட்டிலே வந்து வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறது. ஆகையினால் துரியன் குலநாசத்திற்குக் காரணமானவன்" என்று நற் புத்தி கூறினார். இதைக் கேட்டுக்கொண்டிருந்த துரியோ தனன், "தாசி புத்திரனும் வஞ்சகனுமாகிய இவனைச் சபைக்கு அழைத்தவர் யார்? உண்ட வீட்டிற்கு இவன் இரண்டகம் நினைக்கிறவனாயிருக்கிறான்; பகைவர்களிடம் பரிவு காட்டுகிறான். ஆகையினால் இவனை இவனிடமிருக்கும் பொருளைப் பிடுங்கிக்கொண்டு கொல்லாமல் ஊருக்கு வெளியே துரத்திவிடுங்கள்" என்று கடிந்துகொண்டான். விதுரர் இதற்காக வருந்தாமல், உடனே தம் கையிலிருந்த வில்லை ஒடித்து எறிந்துவிட்டுத் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டுவிட்டார்.

இவ்வாறு புறப்பட்ட விதுரர் நெடுகச் சென்று தீர்த்த யாத்திரை செய்துகொண்டு வருகையில் யமுனா நதிக்கரை யில் பதரிகாசிரமம் நோக்கிப் போய்க்கொண்டிருந்த பகவத் பக்தரான உத்தவஸ்வாமியைக் கண்டார். கண்டதும் இரு வரும் ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்துகொண்டு க்ஷேமம் விசாரித்துக்கொண்டனர். அப்பொழுது உத்தவர், ரிஷி சாபத்தால் யாதவர்கள் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு இறந்ததையும், முற்பிறப்பில் வாலியாக இருந்து

இப்பிறப்பில் வேடனாக வந்த ஒருவனுடைய அம்பினால் பக வான் பரமபதம் சென்றதையும் கூறினார். இதைக் கேட்ட தும், விதுரர் பெருந்துயர மடைந்து உத்தவரை நோக்கி, பகவான் உலகத்தை விட்டுப் போகும்போது சொல்லிய ரகசியங்களைத் தமக்குச் சொல்லும்படி கேட்டார். உத்த வர், "நான் பகவானுடைய ஆக்ஞைப்படி ஒரு விரதத்தை மேற்கொண்டு இப்போது பதரிகாசிரமத்திற்கு அவசர மாய்ப் போகிறேன். பகவான் பரமபதம் போகும்போது எனக்குச் சில ரகசியங்களை உபதேசித்தார். அந்தக் காலத் தில் என்னையும் உம்மையுந்தான் அவர் நினைப்பில் வைத் திருந்தார். நீர் அப்பொழுது இல்லாமையால் தாம் கூறிய உபதேசங்களை யெல்லாம் உமக்குக் கூறும்படி மைத்திரேய ருக்குப் பகவான் ஆக்ஞை செய்திருக்கிறார். மைத்திரேயர் இப்பொழுது ஹரித்துவாரத்தில் இருக்கிறார். ஆகையால் நீர் அவரிடம் போய்ச்சேரும். நான் பதரிகாசிரமம் போய் வருகிறேன்" என்று சொல்லி விடைபெற்றுக்கொண்டார். பிறகு, பதரிகாசிரமம் போய் அங்கே சமாதியினாலே ஸ்ரீ ஹரியை ஆராதித்துக்கொண் டிருந்தார். விதுரர் கங்காநதி தீரத்தில் இருந்த மைத்திரேய மகரிஷியிடம் போய்ச்சேர்ந்தார்.

---

## ஆறும் அத்தியாயம்

—o—

### விதுர மைத்திரேய ஸம்வாதம்

சீலம் தயை முதலிய குணங்கள் நிறைந்தவரும் மகா ஞானியுமாகிய மைத்திரேயரை அடைந்ததும், விதுரர் அவரைப் பணிந்து தாம் இன்னாரென்று தெரிவித்துக் கொண்டார். அவர் வீற்றிருக்கப் பணித்ததும் வீற்றிருந்து,

"ஸ்வாமி, சாதுக்கள் சுகத்தை அடைவதன் பொருட்டுக் கருமங்களைச் செய்கிறார்கள். அந்தக் கருமங்களி னாலே சுகதுக்க சாந்தி என்றும் அடைவதில்லை. அந்தக் கருமங்களினாலே பின்னும் மகத்தான துக்கமே நேரிடு கிறது. ஆகையினால் இப்படிப்பட்ட இந்த ஸம்ஸாரத்திலே எங்களுக்கு யுக்தமானதை ஆலோசித்துத் தெரிவித்தரு ளல் வேண்டும். மேலும், இந்த உலகத்தில் ஹரியினிடத் தில் பக்தியில்லாதவரும் அதரும சீலருமாகிய ஜனங்களின் அநுக்கிரகத்தின் பொருட்டு ஹரியினிடம் பரமபக்தி யுடையவர்களாகிய மகான்கள் சஞ்சரித்துக்கொண் டிருக் கிறார்கள், ஆகையினால் சுகசொரூபமான வழியை எங்களுக் குச் சொல்லியருளுங்கள். பகவான் இந்தப் பிரபஞ்சத்தை எவ்வாறு படைத்தார்? எவ்வாறு ஸ்தாபித்தார்? மச்ச கூர்மாதி அவதாரங்களினாலே கருமங்களை எவ்வாறு இயற்றியருளினார்? இவற்றை விரிவாக என்பொருட்டுத் தெரிவித்தருளல் வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

மைத்திரேயர் மனமகிழ்ச்சிகொண்டு விதுரரை அன் போடு நோக்கி, தத்துவாதிகளின் சிருஷ்டியை விவரமாகச் சொல்லியருளினார். அதைக் கேட்ட விதுரர், "ஸ்வாமி, ஒன்றோடு ஒன்று ஒட்டாத பூதங்களைக்கொண்டு பகவான் சிருஷ்டி முதலியவற்றை எவ்வாறு செய்யமுடியும்? எங்கும் பரவியிருக்கும் அவருக்குச் சிருஷ்டியால் சுக துக்கங்கள் உண்டாவானேன்?" என்று கேட்டார்.

மைத்திரேயர், "அவையெல்லாம் பகவத் மாயையினால் அவரை அணுகாமலே வெளிவருகின்றன. சொப்பனத்தில் நடப்பவை நம்மைப் பாதிப்பதில்லையல்லவா? அதுபோல் சிருஷ்டி முதலியனவும் பகவானைப் பாதிப்பதில்லை. நீர்நிலை அசையும்போது அதில் தோன்றும் சந்திர பிம்பமும் அசை வதுபோற் காணப்படும். அதைப்போல் தேகத்தினுடைய

கர்மமானது அசத்தாயிருந்தாலும், தேகத்திலே அபிமான முடைய ஜீவனுக்குச் சத்தாகக் காணப்படுவது பரமாத்மா வான ஈசுவரனுடைய குணம் அன்று. அந்த ஜீவனுக்குத் தேகத்தினுடைய குணமான ஜனன மரணம் முதலானவை, நிவர்த்திமார்க்கத்தினுலேயும் வாசுதேவரது கருணையினுலே யும் உண்டாகிற பக்தி யோகத்தினுல் ஸ்ரீ ஹரியினிடத்தில் சமஸ்த இந்திரியங்களும் சலியாமல் நிலைபெற்றிருப்பது உண்டாகும். அப்பொழுது சகல ஸம்ஸாரக் கிலேசங்களும், நித்திரையால் சகல துக்கங்களும் லயமடைவதுபோல் லய மடையும். முடிவில் ஹரிபக்தியினுல் சகல துக்கங் களினின்றும் விடுபட்டு உண்மைகளைத் தெரிந்துகொள்ள லாம்" என்று கூறினுர்.

விதுரர், "ஸ்வாமி, எனக்கு உண்டாயிருந்த சந்தேக மானது தங்களது வாக்காகிற கத்தியினுலே சேதிக்கப் பட்டது. ஜீவாத்மா பரதந்திரன் என்றும், ஈசுவரன் சுதந்திரன் என்றும் தாங்கள் கூறத் தெரிந்து கொண்டேன்" என்று கூறிப் பிறகு, "பிரம்மா உண்டாவதற்குமுன் சிருஷ்டி எப்படித் தொடங்கியது?" என்று கேட்டார்.

மைத்திரேயர், "பிரளய காலத்தில் ஆதிதேவராகிய நாராயணமூர்த்தி ஜீவாத்மா முதலிய சகல பிரபஞ் சங்களையும் தம்முள் அடக்கிக்கொண்டார். சிருஷ்டிக்க வேண்டிய காலம் வரும்போது தம்மை எழுப்பும்படி காலதத்துவத்திற்கு உத்தரவு இட்டுவிட்டு ஆதிசேஷனுகிய படுக்கையில் சயனித்துக்கொண்டு ஆயிரம் சதுர்யுகம் யோகநித்திரையில் இருந்தார். பிறகு விழித்துக்கொண்ட தும் ஜீவாத்மா முதலிய சகல பிரபஞ்சமும் தம்முள் அடங்கிக் கிடப்பதை அறிந்து அவற்றை வெளியே கொண்டுவர எண்ணினுர். அவ்வெண்ணம் உதித்ததும்

தம் மனத்தில் ஸிருஷ்டிச் செயல் முதலியவற்றை நினைத்துக் கொண்டார். அதிசூட்சுமமான அந்த இச்சையானது ரஜோகுணத்தோடு சம்பந்தப்பட்டுப் பிரபஞ்சவுற்பத்திக்குக் காரணமாகப் பகவானுடைய நாபிப்பிரதேசத்தினின்றும் வெளிவந்தது. அது காலதத்துவத்தினாலே பத்மரூபமாக நின்று பரமாத்மாவைக் காரணமாகவுடையதாய்ச் சூரியன்போல் தனது தேஜஸினாலே விஸ்தாரமான அந்த ஜலத்தைப் பிரகாசமடையச் செய்துகொண்டு விளங்கியது. அந்தப் பத்மத்திலே ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் தாமே அந்தர்யாமியாகப் பிரவேசித்தார். பிறகு அதில் சகல வேத சொரூபமான பிரம்மா உண்டானார். அந்தப் பிரம்மா கமலப் பொகுட்டிலிருந்து உலகத்தைப் பார்ப்பதன் பொருட்டு நான்கு முகங்களை அடைந்தார். அந்தக் கமலத்தையும் உலக தத்துவத்தையும் தம்முடைய ஆத்மாவையும் அறியாமல் இந்தக் கமலம் எவ்விடத்திலிருந்து உண்டாயிற்றென்று வெகுகாலம் யோசனை செய்தார். அந்தக் கமலத்தின் கொடியின் ரந்திர மார்க்கத்தினாலே ஜலத்திற்குள் தலைகீழாகப் பாதாளத்திலே போய்த் தேடினார். அதன் மூலத்தை அறியாமல் திகைத்துப் போய்ப் பிறகு மிகுந்த சிரமத்துடன் தாமரைப் பூவில் வந்து உட்கார்ந்தார்.

"பிரம்மா இவ்வாறு வந்து உட்கார்ந்ததும், பிரளய சமுத்திரத்திலிருந்து, 'தப, தப' (தபசு செய்) என்று அசரீரிவாக்கு உண்டாயிற்று. உடனே பிரம்மா முறைப்படி தவஞ்செய்யத் தொடங்கி நூறு வருஷம் தியானத்தில் இருந்தார். அப்பால் அவருக்கு ஞானம் உதித்தது. ஞானோதயமானதும், முன் தாம் தேக சிரமத்தினால் அறியக் கூடாமல் இருந்தவற்றையெல்லாம் இப்போது தம் மனவலியினால் அறிந்தார். ஆதிசேஷ சயனத்தில் பகவான் சயனித்திருப்பதையும், அவர் பிரபஞ்ச முழுவதும்

வியாபித்திருப்பதையும், அவருடைய அந்த விசுவரூபத்தில் சகல சிருஷ்டி விசித்திரங்களும் அடங்கியிருப்பதையும் கண்டு அவருடைய கல்யாண குணங்களை மன உருக்கத்தோடு துதிக்கத் தொடங்கி, சிருஷ்டித் தொழிலைக் குறைவுறாமல் செய்வதற்குரிய அறிவும் ஆற்றலும் தமக்குத் தந்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அவ்வாறே பகவான் அவருக்கு அறிவையும் ஆற்றலையும் கொடுத்தார்; பிரபஞ்ச முழுமையும் தம்முள்ளே தரிசிக்கும்படி செய்தார்; பிரபஞ்சத்துள் தமது சக்தி பரவியிருக்கும் விதத்தையும் நன்கு அறியும்பொருட்டுத் தவஞ் செய்யக் கட்டளையிட்டார்; தம்மைச் சகல ஞானங்களுக்கும் இருப்பிடமாக அடிக்கடி தியானம் செய்து அப்போதைக்கப்போது வேண்டிய சக்திகளைப் பெறும்படியும் கட்டளையிட்டார். பிரம்மா அவ்வாறே தவஞ்செய்து அறிவையும் ஆற்றலையும் அடைந்து, தவத்திலிருந்து எழுந்திருக்கையில், நாபிக்கமலமானது ஆகாய முழுவதும் அடைத்துக் கொண்டிருப்பதைக் கண்டு உலகத்தைச் சிருஷ்டிப்பதன் பொருட்டு அதனை அவர் மூன்று பாகமாகப் பிரித்தார். அது பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் என்று மூன்று உலகமாயிற்று. அவை காமிய கர்மத்தின் பலனுனபடியினல் கற்பங்கள்தோறும் உற்பத்தியையும் நாசத்தையும் உடையனவாயிருக்கும்" என்று கூறினுர்.

இவ்வாறு மைத்திரேயர் கூறியதும் விதுரர் சந்தோஷமடைந்து, "ஸ்வாமி, இந்தச் சமயத்தில் கால ரூபியான பகவானுக்கு என்ன சொரூபம்?" என்று கேட்டார். மைத்திரேயர் கூறுகிறுர்:

"விதுரரே, பிறக்கின்ற வஸ்துவினுடைய காரணங்களுக்குள்ளே கடைசியாக இருக்கின்ற அவயவத்துக்கு அவயவமாகாமலும், அநேகமாயிருந்தும் காரியாவஸ்தையை

அடையாமல் ஒன்றோடொன்று கூடாமலும் எது இருக்கிறதோ அது பரமாணுவென்று அறியத்தக்கது. இரண்டு பரமாணுக்கள் சேர்ந்து ஓர் அணுவாகிறது; மூன்று அணுக்கள், ஒரு திரிசரேணுவென்று சொல்லப்படும். மூன்று திரிசரேணு ஒரு துருதி; நூறு துருதிக்கள் ஒரு விதம்; மூன்று விதம் ஒரு லவம். மூன்று லவம் ஒரு நிமிஷம்; மூன்று நிமிஷம் ஒரு க்ஷணம்; மூன்று க்ஷணம் ஒரு காஷ்டை; பதினைந்து காஷ்டை ஒரு லகு; பதினைந்து லகு ஒரு நாடி; இரண்டு நாடி ஒரு முகூர்த்தம்; ஏழு நாடி ஒரு பிரகரம்; எட்டுப் பிரகரம் ஒரு நாள். பதினைந்து நாள் ஒரு பக்ஷம்; இரண்டு பக்ஷம் ஒரு மாதம்; இரண்டு மாதம் ஓர் ருது; ஆறு மாதம் ஓர் அயனம்; இரண்டு அயனம் ஒரு வருஷம்; நூறு வருஷம் ஒரு புருஷாயுள்; முந்நூற்றறுபது வருஷம் ஒரு தேவ வருஷம்.

"சந்திராதி கிரகங்கள், அசுவினி முதலான நக்ஷத்திரங்கள் இவற்றுடன் கூடிக்கொண்டிருக்கிற கால சக்கரத்தினாலே காலஸ்வரூபியாயும் ஈசுவரனாயும் இருக்கிற சூரியனானவன் பரமாணு முதலாக, வருஷம் முடிவாக உள்ள காலத்தினாலே [பன்னிரண்டு ராசி சொரூபமான புவன கோசத்தைச் சுற்றிக்கொண்டிருக்கிறான். அந்தக் காலம் சௌரமானம், பார்கஸ்பத்தியமானம், சாந்திரமானம் முதலிய பேதங்களினாலே ஸம்வத்ஸரமென்றும், ப்ரவத்ஸரமென்றும், இதர வத்ஸரமென்றும், அநுவத்ஸரமென்றும், வத்ஸரமென்றும் சொல்லப்படுகிறது.

"இவைகட்கெல்லாம் மேற்பட்ட காலங்களுக்கு யுகங்களென்று பெயர். யுகங்கள் கிருதயுகம், திரேதாயுகம் துவாபர யுகம், கலியுகம் என நான்கு. பன்னீராயிரம் தேவ வருஷம் ஒரு சதுர்யுகம்; அதாவது ஒரு மகாயுகம். எழுபத்தொரு மகாயுகம் ஒரு மங்வந்தரம்; பதினான்கு

மங்வந்தரம் ஒரு கற்பம்; இரண்டு கற்பம் பிரம்மாவுக்கு ஒருநாள். மூந்நூற்றறுபது நாள் பிரம்மாவுக்கு ஒரு வருஷம். நூறு வருஷம் பிரம்மாவின் ஆயுள்.

"மங்வந்தரந்தோறும் ஒரு மநு அதிபதியா யிருப்பர். மங்வந்தர முடிவில் அவாந்தரப் பிரளயம் உண்டாகும். கற்ப முடிவில் பூர்ணப் பிரளயம் உண்டாம். பூர்ணப்பிரளயத்தில் சகல லோகங்களும் அழியும். எல்லாம் அழிந்த போதிலும் பிரம்மா அழிவதில்லை. அவருடைய ஆயுள் முடிந்தவுடன் அவர் பரமாத்மாவோடு அடங்குவார். பிரம்மாவின் நூறு வருஷ ஆயுளில் பாதிக்குப் பரார்த்தம் என்று பெயர். முதல் பரார்த்தம் முடிந்தது. இப்போது நடப்பது இரண்டாவது பரார்த்தம். முதல் பரார்த்தத்தினுடைய ஆதியில் பிரம்மமென்னும் மகாகற்பத்திலே சப்தப் பிரம்மமென்றும் சொல்லுகிற பிரம்மா உண்டானர். ஹரியினுடைய நாபியிலிருந்து உலகம் உண்டானதை பாத்ம கற்பம் என்று சொல்லுவார்கள். அது பிரம்மாவுக்கு இரண்டாம்பரார்த்தமாகும். அதனுடைய ஆதியில் ஸ்ரீ ஹரியானவர் வராக அவதாரம் செய்தபடியினுல் இந்தக் கற்பத்தை வராக கற்பம் என்று சொல்வார்கள். பகவான் வெள்ளைப் பன்றியின் உருவம் கொண்டமையினுல் சுவேத வராக கற்பம் என்று இதற்குப் பெயர். சுவேத வராக கற்பத்தில், ஏழாவது மங்வந்தரத்தில், இருபத்தெட்டாவது மகாயுகத்தின் நான்காவது யுகத்தில் நாம் இப்போது இருக்கிறோம்.

"கமலத்தை மூன்று பாகமாகப் பிரித்த பிறகு பிரம்மாவானவர், முதலில் தமது சக்தியினுல் பிரம்மத்தினுடைய அப்பிரகாச ரூபமான அந்தகாரத்தையும், நான் என்கிற புத்திரூபமான மோகத்தையும், விஷய போகங்களிலே இச்சாரூபமான மகாமோகத்தையும் சிருஷ்டித்தார். பாப

ஹேதுவான இவற்றைக் கண்டு மனம் நொந்து, பிறகு பகவானுடைய ஞானத்தினாலே பரிசுத்தமான மனமடைந்து, மீண்டும் சிருஷ்டிக்கத் தொடங்கி ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்னும் நான்கு ஸந்யாஸ சிரேஷ்டர்களை உண்டாக்கினார். இவர்கள் பிரம்மாவின் மானஸபுத்திரரென்று பெயர் பெற்றனர். இவர்கள் ஸந்யாஸிகளாய் விட்டபடியால் சிருஷ்டிக்குப் பயன்படாதவர்கள் ஆயினர். இவர்கள் எல்லாவற்றையும் துறந்து தவத்துக்குச் சென்றனர். இவ்வாறு பிரம்மாவுக்குத் தம்முடைய முதல் சிருஷ்டியும் இரண்டாவது சிருஷ்டியும் பயன்படாமற்போகவே அவருக்குக் கோபம் உண்டாயிற்று. அப்போது அவருடைய புருவ மத்தியிலிருந்து ருத்திரர் உண்டானார். ருத்திரர் தமக்கு இருப்பிடத்தையும் பெயரையும் மனைவியையும் உண்டாக்கும்படி கேட்டார். பிரம்மா அவரைப் பார்த்து, 'நீ மிகவும் பரபரப்புடைய பாலகனைப் போல் அழுதபடியினால் உனக்கு ருத்திரனென்று பெயருண்டாகக்கடவது. இருதயம், இந்திரியங்கள், ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி, சூரியன், சந்திரன், தமசு இவை உனக்கு ஸ்தானங்களாகும்' என்று கூறி, ஏற்ற மனைவியர் பன்னிருவரையும் உண்டாக்கி யருளினார். அவர் கோபத்தில் உண்டானவ ராகையினால் எல்லாவற்றையும் அழிக்கத் தொடங்கினார். ஆகையினால் பிரம்மா அவரைத் தவம் செய்யப் போகும்படி அனுப்பிவிட்டார். பிறகு பிரம்மா லோக சிருஷ்டிக்குக் காரணர்களான மரீசி, அத்திரி, ஆங்கிரசு, புலஸ்தியர், புலகர், கிருது, பிருகு, வசிஷ்டர், தக்ஷர், நாரதர் என்னும் இந்தப் பதின்மரையும் உண்டாக்கினார். நாரதர் பிரம்மாவின் மடியினின்று பிறந்தார். தக்ஷப் பிரஜாபதி கட்டை விரலினின்று பிறந்தார். வசிஷ்டர் பிராணனினின்று பிறந்தார். புலஸ்திய ரிஷி செவியிலிருந்து பிறந்தார். ஆங்கிரசு முகத்தினின்றும்

பிறந்தார். அத்திரி மஹரிஷி நேத்திரத்திலிருந்து பிறந்தார். மரீசி மனத்தினின்று பிறந்தார். ஸ்ரீமந் நாராயணர் பிரஸன்னமாயிருக்கிற தர்மமானது பிரம்மாவினுடைய வலது மார்பிலிருந்து உண்டாயிற்று. முதுகிலிருந்து அநீதியையும், மார்பின் புறத்திலிருந்து காமத்தையும், புருவத்தின் நடுவிலிருந்து கோபத்தையும், உதட்டிலிருந்து லோபத்தையும், தமது நிழலிலிருந்து கர்த்தமரையும் சிருஷ்டித்தார். விசுவகர்த்தாவாகிய அந்தப் பிரம்மாவினுடைய தேகத்திலிருந்தும் மனத்திலிருந்தும் இந்தப் பிரபஞ்சமானது இவ்வாறு உண்டாகியது.

"அப்பால் பிரம்மா தம்மிடமிருந்து உண்டான ஸரஸ்வதி என்னும் அழகிய பெண்ணை விவாகம் செய்து கொள்வது முறையன்று என்று மரீசி முதலியவர்கள் பிரம்மாவைப் பார்த்துச் சொன்னார்கள். பிரம்மா உடனே அந்தச் சரீரத்தை விட்டுப் புகையாக மாறிப் பின்பு வெளி வந்து அந்த ஸரஸ்வதியைத் தம் நாவில் வைத்துக் கொண்டார். பிறகு பழையபடி சிருஷ்டியைச் சிந்திக்கையில் அவருடைய நான்கு முகத்தினின்றும் நான்கு வேதங்கள் உண்டாயின. பிரம்மா சிருஷ்டித்த மரீசி முதலியவர்கள் சிருஷ்டித் தொழிலைச் செவ்வையாய் நடத்தவில்லை. அதனால் பிரம்மா மனம் வருந்தி, இனி என்ன செய்வதென்கிற ஆலோசனைக்கு உள்ளானார். அப்பொழுது அவருடைய தேகம் இரண்டாகப் பிரிந்தது. அவற்றிலிருந்து ஆணொன்றும் பெண்ணொன்றுமாக இரண்டு சிசுக்கள் உண்டாயின. அச்சிசுக்களிலே புருஷ சிசுவானது திரிலோகாதிபதியான சுவாயம்பு மநுவாயிற்று, பெண் சிசுவானது சதரூபை யென்று பெயர்பெற்று அந்த மநுவுக்கு மனைவியாயிற்று. பிறகு ஸ்திரீ புருஷரது தருமத்தினால் பிரஜைகள் விருத்தி யாயினர். இவ்வாறானபின் பிரம்மாவானவர், சுவாயம்பு மநுவைப் பார்த்து, "நீ உனக்குச் சமானமான புத்திரர்களை

விருத்திசெய்துகொண்டு பூமியைத் தருமமார்க்கத்தில் பரிபாலனம் செய்துவா. பிரஜைகளைப் பரிபாலிக்கும் உன்னிடம் ரிஷீகேசராகிய பகவான் பிரஸந்நராய் இருப்பார்" என்று கூறினர். மநு அவரைப் பார்த்து, "உம்முடைய ஆணைப்படியே நடக்கிறேன். எனக்கும் பிரஜைகளுக்கும் இருப்பிடத்தைக் காட்டியருளும். சகல பிராணிகளுக்கும் இருப்பிடமான பூமி, பிரளயகால ஜலத்தில் மூழ்கியிருக்கிறதன்றோ? அதை எழுப்புவதற்குரிய முயற்சி செய்ய வேண்டும்" என்றான்.

அதைக் கேட்டதும் பிரம்மா, "இந்தப் பூமியை எப்படி உத்தாரணம் பண்ணுவது?" என்கிற கவலை கொண்டு ஸ்ரீ ஹரியைத் தியானம் பண்ணினர். அப்பொழுது அவருடைய மூக்கிலிருந்து அங்குஷ்டப் பிரமாண உருவுடையவராக சிசுவொன்று வெளிவந்து ஒரு க்ஷணநேரத்தில் பெரிய யானையளவாக விருத்தியடைந்தது.

"இவ்வாறு தோன்றிய வராகத்தைப் பார்த்துப் பிரம்மா முதலியவர்கள், 'இது என்ன?' என்று மயங்கி நின்றார்கள். அப்பொழுது அந்த வராகம் ஒரு தரம் உறுமியது. அதனால், அந்த வராகத்தைப் பகவானுடைய அவதாரமென்று கண்டுகொண்டு எல்லோரும் நான்கு வேதங்களினால் துதித்தனர். உடனே பகவான், 'ஹிரண்யாக்ஷன் என்கிற ஓர் அசுரன் பூமியைக் கடலில் மறைத்திருக்கிறான். அவனைச் சங்கரித்து பூமியைக் கொண்டு வருவேன்' என்று கூறிக் கடலில் பிரவேசித்தார். அங்கிருந்த அசுரனைக் கண்டுபிடித்து அவனோடு போர்புரிந்து அவனைச் சங்கரித்துப் பூமியைத் தம்முடைய பற்களிலே ஏந்திக் கொண்டு வெளியே வந்தார். தேவர்கள் எல்லோரும் கண்டு வியப்படைந்து பகவானைத் துதித்தார்கள். பகவான் சந்தோஷமடைந்து பூமியை ஜலத்தின்மேல் வைத்துவிட்டு மறைந்தருளினர்."

## ஏழாம் அத்தியாயம்

—(o)—

### ஹிரண்யாக்ஷனுடைய வரலாறு

மைத்திரேயர் இவ்வாறு கூறியதும் விதுரர் ஹிரண்யாக்ஷனுடைய வரலாற்றைக் கூறியருள வேண்டுமென்று பிரார்த்தித்தார். மைத்திரேயர் கூறுகிறார்:—

வைகுண்டத்தில் பகவானுடைய ஸந்நிதானத்தில் ஜய விஜயர்களென்கிற இரண்டு துவாரபாலகர் உண்டு. அவர்கள் பகவானுக்குக் கைங்கரியம் செய்துகொண் டிருப்பவர்கள். இப்படி அவர்கள் கைங்கரியம் செய்துகொண் டிருக்கும்பொழுது ஒரு நாள் பிரம்மாவினுடைய மானஸ புத்திரர்களாகிய ஸநகாதிகள் நால்வரும் பகவானைத் தரிசிக்க வைகுண்டம் வந்தனர். அவர்களைத் துவாரபாலகர்களான அவர்கள் இருவரும் மதிக்கவில்லை; உள்ளே செல்வதற்கும் விடவில்லை. இதனால் கோபமடைந்த ஸநகாதி யோகிகள், அவ்விருவரையும் அசுரர்களாகப் பிறக்கும்படி சாபம் கொடுத்தார்கள். சாபத்தைக் கேட்டதும் ஜயவிஜயர்கள் பயந்து ஸநகாதியோகிகளைப் பார்த்து, "இறுமாப்படைந்த எங்களுக்கு ஏற்ற தண்டனை கிடைத்தது. எங்களுக்கு எப்பிறவி உண்டானபோதிலும் நாங்கள் பகவானை மறவாதிருக்கும்படி அநுக்கிரகம் செய்தல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர். அப்பொழுது பகவான் அவர்களுக்கு எதிரே தோன்றி அவர்களைப் பார்த்து, "உங்களுடைய நடத்தைக்குத் தக்க தண்டனை கிடைத்தது. ஆயினும் உங்கள் விருப்பப்படி, நீங்கள் எடுக்கப்போகும் பிறவியில் என் ஞாபகம் உங்களுக்கு இருக்கும்" என்று கூறி மறைந்தருளினர்.

இந்த வரலாறு இவ்வாறு நடந்தபின், ஒரு நாள் மாலைப்பொழுதில், காசிபர் ஸந்தியா வந்தனம் செய்யப் போனார். அப்பொழுது திதியென்பவள், தான் ஒரு புத்திரனை அடைய விரும்பிக் காசியப ரிஷியிடம் போய்த் தன் விருப்பத்தைத் தெரிவித்தாள். காசியபர், "அதற்கு இது சமயமன்று. இப்பொழுது உன் விருப்பத்திற்கு இணங்கினால் உனக்குக் கொடிய பிள்ளைகளே பிறப்பார்கள்" என்றார். திதிதேவி தன் விருப்பத்தை அப்பொழுதே நிறைவேற்றவேண்டுமென்று பிடிவாதம் செய்தாள். அவர் உடனே அவள் விருப்பம் நிறைவேற அநுக்கிரகம் செய்தனர். பிறகு திதிதேவிக்குத் தன்னுடைய பிடிவாத குணத்தின் பயன் விளங்கியது. அதனால் மிகவும் துக்கமடைந்தாள். காசியபர் அவளைப் பார்த்து, "நீ வருந்திப் பயன் இல்லை. உன் பிள்ளைகள் கொடியவர்களாகத்தான் இருப்பார்கள். ஆனால் உன்னுடைய பேரன் ஒருவன் மாத்திரம் மகாத்மாவாக விளங்குவான்" என்று திருவாய்மலர்ந்தருளினார். பிறகு திதிதேவிக்கு, ஜயவிஜயர்களே ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு என்ற புத்திரர்களாகப் பிறந்தார்கள். இவ்வசுரர்கள் பிறந்தபோது ஆகாசத்திலும் பூமியிலும் சுவர்க்கத்திலும் எல்லா உலகங்களிலும் பயங்கரமான உற்பாதங்கள் தோன்றின. பருவதங்களுடன் கூடிய பூமி நடுங்கியது. குறைக்கொள்ளிகளோடு கூடிய இடிகள் விழுந்தன. தூமகேதுக்கள் தோன்றின. பிரசண்டமாருதம் வீசிற்று. புழுதி கிளம்பி, பூமியும் ஆகாசமும் காணமுடியாதபடி மூடிக்கொண்டது. கடல் கொந்தளித்தது. பெண் நரிகளானவை அமங்களமாக ஊளையிட்டன. நாய்கள் கழுத்தை உயரத் தூக்கிக்கொண்டு பாடுகிறவை போலவும், அழுகிறவை போலவும் நான்கு திக்குகளிலும் போய்க் குலைத்தன. கழுதைகளும் குதிரைகளும் குளம்புகளாலே பூமியைக் கீறிக்கொண்டு கூட்டம் கூட்டமாக

ஓடின. பசுக்கள் பாலுக்குப் பதிலாக இரத்தத்தைக் கறந்தன. இவ்வாறு பலவாறான உற்பாதங்கள் உண்டாகவே ஜனங்கள் பயந்து பிரளயம் வந்ததோவென்று எண்ணினார்கள். தேவர்களெல்லோரும் பயந்தார்கள். தேவர்களை அசுரர்கள் துன்புறுத்தத் தொடங்கினார்கள். கடைசியில் புருஷோத்தமரான ஸ்ரீஹரியையே அசுரர்கள் யுத்தத்திற்கு அழைத்தார்கள். அதற்கு இணங்கிப் பகவான் வராகாவதாரம் எடுத்து ஹிரண்யாக்ஷன் மறைத்த பூமியைக் கடலிலிருந்து கொண்டுவந்து அவனையும் கொன்றார்.

பகவான் பூமியை இவ்வாறு வெளியில் கொண்டுவந்த பிறகு, பூமியில் மநு தம் அரசை ஸ்தாபித்து அரசுபுரிந்து வந்தார். அவருடைய பெண் தேவஹூதி யென்பவளைக் கர்த்தமருக்கு மணஞ்செய்துகொடுத்தார், கர்த்தமருக்குத் தேவஹூதி வேண்டிய பணிவிடைகள் புரிந்துவந்தாள். கர்த்தமர் அரிய தவம் செய்துகொண்டிருந்தார். தேவஹூதி தன் கணவருக்கு இனிய பணிவிடை செய்துவந்தமையினால் அவர் மனமகிழ்ச்சி அடைந்து அவளுக்கு அநுக்கிரகஞ் செய்யத் திருவுளங்கொண்டு அவள் விருப்பப்படி அவளோடு வாழ்ந்துவந்தார்.

தேவஹூதிக்கு ஒன்பது பெண்களும் ஒரு பிள்ளையும் பிறந்தனர். அந்தப் பெண்களுக்கு முறையே கலை, அநஸூயை, சிரத்தை, கதி, கிரியாதி, யாதி, அருந்ததி, சாந்தி, ஹவிர்த்து என்று பெயரிட்டனர். அவர்கள் ஒன்பது பேரையும் மரீசி, அத்திரி, ஆங்கிரசு, புலகர், கிரது, பிருகு, வஸிஷ்டர், புலக்ஷர், புலஸ்தியர் ஆகிய இவ்வொன்பது பேருக்கும் மணம் செய்துகொடுத்தார்கள். பிறகு தேவஹூதி தேவியினிடம் பகவான் கபிலராக அவதாரம் செய்தார். கர்த்தமர் கபிலரைப் பகவானுடைய அவதாரமென்று அறிந்து அவரைப் பணிந்து விடைபெற்றுத் தவம்

புரியச் சென்ருர். கபிலர் தம் தாயாகிய தேவஹூதி தேவிக்கு ஞானோபதேசம் செய்யவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு, பிந்து ஸரஸிலேயே வாசஞ் செய்துகொண்டிருந்தார்.

அப்பால் ஒரு சமயம் தேவஹூதி, கபிலரிடம் தன் மனத்திற்கொண்ட எண்ணத்தைத் தெரிவித்தாள். கபிலர், கருணையோடு ஸாங்கியம், பக்தியோகம் முதலியவைகளின் இரகசியங்களைத் தேவஹூதிக்கு விளக்கியருளினர். பகவானிடம் இவ்வாறு ஞானோபதேசம்பெற்ற தேவஹூதி உபதேசவழியிலே நின்று, முடிவில் பரமபதத்தை அடைந்தாள். பிறகு கபிலர் சித்தாசிரமத்திலிருந்து புறப்பட்டு வடக்குத் திக்கை நோக்கிச் சென்ருர்; அதன்பின் லோக ஹிதத்தின் பொருட்டுப் பாதாள உலகஞ்சென்று தவம் இயற்றுவாரானர். அவர் இன்னமும் அவ்வாறே தவம் புரிந்துகொண்டிருப்பதாகச் சொல்லுகிருர்கள்.

---

## எட்டாம் அத்தியாயம்

——(o)——

### ஸ்வாயம்புவ மநுவின் வம்ச வரலாறு

**வி**துரர் கேட்க, மைத்திரேயர் கூறுகிருர் :— ஸ்வாயம்புவ மநுவுக்குச் சதரூபையினிடத்தில் ஆகூதி, தேவஹூதி, பிரசூதி என்று மூன்று பெண்களும், இரண்டு பிள்ளைகளும் பிறந்தார்கள். ஆகூதியை ருசி யென்பவர் விவாகம் செய்துகொண்டு பிரம்ம தேஜஸுடன்கூடிய மிதுனமென்கிற ஸ்திரீ புருஷர்களை ஈசுவரத் தியானத்தினலே உண்டாக்கினர். மநுவும், தேவர்களும், மநுவின் மக்களும், இந்திரனும், ரிஷிகளும், ஹரியினுடைய அம்சாவதாரமும் ஆக இவ்வாறும்

கூடிய காலமே மன்வந்தரமென்று சொல்வது. ப்ரியவிரதன், உத்தானபாதன் என்னும் இரண்டு புத்திரர்கள் மநுவுக்குப் பிறந்தார்கள். கர்த்தமப் பிரஜாபதியினுடைய பெண்ணான கலையென்பவள் மரீசி மகரிஷியினிடம் காசிபர் பூர்ணிமாவென்று இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அந்தப் பூர்ணிமாவானவர், விந்தை, விசுவகா, தேவகுல்யா என்று மூன்று பெண்களைப் பெற்றார். அத்திரியின் மனைவியான அநசூயை என்பவள் தத்தாத்ரேயர், துருவாசர், சந்திரன் என்று மூன்று பிள்ளைகளை முறையே விஷ்ணு ருத்திர பிரம்மாக்களினுடைய அம்சங்களினாலே பெற்றாள். சிரத்தையென்கிற அங்கிரசனுடைய மனைவி சினிவாலி என்றும் குகூவென்றும் ராகாவென்றும் அநுமதியென்றும் நான்கு பெண்களையும், உசகத்யர் பிரஹஸ்பதி யென்ற இரண்டு பிள்ளைகளையும் பெற்றாள்.

புலஸ்தியர், அவிர்ப்பூ என்கிற மனைவியிடத்தில் அகஸ்தியர், விசிரவசு என்பவர்களைப் பெற்றார். விசிரவசு இளிபிலை யென்கிற ஸ்திரீயிடத்தில் குபேரனையும், கேசினி யென்கிற ஸ்திரீயிடத்தில் ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் என்பவர்களையும் பெற்றார். புலகர் கெதி யென்பவளிடம் கர்மசேடனென்றும் வரியானென்றும் சிகிஷ்ணுவென்றும் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். கிருதுவின் மனைவியான கிருது என்பவள் வாலகில்யர் என்கிற அறுபதினாயிரம் பிள்ளைகளைப் பெற்றாள். வசிஷ்டருக்கு அருந்ததியிடத்தில் சக்தி முதலான பிள்ளைகள் உதித்தார்கள்; ஊரசை யென்கிற மற்றொரு மனைவியிடத்தில் சித்திரகேது, சுரேரசி, விரசன், மித்திரன், உப்பணன், வசுபிரத்தியான், தியுமான் என ஏழு ரிஷிகள் பிறந்தார்கள். அதர்வாவின் மனைவியான சாந்தியானவள் தத்தியங்கு என்னும் பிள்ளையைப் பெற்றாள். பிருகுவானவர் கியாதி என்கிற மனையாளிடம்

தாதா, விதாதா என்றிரண்டு பிள்ளைகளையும், பார்க்கவி என்கிற லக்ஷ்மியையும் பெற்றார். மேரு, ஆயதி, நியதி என இரண்டு பெண்களைத் தாதா விதாதா என்பவர்களுக்குக் கொடுத்தான். இவர்களுக்கு மிருகண்டு வென்றும், பிராண னென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். மிருகண்டுவுக்கு மார்க்கண்டேயரும், பிராணனிடத்தில் வேத சிரசு என்கிற ரிஷியும் பிறந்தார்கள். வேதசிரசு என்பவர்க்கு, உசனசு, பார்க்கவர் என இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். உசனசுக்குச் சுக்கிராச்சாரியர் புத்திரரானார்.

பிரம்மகுமாரரான தக்ஷப்பிரஜாபதி மநுவினுடைய பெண்ணான பிரசூதியை விவாகம் செய்துகொண்டு பதினாறு பெண்களைப் பெற்றார்; யமனுக்குப் பதின்மூன்று பெண்களைக் கொடுத்தார்; அக்கினிக்கு ஒரு பெண்ணைக் கொடுத்தார். பிதிர்த் தேவதைகளுக்கெல்லாம் ஒரு பெண்ணைக் கொடுத்தார். பவனென்கிற ருத்திரனுக்கு ஒரு பெண்ணைக் கொடுத்தார். யமதர்மனுக்குக் கொடுத்த பெண்களில் மூர்த்தி யென்பவள் நரநாராயணர் என்னும் ரிஷிகளைப் பெற்றார். இவர்கள் விஷ்ணுவின் அம்சமுடைய வர்களாகையினால் இவர்கள் அவதரித்த காலத்தில், சத்புருஷர்களுடைய மனமும் திக்குகளும் நதிகளும் தெளிவடைந்தன. ஆகாயத்திலே வாத்தியங்கள் முழங்கின. பூமியிலே புஷ்பமாரி பொழிந்தது. முனிவர்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். கந்தருவரும் கின்னரரும் கானம் பண்ணினார்கள். தேவஸ்திரீகள் நர்த்தனம் பண்ணினார்கள். அந்த நரநாராயண ரிஷிகள் கந்தமாதன பர்வதத்தை அடைந்தார்கள். பகவதம்ச பூதர்களான அவர்களே இந்தப் புவியில் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலன நிமித்தம் யதுகுலத்திலும் குருகுலத்திலும் கிருஷ்ணார்ச்சுனராக அவதரித்தனர்.

தக்ஷனுடைய பெண்களிலே சதியானவள் சிவபிரானிடம் அந்நியோந்யமா யிருந்தும் அவருக்கும் தக்ஷனுக்கும் ஏற்பட்ட விரோதத்தினால் மனவருத்தமுற்றுத் தன் தேகத்தை யோக சக்தியினாலே ஒழித்துக்கொண்டாள்.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

---

### தக்ஷ யாகம்

இவ்வாறு மைத்திரேயர் கூறியதும் விதுரர் "சிவபிரானுக்கும் தக்ஷனுக்கும் விரோதம் வரக் காரணமென்ன?" என்று கேட்டார். மைத்திரேயர் கூறுகிறார்:—

பூர்வம், விசுவகர்த்தாக்களான பிரஜாபதிகள் ஒரு யாகம் செய்தார்கள். அந்த யாகத்திற்குத் திரிமூர்த்திகளும் மஹரிஷிகளும் தேவர்களும் பிராம்மணர்களும் வந்திருந்தனர். அந்தச் சபைக்குத் தக்ஷன் வந்தான். அவனைக் கண்டதும் பிரம்மாவையும் சிவபிரானையும் தவிர மற்றவர்கள் எல்லோரும் எழுந்திருந்தார்கள்.

தக்ஷன் பிரம்மாவைப் பணிந்து ஆசனத்திலே அமர்ந்து தனக்கு மரியாதை செய்யாத சிவபெருமானைக் குரூரமாகப் பார்த்து, பிறகு உமையை நோக்கி, "இவன் லோகபாலகர்களுக்குள் ஒருவன்; வெட்கம் கெட்டவன்; சதாசார சூனியன்; நல்ல வழியை விட்டவன்; அகங்காரம் கொண்டவன்; மரியாதை இல்லாதவன்; இவனுக்கு நான் பெண்ணைக் கொடுத்தேன். இவன் சுடுகாட்டிலே பூத கணங்கள் சூழ நின்று ஸ்மசான பஸ்மோத்தூளனம் செய்துகொண்டு ஆடுகிறவன். எலும்பு மாலையை ஆபரணமாகக் கொண்டவன். இந்த இழிஞன், மரியாதைக்குரியவ

ளுகிய என்னை அவமதித்தான். ஆதலினால் யாகத்தில் இவன் ஹவிர்ப்பாகம் அடையாமற் போகக்கடவன்" என்று சாபம் கொடுத்து உடனே அந்தச் சபையிலிருந்து எழுந்து போனான்.

இந்தச் சாபத்தைச் சிவபெருமான் பொருட்படுத்தவே இல்லை. அவருடைய தொண்டர்களுள் சிறந்தவரான நந்திகேசுவரர், "இந்தத் தக்ஷன் ஞான சூனியனாயும் பேத திருஷ்டி யுடையவனாயும் அறிவீனனாயும் கர்ம மார்க்கத்தையே அனுஷ்டிப்பவனாயும் பசுவுக்குச் சமானனாயும் இருக்கக்கடவன். இவனுக்கு ஆட்டுமுகம் உண்டாகக் கடவது. இவன் சாபத்தைக் கேட்டுச் சந்தோஷித்தவர்கள் அஞ்ஞானம் நீங்காதவர்களாயும், பணந்தேடுவதிலும் விஷய சுகங்களிலும் உழல்பவர்களாயும் யாசகர்களாயும் திரியக்கடவர்" என்று சாபம் கொடுத்தார். இந்தச் சாபத்தைக் கேட்டதும் பிருகு மகரிஷியானவர் கோபங் கொண்டு, "சிவனை வழிபடும் தொண்டர்க ளெல்லோரும் பாஷண்டிகளாயும் சாஸ்திர மார்க்க விரோதிகளாயும் குடியர்களாயும் உழலக்கடவர்" என்று சாபம் தந்தனர். இந்தச் சாபத்தைக் கேட்டதும் சிவபெருமான் அந்தச் சபையை விட்டு ஒன்றும் பேசாமல் புறப்பட்டுத் தம் இருப்பிடம் சென்றனர்.

இந்த வழக்கு இவ்வாறு முடிந்திருக்கையில் பிரம்மாவானவர் தக்ஷனைப் பிரஜாபதிக்கெல்லாம் அதிபதியாக்கினார். இதனால் அவன் இறுமாப்புக் கொண்டான். பிறகு பரமசிவத்தினிடங்கொண்ட துவேஷமும் அதிகரித்தது. அதனால் பரமசிவத்தையும் பிரம்ம சிரேஷ்டர்களையும் திரஸ்கரித்து வாஜபேயம் என்கிற யாகத்தைச் செய்தான். அந்த யாகத்தில் சிவபிரானுக்கு ஹவிர்ப்பாகம் கொடுக்கவில்லை. அவரை அழைக்கவுமில்லை. இதற்குப்பின் 'பிரஹஸ்பதி யக்ஞம்' என்கிற உத்தமமான யாகமொன்று

செய்யத் தொடங்கினான், அந்த யாகத்திற்குப் பரமசிவத்தைத்தவிர மற்ற யாவரையும் அழைத்திருந்தான். அது பெரிய யாகமாதலால் சகல லோகங்களிலிருந்தும் எல்லோரும் புறப்பட்டுப் போனார்கள். இதைக் கைலாய மலையிலிருந்து பார்த்த ஸதி, தன் கணவரிடம் சென்று தன்னையும் அந்த யாகத்திற்கு அனுப்ப உத்தரவுகேட்டாள். சிவபெருமான், "உன் தந்தை நம்மை அழைக்கவில்லை. அழையாதவனுடைய யாகத்திற்கு நீ போவது சரியல்ல. தவிர இவன் என்னிடம் கடுங்கோபம் கொண்டிருக்கிறான். ஆகையினால் நீ இப்போது போனால் உனக்கு அவமானமே நேரிடும். நீ போகவேண்டாம்" என்று சொன்னார். தேவி, தன் தந்தையைப் பார்க்க வேண்டுமென்கிற ஆவலினால் சிவபெருமான் சொன்னவைகளைக் கவனியாமல், மனம் வேறுபட்டுப் பெரும் வருத்தத்தோடு கண் கலங்கி நின்றாள். இதைக்கண்ட சிவபெருமான், "இவளுடைய பேதைமையை என்னென்பது? இவளை நான் இப்பொழுது போக வேண்டாமென்று தடுத்தால் தந்தையினிடத்துள்ள அன்பால் இங்கேயே சரீரத் தியாகம் செய்துகொள்வாள். இரண்டு விதத்திலும் தொந்தரவாக இருக்கிறது" என்று எண்ணினார்.

இந்தச் சமயம் தேவி கோபங்கொண்டு தன் தந்தையிடம் போகப் புறப்பட்டாள். சிவபெருமான் ஒன்றும் சொல்லாமல் இருந்துவிட்டார்.

இவ்வாறு தனியே புறப்பட்ட தேவியைக் கண்ட நந்திதேவர், சில பூதகணங்களுடன் சென்று தேவியை விருஷபத்தின்மீது ஏற்றி வைத்துக்கொண்டு தக்ஷனுடைய யாகசாலைக்குப் போனார். தேவி அங்கே கோலாகலமாக யாகம் நடந்துகொண்டிருப்பதைக் கண்டாள். ஆனால் அங்கிருந்தவர் ஒருவரும், தக்ஷனிடம் கொண்ட பயத்தினால்

தேவியை லக்ஷியம் செய்யவில்லை. அதையறிந்த தேவி உடனே அங்கிருந்து புறப்பட்டு மாதர்கள் இருக்குமிடம் சென்ருள். அங்கே தேவியின் அன்னையும் சகோதரிகளும் சந்தோஷத்தோடு தேவியை வரவேற்றுத் தழுவிக் கொண்டார்கள். இவர்களைத் தவிர மற்ருெருவரும் தக்ஷனிடம் கொண்ட பயத்தினுல் தேவியை ஆதரித்து வரவேற்கவில்லை. அவளுடைய தந்தையும் கவனியாமல் இருந்துவிட்டான். என்ன செய்வாள் தேவி? தன் நாயகர் சொன்ன மொழிகள் அப்பொழுது அவள் நினைவிற்கு வந்தன. அவருடைய பேச்சைக் கேளாமல் புறப்பட்டுவந்த தன்னை நொந்துகொண்டாள். "அந்தோ! எனக்கு இதைவிட அவமானம் வேண்டுமா?" என்று கருதித் துயரமுற்று, தன் தந்தையின் ஆணவத்தை வெறுத்து, "என்ன தைரியம் இவனுக்கு? தேவதேவரும் பிரபுவுமாகிய சிவபெருமானிடம் துவேஷங்கொண்ட இவன் தப்புவானு? இந்த யாகத்தில் என் நாதருக்கு ஹவிர்ப்பாகமும் இல்லா திருக்கிறது. இவன் கெட்டான். இவனுக்குப் பெண் என்கிற என்னுடைய இந்தத் தேகத்தையும் நான் சுமந்து கொண்டிருப்பதா! இதோ விடுகிறேன்" என்று கூறி யோகாப்பியாசம் செய்து அதனுல் உண்டான தீயில் அந்த யாகசாலையில் இருப்பவர் முன்பு பிரவேசித்துத் தேகத் தியாகம் செய்தாள்.

இதைப் பார்த்த சபையோர்கள் தக்ஷனைப் பழித்தார்கள். ஸதியோடு வந்த பூதகணங்கள் தக்ஷ யாகத்தை அழிக்கத் தொடங்கின. அதைக் கண்ட பிருகு முனிவர் யாகத்தை ரக்ஷிக்கத் தக்ஷிணுக்கினியில் ஆகுதி செய்தார். அதிலிருந்து அநேகம் பேர் உண்டாகிப் பூத கணங்களை எதிர்த்துத் துரத்தினர்.

இங்கே நடந்த இந்த விஷயத்தை நாரதர் பரம சிவத்துக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டதும் பரமசிவம்

னங்கொண்டு பூமியில் உதைத்தார்; தமது ரோமத்தி லொன்றைப் பிடுங்கிக் கீழே எறிந்தார்; கர்ஜித்தார். அப்பொழுது அதிலிருந்து அகோர வீரபத்திரர் தோன்றினர். அவர் கோர ரூபமும் சிறந்த பலமும் வாய்ந்தவராய் விளங்கினர். பரமசிவம், தக்ஷனுடைய யாகத்தை அழித்துவரும்படி ஆக்ஞையிட்டு அனுப்பினர்.

வீரபத்திரர் உடனே பூதகணங்களோடு சென்று தக்ஷனுடைய யாகசாலையிற் புகுந்து வீரகர்ஜனை செய்து கொண்டு அதை அழித்தார். பரமசிவத்தினிடம் அகாரணமாகத் துவேஷங்கொண்ட பிருகு முனிவரின் தலைமயிரையும் மீசையையும் பிடுங்கி வீரபத்திரர் அவரை அவமதித்தார்; கொடியவனாகிய தக்ஷனுடைய தலையை அறுத்து ஹோமாக்கினியில் போட்டார். இன்னும் அங்கிருந்த சிவத்துவேஷிகளையும் அவமதித்துவிட்டு வீரபத்திரர் கைலாயம் போனர்.

இவ்வாறு தக்ஷனுடைய யாகம் அழியவே, தேவர்கள் எல்லோரும் பிரம்மாவை முன்னிட்டுக்கொண்டு பரம சிவத்திடம் போய் வணங்கித் துதித்துத் தக்ஷனுடைய யாகத்தைப் பூர்த்திசெய்தருளும்படி வேண்டிக்கொண் டார்கள். சிவபெருமான் தேவர்களிடம் இரக்கம் கொண்டார். தக்ஷனுக்கு ஆட்டின் தலையுண்டாக்கி அவனை எழுப்பினர்; பிருகு முனிவர்க்கு ஆட்டின் தாடியை உண்டாக்கினர். மற்றச் சிவத் துவேஷிகளுக்கு இவ்வாறே இழிவான அடையாளங்கள் உண்டாகும்படி செய்தார்; பிறகு தேவர்களோடு யாகசாலைக்குச் சென்றார்.

இப்போது புத்திவந்த தக்ஷன் பரமசிவத்தைக் கண்டதும் சமகமென்னும் மந்திரத்தால் அவரைத் துதித்து வணங்கினன். பிறகு தேவர்கள், யாகத்தை முன்விட்ட இடத்திலிருந்து தொடங்கிச் செய்தார்கள். அங்கே

மகாவிஷ்ணு தோன்றித் தமக்கும் பிரம்மாவுக்கும் பரம சிவத்திற்கும் யாதொரு பேதமும் இல்லையென்று கூறி, துவேஷிப்பவர்கள் தக்ஷனுடைய கதியே அடைவார்கள் என்று தெரிவித்தார். பிறகு அந்த யாகம் சிவபெருமா னுடைய திருவருளால் பூர்த்தியடைந்தது. தக்ஷனும் மேன்மை அடைந்தான்.

---

## பத்தாம் அத்தியாயம்

### துருவ சரித்திரம்

மநுவினுடைய பிள்ளை உத்தானபாதன் அரசனாய், அறநெறி தவறாமல் அரசு புரிந்துவந்தான். அவன் ஸுநீதி, ஸுருசி என்று இரண்டு மாதர்களை மணம் செய்து கொண்டான். ஸுநீதியிடம் அவனுக்குத் துருவன் என்னும் புத்திரன் பிறந்தான். ஸுருசியினிடம் உத்தமன் என்கிற பிள்ளையை அடைந்தான்.

உத்தானபாதன் தன் இளைய மனைவியிடம் அன்பும் ஆசையும் வைத்து அவளை மேன்மையாக நடத்திவந்தான். அப்படியிருக்கையில் ஒருநாள் அரசன் உத்தமனைத் தன் மடியில் வைத்துக்கொண்டு தன் இளைய மனைவியுடன் சந்தோஷமாகச் சம்பாஷித்துக்கொண் டிருந்தான். அப்பொழுது அந்த இடத்திற்குத் துருவன் வந்தான்; அவனும் அரசனுடைய மடியிலேபோய் உட்காரப் போனான். அரசன் துருவனை லக்ஷியம் செய்யவில்லை. ஸுருசி துருவனைப் பிடித்துக்கொண்டு, "அடே, உனக்கு மகாராஜாவின் மடியில் ஏறி விளையாட யோக்கியதை இல்லை. நீ என் சக்களத்தியின் பிள்ளை. மகாராஜாவின் மடியில் ஏறி விளையாட வேண்டுமென்ற ஆவல் உனக்கு

இருந்தால், நீ தவம் செய்து பகவானை ஆராதித்து என் வயிற்றில் வந்து பிற; போ " என்று கடிந்துகொண்டாள்.

துருவன் அங்கே சற்றும் தாமதியாமல் அழுது கொண்டே தன் அன்னையிடம் போய்ப் பெரும் விசனத்துடன் நடந்ததைக் கூறினான். ஸுநீதி, "விசனப் படாதே. ஸுருசி சொன்னது உண்மை. ஆகையினால் நீ பகவானை ஆராதி. உனக்கு ஒரு குறைவும் வராது" என்று புத்திமதி கூறினாள். துருவன், உடனே அரண்மனையை விட்டு, பகவானை நோக்கித் தவம் செய்யத் தைரியமாகப் புறப்பட்டுச் சென்றான்.

துருவன் போகும் வழியில் நாரதர் எதிர் தோன்றி அவனுக்குப் பகவானைக் குறித்துத் தவம் செய்யும் வழியை உபதேசித்தருளினார்; அருகிலிருந்த மதுவனம் என்கிற ஒரு வனத்துக்குப் போய்த் தவச்சாலை அமைத்துக் கொள்ளும் படியும் சொன்னார்; ஸ்ரீ ஹரியை, ஓம் நமோ பகவதே வாஸு தேவாய என்ற மந்திர மூலமாகத் தியானிக்கவும், துளஸி தளத்தினால் அவரை ஆராதிக்கவும் போதித்தார். "இவ்வாறு செய்தால் உனக்குப் பகவான் பிரத்தியக்ஷமாகி உன் விருப்பத்தை நிறைவேற்றுவார்" என்றும் கூறிச் சென்றார். பிறகு துருவன் மன உறுதியுடன் மதுவனம் சென்று கடுமையான தவம் செய்தான்.

துருவனுக்கு இவ்வாறு இதஞ்செய்து சென்ற நாரதர் உத்தானபாதனிடம் போனார். அவன் அப்பொழுது துருவன் காடு சென்றதை அறிந்து மிகுந்த துக்கப்பட்டுக் கொண்டிருந்தான். நாரதர் அவனுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லித் தேற்றி, "துருவன் தவசித்தி பெற்று எல்லோரும் புகழ வந்து அரசுபுரிவான்" என்று சொல்லிப் போய்விட்டார்.

துருவன் ஒரே மனசாய் இருந்து உறுதியோடு தவம் செய்தான். அவனுடைய தவத்திற்கிரங்கிப் பகவான் அவனுக்குக் காட்சி அளித்தார். துருவன் சிறுபிள்ளை யாகையினால் பகவானைத் துதிக்கத் தெரியாமல் பிரமித்து நின்றான். உடனே சற்று நேரத்தில் பகவானுடைய திருவருளால் அவனுக்குத் துதிக்கும் சக்தி உண்டாயிற்று. துருவன் பகவானை வாயாரத் துதித்து வணங்கினான். பகவான் சந்தோஷமடைந்து, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். துருவன், "எனக்கு அழியாப் பதவி வேண்டும்" என்று கேட்டான். பகவான், "அன்ப, உனக்கு அழிவற்றதாயும் அசைவற்றதாயும் உள்ள பதவியைக் கொடுத்தேன். ஆனால் நீ இன்னும் வெகுகாலம் அரசு புரிந்துகொண்டிருந்து பிறகே அந்தப் பதவியை அடைதல் வேண்டும்" என்று கூறி மறைந்தருளினார்.

பிறகு துருவன் பகவானைத் தியானித்துக்கொண்டே அங்கிருந்து புறப்பட்டு ராஜ்யத்திற்கு வந்து, தன் தந்தை, சிற்றன்னை, தாய் முதலியவர்களைப் பணிந்து நின்றான். அரசன் அவனைக் கண்டதும் மகிழ்ந்து ஆசீர்வதித்து அவனிடம் அரசை ஒப்பித்துத் தவவேடம் பூண்டு ஸுநீதியுடன் வனம் சென்றான்.

துருவன் அரசை ஏற்றுப் பரிபாலித்து வந்தான். அப்பொழுது ஒருநாள் அவன் தம்பி காட்டிற்கு வேட்டையாடப் போனான். அங்கொரு யக்ஷனுக்கும் அவனுக்கும் சண்டை உண்டாயிற்று. யக்ஷன் உத்தமனைக் கொன்றுவிட்டான். உத்தமனுடைய தாய் ஸுருசி அவனைத் தேடிச் சென்று ஒரு காட்டுத்தீயில் விழுந்து உயிர் துறந்தாள்.

இதை அறிந்து துருவன் கோபங்கொண்டு பெரும் சேனைகளுடன் யக்ஷர்கள் இருப்பிடமாகிய குபேர

பட்டணம்போய் அவர்களை எதிர்த்துச் சண்டை செய்து அநேகரைக் கொன்று ஜயமடைந்தான். அங்கே மநு அநேக மகரிஷிகளுடன் தோன்றித் துருவனுக்கு இதஞ்சொல்லி அவனுடைய கோபத்தை மாற்றிப் பகவானை அடையும் வழியைப் போதித்துச் சென்றார்.

பிறகு, துருவனிடம் யக்ஷர்களின் தலைவனாகிய குபேரன் வந்து, "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டான். துருவன், "எனக்கு எப்போதும் பகவானுடைய ஞாபகம் இருக்கவேண்டும்" என்று வரங்கேட்டான். குபேரன் அந்த வரத்தை மனமுவந்து அளித்து மறைந்தான்.

அப்பால் துருவன் தன் ராஜ்யம் வந்து வெகுகாலம் அரசு புரிந்துகொண்டிருந்து பின்பொரு நாள் மைந்தனிடம் அரசை ஒப்பித்துவிட்டு வனஞ்சென்று முன்போல் தவம் செய்தான். அப்பொழுது ஹரிஸேவகர்கள் வந்து, துருவனைத் திவ்விய விமானத்தில் ஏற்றிக்கொண்டு அழிவற்ற மேலான பதவியிலே கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். எல்லா அண்டங்களும் அவனையே ஆதாரமாகக்கொண்டு சுழன்றுவருகின்றன. இப்பொழுது அவன் ஆகாசத்தில் வடக்குப் பாகத்தில் துருவ மண்டலத்தில் ஸ்திர நக்ஷத்திரமாக விளங்குகிறான்.

---

## பதினோராம் அத்தியாயம்

### வேனன் சரித்திரம்

துருவனுக்கு அநேகம் பிள்ளைகள் இருந்தார்கள். அவர்களுள் உத்கலன் என்பவன் ஒருவன்; அவன் பிறவியிலேயே ஞானியாக விளங்கினான். ஆகையினால்

அவன் ஒன்றிலும் பற்றில்லாதவனு யிருந்து முடிவில் பரமபதமடைந்தான். துருவனுடைய மற்றப் பிள்ளைகளின் வம்சத்தில் அங்கன் என்பவனொருவனிருந்தான். அவனுக்கு வேனன் என்பவன் பிறந்தான். வேனன் மகா கொடியவனு யிருந்தான். அவனிடம் அசுரசுபாவம் குடிகொண்டிருந்தது. தந்தை அங்கன் அவனை நல்வழியில் திருப்ப எவ்வளவோ வழியில் முயன்றான்; ஒன்றும் பயன்படவில்லை. ஆகையினால் அவன் உலகவாழ்க்கையை வெறுத்து வனம் சென்றான்.

அங்கன் இவ்வாறு செல்லவே அநேக முனிவர்கள் வந்து வேனனிடம் ராஜ்யத்தை ஒப்பித்து நல்ல புத்திமதி சொல்லிவிட்டுப் போனார்கள். வேனன் ராஜ்யத்தை அடைந்ததும், பின்னும் இறுமாப்புக் கொண்டு, நல்ல காரியங்களுக்கெல்லாம் விரோதியாக விளங்கினான்; ரிஷிகளுடைய யாகங்கள் முதலிய ஸத்காரியங்களைத் தடுத்தான். அதனால் ரிஷிகள் கோபங் கொண்டார்கள். ஆயினும் முதலில் அவனைக் கண்டு எவ்வளவோ நல்ல வார்த்தை சொல்லிப் பார்த்தார்கள். அவன் அவர்கள் பேச்சைக் கேளாமல் தன் போக்கிலேயே நின்றான். ஆகையினால் அவர்கள் அவனைச் சபித்துக் கொன்றார்கள். பிறகு உலகம் அரசனில்லாமல் அழிவதா யிருந்தது. அதனால் அவர்கள் வேனனுடைய தொடையைக் கடைந்தார்கள். அதிலிருந்து கரிய உருவங்கொண்ட மிகக் குள்ளமான ஒரு புருஷன் உண்டானான். அவன் அரசாள அருகனல்லன் என்று வேனனுடைய கைகளைக் கடைந்தார்கள். அதிலிருந்து ஓர் அழகிய பெண்ணும் பிள்ளையும் உண்டாயினர்.

அவர்களில் ஆண்குழந்தைக்குப் பிருது என்றும், பெண் குழந்தைக்கு அர்ச்சி என்றும் பெயரிட்டனர். பிருது பெரியவனானதும், ரிஷிகள் ராஜ்யத்தை ஒப்பித்தனர்.

பிருது சக்கரவர்த்தி நெறி தவருமல் ராஜ்யத்தை ஆண்டு வந்தமையால், அவன் காலத்தில் பூமி செழிப்படைந்து எல்லாவித மேன்மையும் அடைந்திருந்தது. ரிஷிகள் எல்லோரும் கவலையின்றி வேதாத்யயனம் செய்துவந்தனர். பிதிர்க்கள் சந்தோஷமடைந்திருந்தனர். சகல ஸத்கர்மங் களும் சிறப்புற்ருேங்கின.

பிருது சக்கரவர்த்தி நூறு அசுவமேத யாகங்கள் செய்து தேவேந்திரனுக்குச் சமானமாவதற்கு முயன்ருன். அந்த யாகங்கள் நிறைவேற வொட்டாமல் இந்திரன் அடிக்கடித் தடுத்துவந்தான். ஆகையினுல் அரசன் இந்திரனை யாகத்தில் கொல்ல யத்தனித்தான். அப்பொழுது பரம்பொருளாகிய யக்ஞபுருஷர் தோன்றி, 'யாகத்தில் யாகப் பசுவையல்லது வேறென்றையும் கொல்வது கூடாது' என்று கூறித் தடுத்து, "அரசனே, இந்திர னுக்கும் உனக்கும் பேதம் இல்லை. நீ தொண்ணூற் றென்பது அசுவமேதம் செய்து நிறுத்திவிடு. அப்படி யிருப்பினும் நீ இந்திரனைவிட மேலானவனே ஆவாய். நீ நூருவது யாகம்செய்வதுகூடாது. அதை நீ செய்தாலும் அதை முடிக்க உன்னுல் முடியாது" என்று கூறினுர். பிறகு இந்திரனும் பிருதுவும் மனவமைதி அடைந்தனர். பகவான் பிருதுவுக்கு நல்ல வரங்களைக் கொடுத்துச் சென்ருர்.

அப்பால் பிருது சக்கரவர்த்தி யாகசாலையில் தம் பிரஜைகளை நோக்கி, தெய்வம் உண்டு என்பதையும், தெய்வ பக்தியையும், தெய்வபக்தர்களுடைய மகிமையையும் பற்றி விஸ்தாரமாகப் பேசிக்கொண்டிருந்தான். ஸநகாதி யோகிகள் (பிரம்மாவினுடைய மானஸ புத்திரர்கள்) அங்கே தற்செயலாய் வந்துசேர்ந்தனர். அவர்கள் தங்களை வணங்கி வினவிய பிருகு சக்கரவர்த்தியை நோக்கி,

"பகவத் பக்தியே எல்லாவற்றையும்விட மோக்ஷம் அடைவதற்கு அநுகூலமானது; அதை விடுவது கூடாது" என்று கூறிச் சென்றார்.

பிருது சக்கரவர்த்தி அவ்வாறே பகவானிடம் குறைவற்ற பக்தி செலுத்திவந்தான். அவனுக்கு ஐந்து பிள்ளைகள். விதாசுவன் என்பது அவனுடைய முதற் பிள்ளையின் பெயர். பிருது அவனிடம் ராஜ்யத்தை ஒப்பித்துவிட்டு வனம் சென்றான். அவன் மனைவி அர்ச்சி என்பவளும் அவனுடன் கூடவே சென்றாள். கொஞ்ச நாளில் அவர்கள் பரமபதம் அடைந்தனர்.

பிறகு விசியாசுவன் ராஜ்யத்தைத் தன் தம்பிமார் நால்வருக்கும் நான்கு பாகமாகப் பிரித்துக் கொடுத்துவிட்டு ஆத்மநிஷ்டை பழகிப் பரமபதம் அடைந்தான். அவனுக்குப் பின் அவனுடைய பேரன் பகிர்தசன் என்பவன் பிரதான அரசனானான். அவன் யாகம் செய்வதில் அதிக விருப்பங் கொண்டு இடைவிடாமல் யாகம் செய்துவந்தான். ஆகையினால் அவனுக்குப் பிராசீனபர்ஹிஸ் என்று பெயர் வந்தது. அவன் நாரதரிடம் ஞானோபதேசம் பெற்று முடிவில் பரம்பொருளை அடைந்தான்.

பிராசீனபர்ஹிஸுக்குப் பத்துப் பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் பிரசேதசுக்கள் என்று பெயர் பெற்றனர். அவர்கள் கொஞ்சகாலம் அரசாண்டார்கள். அப்பால் அவர்கள் நாரதரால் ஞானோபதேசம் அடைந்து ஹரியின் குணங்களைக் கேட்டுக்கொண்டே எளிதில் பரமபதம் அடைந்தனர். அப்பால் அவர்களுக்குப் பிள்ளையாகப் பிறந்த தக்ஷன் ராஜ்யத்தை ஏற்றுக்கொண்டான்" என்று மைத்திரேயர் கூறினார்.

பிறகு விதுரர் அவரை வணங்கி விடைகொண்டு தம் உறவினரைக் காண ஹஸ்தினுபுரம் நோக்கிப் புறப்பட்டார்.

—(o)—

## பன்னிரண்டாம் அத்தியாயம்

---

### பிரியவிரதன், ரிஷபதேவர்களின் கதை

மநு தம்முடைய மூத்த பிள்ளையாகிய பிரியவிரதனிடம் அரசை ஒப்பித்தார். பிரியவிரதன் ஆதியில் நாரதரிடம் உபதேசம் பெற்றிருந்தான். அதனுல் அவன் அரசை விரும்பாதவனுய் வனம் போய்த் தவம் புரிவதாகத் தீர்மானித்தான். இதனை அறிந்து பிரம்மதேவர், 'இவன் கொண்டுள்ள எண்ணம் பிரபஞ்ச சிருஷ்டி விருத்தி யாவதற்குத் தடையா யிருக்கிறதே! இதனை மாற்ற வேண்டும்' என்று கருதி ஸத்திய லோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்து பிரியவிரதனைக் கண்டார். பிரியவிரதன் பிரம்மாவைக் கண்டதும் வணங்கி முறைப்படி பூசித்துத் துதித்தான். அதனுல் பிரம்மதேவர் சந்தோஷமடைந்து பிரியவிரதனை நோக்கி, "நானும் நீயும் உன்னுடைய தந்தையான மநுவும் தேவரிஷியான நாரதனும் எல்லோரும் கடவுளுடைய ஆணைப்படியே நடந்துவருகிருேம். அவருடைய ஆணையைக் கடப்பதற்கு ஒருவராலும் முடியாது. ஜனனம், மரணம், சோகம், மோகம், சுகம், துக்கம் இவற்றை அநுபவிக்கும் பொருட்டும், எப்பொழுதும் பயமில்லா முக்தியை அடையும் பொருட்டும், செய்வதற்கு உரிய கருமத்தைச் செய்யும் பொருட்டும் பகவான் இந்தத் தேகத்தைக் கொடுத்திருக்கிருர். மூக்கணாங் கயிற்றினுல் கட்டுண்ட எருது, எப்படி

மாடோட்டிக்குக் கட்டுப்பட்டிருக்கிறதோ அப்படியே நாம் கடவுளுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டிருக்கிறோம். தேவர், மனிதர், மிருகம், பறவை முதலிய உயிர்களுக்கு, இறைவர் கர்மத்துக்கு ஏற்றவாறு சரீரங்களைக் கொடுக்கிறார். அப்படிப்பட்ட சரீரத்தைப் பெற்ற நாம், கண் இல்லாதவன் கண் இருக்கிறவனைப் பின்பற்றி ஓரிடத்தை அடைவதுபோல் பரதந்திரராயிருந்துகொண்டு சுகதுக்கங்களை அடைகிறோம். ஆத்மஞானிகூடக் கர்மாநுபவம் இருக்கிறவரையில் அதன் பயனை அநுபவித்து, தூங்கியெழுந்து தெளிந்தவுடன் கனவில் கண்ட தேகத்தில் அபிமானம் அற்றிருப்பதுபோல் தன் தேகத்தில் அபிமானம் அற்றிருப்பான். அந்தத் தேகத்தை மீண்டும் எடுக்கும்படியான கர்மங்களைப் பண்ணமாட்டான். மனத்தை அடக்காதவன் எங்கேயிருந்தாலும் அவனை ஜனன மரணமென்கிற ஸம்ஸாரம் விடாது. மனோநிரோதமுடையவன் கிருகஸ்தாசிரமத்தில், அதாவது ஸம்ஸார மத்தியில் இருந்தாலும், அவனுக்கு அது ராகத்துவேஷாதி தோஷத்தை உண்டாக்க மாட்டாது. காமக்குரோதங்களை ஜயித்தவன் எந்த ஆசிரமத்திலும் இருக்கலாம். நீ பகவானுடைய பாதாரவிந்தங்களையே துணையாகக் கொண்டு காமக்குரோதங்களை ஜயித்துவிட்டாய். ஆகையினால் நீ இந்தக் கிருகஸ்தாசிரமத்திலே கொஞ்சகாலம் இருந்து சுகங்களை அநுபவித்துவிட்டுப் பிறகு வைராக்கியத்தை அடையலாம்" என்றார்.

பிறகு பிரியவிரதன் பிரம்மதேவரை வணங்கி, "தங்களது ஆணைப்படியே நடக்கிறேன்" என்று கூறி அரசை ஒப்புக்கொண்டான். அப்பால் பெரிகிஷ்மதி யென்கிற பெண்ணை விவாகம் செய்துகொண்டு நெடுங்காலம் அரசு புரிந்தான். அவனுக்குப் பத்துப் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் மூன்று பேர் இளமை முதற்கொண்டு வேதாந்த

வித்தையை அப்பியாசம் செய்துவந்து பரமஹம்ஸர்களுடைய ஆசிரமமான ஸந்நியாஸம் அடைந்தார்கள். பின்னர் அவர்கள் எளிதில் பரமபதம் அடைந்தார்கள்.

இந்தப் பிரியவிரதனுக்கு இரண்டாம் மனைவியினிடம் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அவன் பூமியைப் பதினொரு கோடி வருஷம் ஆட்சிபுரிந்தான். அவன் பகவத் உபாசனையிலே விருத்தியடைந்து எல்லோரும் அதிசயிக்கத் தக்க புகழை அடைந்தான். பூமியில் ஜம்பு, பிலட்சம், சான்மலி, குசம், கிரௌஞ்சகம், சாகரம், புஷ்கரம் என்னும் பெயர்கொண்ட ஏழு தீவுகள் அவன் காலத்திலே தான் உண்டாயின. பிரியவிரதன் தன்னுடைய ஏழு பிள்ளைகளையும் அந்த ஏழு தீவுகளுக்கும் அதிபதியாக்கினான். அவனுக்கு ஊர்ச்சஸ்வதியென்றொரு பெண் இருந்தாள். அவன் அப்பெண்ணைச் சுக்கிராச்சாரியர் என்பவருக்குக் கொடுத்தான்.

இவ்வாறு செய்தபின் பிரியவிரதன், தன் மனைவியையும் சம்பத்து முதலியவற்றையும் விட்டுவிட்டுப் பகவானுடைய சீலங்களை அநுபவிப்பதில் ஆசைகொண்டு முன் நாரதர் உபதேசித்தபடி அத்யாத்ம மார்க்கத்தையே மீண்டும் அடைந்து கடைசியில் பரமபதம் பெற்றான்.

பிரியவிரதனுடைய பிள்ளைகளில் அக்னிதரன் என்பவன் ஜம்புத்தீவைப் பரிபாலித்து வந்தான். அவன் தர்ம சிந்தையுடையவனா யிருந்தான். ஒருநாள் 'தவம்புரியும் சித்தங்கொண்டு மந்தபர்வதக் குகைக்குச் சென்று அங்கிருந்து பகவானை நோக்கித் தவமிருந்தான். அவனுடைய தவத்தைக் கலைக்க எண்ணி இந்திரன் பூர்வசித்தி என்னும் அப்ஸர ஸ்திரீயை அனுப்பினான். அவள் அக்னிதரன் தவம் செய்யும் குகைக்கு வந்து ஆடல் பாடல் களினாலே அவனுடைய தவத்தைக் கலைத்தாள். அவன்

அவளிடம் ஈடுபட்டு அவளைப் பலவாருகப் புகழ்ந்தான். அந்த வாக்குச் சாதுரியத்தில் ஈடுபட்ட அவள் அவனுக்கு இணங்கி அவனோடு ஜம்புத்தீவிலேயே சிலகாலம் இருந்தாள். அவனுக்கு அவளிடம், நாபி, கிம்புருஷன், அரி, இளாவிரதன், இரம்மியகன், இரண்மயன், குரு, பத்திராவசு, கேதுமாலன் என்னும் பெயர்கொண்ட ஒன்பது பிள்ளைகள் பிறந்தார்கள். பிறகு பூர்வசித்தி அந்த அக்னிமித்திரனையும் பிள்ளைகளையும் விட்டுவிட்டு இந்திரலோகம் போய்ச்சேர்ந்தாள். அவள் இவ்வாறு பிரிந்த பின்னும், அவள் நினைப்பாகவே இருந்தபடியினுல் அக்னிமித்திரன் முடிவில் பிதிர்லோகம் அடைந்தான்.

இவ்வாறு அக்னிமித்திரன் பிதிர்லோகம் அடைந்த பிறகு, நாபி முதலிய அவருடைய புத்திரர்களும் மேருவின் பெண்களான ஒன்பது பேரை மணந்துகொண்டார்கள். அவர்களுள் நாபி யென்பவன் புத்திரனை வேண்டிச் சிறந்த வேள்விகளைச் செய்தான். அவனுடைய பக்தியினுல் மகிழ்ச்சி அடைந்த பகவான் அவனுக்குத் திவ்ய மங்கள சொரூப தரிசனம் தந்தார். பக்தர்களுடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்கிற இச்சையுடையவராகிய பகவானைக் கண்டதும், நாபி டலகோடி நமஸ்காரம் செய்து துதித்து, "அகிலேசா, தங்களைப்போன்ற ஒரு புத்திரனை எனக்கு அளித்தருளவேண்டும்" என்று கேட்டான். பகவான், "எனக்குச் சமானமானவன் ஒருவனு மில்லை. ஆனதனுலே நானே அம்சாவதாரமாய அவதரிக்கின்றேன்" என்று வரம் தந்து மறைந்தார். அப்பால் பகவான் அவனுக்குப் புத்திரராகப் பிறந்து ரிஷபர் என்ற பெயரோடு விளங்கினுர்.

இவ்வாறிருக்கையில் ஒருசமயம் இந்திரன் நாபியினுடைய அரசில் பொறுமைகொண்டு மழை பொழிவிக்காமல் இருந்தான். ரிஷபதேவர் தமது மகிமையினுல் மழை

பொழியும்படிச் செய்தார். ரிஷபதேவர் அரசு புரியத்தக்க வயதை அடைந்ததும், நாபி அவரிடம் தமது அரசை ஒப்பித்துவிட்டுப் பதரிகாசிரமம்போய் நரநாராயணர்களைக் குறித்துத் தவம் புரிந்துகொண்டிருந்து முடிவில் பரமபதம் அடைந்தான்.

அப்பால் ரிஷபதேவர், இந்திரன் மனமுவந்து அளித்த ஜயந்தி யென்கிற பெண்ணை விவாகம் செய்துகொண்டு இல்லறம் நடத்திவந்தார். அவர் பரதர் முதலிய நூறு புதல்வர்களைப் பெற்றார். பரதர் நற்குணசீலராய் விளங்கினார். அவருக்குப்பின் பிறந்த ஒன்பதுபேர் மற்றவர்களுக்குள் சிரேஷ்டர்களாக விளங்கினார்கள். அவர்களுக்குப்பின் உதித்த ஒன்பது பிள்ளைகளும் சிறந்த பக்தர்களாய்ப் பாகவத சாஸ்திரத்தையும் பகவத் தர்மத்தையும் கரைகண்டவர்க ளானார்கள். மற்ற எண்பத்தொன்பது பேர்களும் தந்தையினுடைய ஆணைப்படி நடந்துவருகிறவர்களாய் இருந்தார்கள்; உத்தமசீலர்களாயும் வணக்கமுடையவர்களாயும் விளங்கினார்கள். ரிஷபதேவர் ஈசுவராம்சமாய் உதித்தவரானாலும் பரதந்திரனைப்போல் தர்மங்களை அனுஷ்டித்து வந்ததுமன்றிப் பிறரும் தம்மை அநுசரித்து வரும்படி அரசுபுரிந்துவந்தார்; எல்லோரிடமும் தயையுடையவரா யிருந்தார். அவர் இவ்வாறு தருமகுணசீலராய் விளங்கியபடியினால், அவருடைய அரசாட்சியில் ஜனங்கள் தமக்கில்லையென்று ஒரு வஸ்துவை ஒருவரிடத்திலேயும் இச்சித்ததும் இல்லை; கேட்டதும் இல்லை.

ரிஷபதேவர் ஒரு சமயம் பூஸஞ்சாரஞ் செய்துகொண்டு பிரம்மாவர்த்தம் என்ற க்ஷேத்திரம் போனார். அங்கே பிரம்மரிஷி சிரேஷ்டர்களுடைய சபையிலே தம் பிள்ளைகளில் சிலரிருக்கக் கண்டார், அவர்களுக்கு அங்கே ஆத்ம வித்தை, தேகத்தின் ஸ்வரூபம், ஸந்நியாஸிகளின் லட்சணம், பக்தியின் ஸ்வரூபம், பிராம்மணர்களின்

மேன்மை முதலிய விஷயங்களைப் பற்றி விஸ்தாரமாக விளக்கியருளினார்.

பிறகு அங்கிருந்து தமது ராஜ்யத்திற்கு வந்து, தம்முடைய பிள்ளைகளுக்குள் சிறந்தவராயும் பரம பாகவதராயும் பாகவதர்களையே கதியாக உடையவராயும் இருக்கிற பரதரிடம் தமது அரசை ஒப்பித்துவிட்டுத் தாம் அவதூத விரதம் பூண்டு லோக சஞ்சாரம் செய்யத் தொடங்கினர்.

இப்படி வெளியிற் புறப்பட்ட ரிஷபதேவர், பித்தனைப் போலவும், குழந்தையைப் போலவும், அந்தகனைப் போலவும், ஊமையைப் போலவும், செவிடனைப் போலவும் மூடனைப் போலவும் காணப்பட்டார்; பிசாசுபோல் திரிந்தார்; மௌனவிரதம் பூண்டு ஒருவரோடும் பேசாமலே இருந்தார். அவர் செல்லும் பட்டணங்கள், வனங்கள், ஆசிரமங்கள், நதிப்பிரதேசங்கள், சேரிகள், ஜன சமூகங்கள், மலைகள் முதலிய இடங்களில் துஷ்டர்கள் அடிப்பார்கள் ; சிறு நீரை (மூத்திரத்தை) விடுவார்கள், காறி உமிழ்வார்கள்; கல்லைவிட்டு எறிவார்கள்; மண்ணை யும் தூசியையும் தூளியையும் வாரி இறைப்பார்கள்; கெட்ட வார்த்தைகள் பேசி இகழ்வார்கள். இவைகளை யெல்லாம் ரிஷபதேவர் பொருட்படுத்த மாட்டார்; அகங்கார மமகாரங்களை விட்டுத் தேகமெல்லாம் புழுதி படிய அலைவார். இப்படி உலக நன்மையின் பொருட்டு நானாவிதமான யோகாதிகளைச் செய்துகொண்டு எப்போதும் பரமானந்தானுபவத்தை உடையவராயிருந் தார். அவர் தம்மைப் பரமாத்மாவுடனே அபேதமாய்ப் பார்த்துக்கொண்டு தேகார்த்தமான வியாபாரத்திலிருந்து ஒழிவடைந்தார். குயவனுடைய சக்கரம்போல் சதா காலமும் பூமியெங்கும் சுற்றிக்கொண் டிருந்தார். அப்படி யிருந்தும் அவர் ஒரு சமயம் குடகாசலம் என்கிற பர்வதத்

திற்கருகே வாயில் கல்லைக் கவ்விக்கொண்டு தலைவிரி கோலமாய்ச் சஞ்சரித்துக்கொண் டிருந்தார். மலைப் பிரதேசமான அவ்விடத்தில் மூங்கில் புதரில் தீப்பற்றி எரிந்தது. அந்தத் தியில் அவர்போய் நுழைந்து சரீரத்தை ஒழித்தார்.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

—o—

### ஜடபரதர் கதை

பரதர் ராஜ்யத்தை ஏற்றுக்கொண்டது முதல், முறை தவறுமல் ராஜ்ய பரிபாலனம் செய்துவந்தார். அவர் ராஜ்ய பரிபாலனம் செய்துவந்த மகிமையினுலே அவர் அரசுபுரிந்த ராஜ்யத்திற்குப் பாரத வருஷம் அல்லது பரதகண்டம் என்னும் பெயர் உண்டாயது. விசுவரூபர் என்பவருடைய பெண்ணை அவர் விவாகம் செய்துகொண்டார். அவளுக்குப் பாஞ்சஜன்யை என்று பெயர். அவர்களுக்கு ஐந்து பிள்ளைகள் பிறந்தார்கள். ஸர்வக்ஞரான பரதர் பிதிர் பிதாமகரான ரிஷபதேவர் அக்னிமித்திரர் இவர்களைப்போல் ஸ்வதர்மத்தைச் செய்து வந்தார்; யக்ஞ புருஷனை பகவானை வேள்விகளாலே சாஸ்திரோக்தமாக ஆராதித்துவந்தார். அதனுல் ஏற்பட்ட புண்ணியத்தை யெல்லாம் பகவானுகிய வாசுதேவருக்கு அர்ப்பணம் செய்து ஆத்மநிஷ்டையினுல் எல்லாவிதமான அகக்குற்றங்களையும் போக்கடித்தார். அவருக்கு நாடோறும் பகவானிடத்தில் பக்தி விருத்தியாகிக்கொண்டே வந்தது. பிறகு அவர் தம்முடைய அரசைப் பிள்ளைகளிடம் ஒப்பித்துத் தவஞ்செய்யும்பொருட்டு வனத்தை நோக்கிச்

சென்று புலகர் என்கிற மகரிஷியினுடைய ஆசிரமம் போய்ச்சேர்ந்தார். அந்த ஆசிரமத்தினருகே ஓடிய கண்டகீ நதியில் நாடோறும் நீராடி, துளஸி, ஜலம், கந்தமூல பலங்கள் முதலியவைகளால் பகவானை ஆராதித்து வந்தார். எப்போதும் பகவத் ஆராதன கைங்கரியத்தை உடையவராய்ப் பகவானுடைய பாதாரவிந்தத்தை மறவாமல் உலகத்திலுள்ள சராசரங்களிலெல்லாம் பகவானே விளங்குவதாகப் பாவித்து நிஷ்டை செய்துவந்தார்.

இப்படிப்பட்ட பரதர் வழக்கம்போல் ஒருநாள் கண்டகீ நதியில் ஸ்நானம் செய்து பிரணவத்தைத் தியானம் செய்துகொண்டு அந்நதிக்கரையில் ஒரு யாமம் வரை இருந்தார். அப்பொழுது ஒரு பெண்மான் அங்கேவந்து நதியில் நீர் அருந்தியது. அருந்துகையில் பயங்கரமான ஸிம்ம கர்ஜனை யொன்று கேட்டது. அதனால் பயமடைந்த மானனது திடுக்கிட்டுத் துள்ளிக் குதித்து அக்கரையிற் போய் விழுந்தது. மான் சூல்கொண்டிருந்தமையினால் அதன் வயிற்றிலிருந்த குட்டி நழுவி ஆற்றில் விழுந்தது, அதைக்கண்ட பரதர் இரக்கங்கொண்டு நதியில் இறங்கி அந்தக் குட்டியை எடுத்துக்கொண்டு வந்து ஆசிரமத்தில் வளர்த்துவந்தார். வரவர அதனிடத்தில் அவருக்கு அபிமானம் அதிகரித்தது. அதனால் அவர் படுக்கும்போதும் நடக்கும்போதும் நீராடும்போதும் உண்ணும்போதும் தம்முடைய பக்கத்திலேயே அந்த மானை வைத்துக்கொண்டிருந்தார். தர்ப்பை, புஷ்பம், சமித்து, பலாசம், கந்தமூல பலங்கள் இவைகளைச் சேகரிக்கப் போகும்போது மானும் கூடவே செல்லும். அப்போது நாய், நரிகள் முதலியன மானுக்கு ஏதேனும் தீங்கு செய்யப்போகின்றனவே என்று அவருக்குக் கவலையுண்டாகும். மான்குட்டி அருகேயிருந்தால் கவலையில்லாமல் ஜபஞ்செய்வார். இல்லாவிட்டால் ஜபத்திலே கவனமில்லாமல் இருப்பார்.

அடிக்கடி மான்குட்டியைத் தடவிக்கொடுத்து அதற்கு ஆசீர்வாதம் செய்வார். வரவர அந்த மானைப் போஷிப்பதிலேயே மிகுந்த அபிமானமுடையவ ராஞர். இதனுல் அவர் தவம் முதலியன தடைப்பட்டன.

இப்படியிருக்கையில் அந்த மான்குட்டி எங்கேயோ போய்விட்டது. வெகுநேரம் வரையில் அது வரவில்லை. அதனுல் பரதர் துக்கமும் கவலையும் கொண்டு எப்போதும் அதனையே சிந்தித்துக்கொண்டிருந்தார். என்ன செய்வார் பாவம்! அதனிடம் வைத்த அபிமானத்தை அவரால் மறக்கக்கூடவில்லை. அந்த நிலையில் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்த அவருக்கு மரணகாலம் சமீபித்தது. அந்தச் சமயத்திலும் அவருக்கு அந்த மான்குட்டியினிடத்தில் அபிமானம் நீங்கவில்லை. அந்தச் சிந்தனையுடனேயே அவர் மரணமடைந்தார். அதனுல் அவருக்கு மான் ஜன்மம் உண்டாயிற்று.

மிருக ஜன்மமடைந்த அவருக்குப் பூர்வஜன்ம ஞானம் இருந்தமையினுல், அவர் தாம் மானிடத்திலே இரக்கங் கொண்டு அதை எடுத்து வளர்த்துவந்ததையும், வரவர அதனிடம் அபிமானங்கொண்டமையும், அந்த அபிமானத்தின் காரணமாகத் தமது தவ நிலையினின்று நழுவியதையும் எண்ணி வருந்திஞர். மான் கூட்டத்திற் சேர்ந்தால் தமக்கு மிருக சுபாவம் மிகுமென்று அஞ்சிய அவர், முன் தாம் இருந்துவந்த புல்லாசிரமம் போய் உலர்ந்த புல் காய் கிழங்கு முதலியவைகளைத் தின்றுகொண்டு பகவத் தியானத்திலேயே காலங்கழித்து வந்தார். இப்படியிருந்த பிறகு மரணகாலம் வந்து மிருக சரீரத்தை ஒழித்தார்.

இவ்வாறு மிருகப் பிறவியை ஒழித்த பரதர், ஆங்கிரஸ கோத்திரத்தில் ஆத்மஞானியாயிருந்த ஒரு பிராம்மணருக்கு அவருடைய இரண்டாம் மனைவியினிடம் புத்திரராகப்

பிறந்தார். அவருக்கு இந்தப் பிறவியிலும் பூர்வஜன்ம ஞாபகம் இருந்தது. அதனால் அவர் இந்த ஜன்மத்தினின்றும் ஒழிவடையவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு பைத்தியக்காரனைப்போல் இருந்தார். அதனால் அவரை எல்லோரும் ஜடபரதர் என்ற பெயரிட்டு அழைத்தனர்.

இப்படியிருக்கையில் அவருடைய தந்தையார் இறந்தார். அப்பொழுது அவருடைய தாயும் மரணமடைந்தாள். ஆகவே ஜடபரதர் தம்முடைய மூத்த தாயினிடம் இருந்துவர நேர்ந்தது. அவளுக்கு ஒன்பது பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் ஒன்பது பேரும் நல்ல சாமர்த்ரிய சாலிகள். ஆகையினால் அவர்கள் ஜடபரதரைக் கழனிகளிலே வேலை செய்யும்படி செய்தனர். ஆனால் அவருக்கு நல்ல உணவு கிடைப்பதில்லை. உணவு அற்பமாய் இருந்தாலும் பலமாயிருந்தாலும் அதனைத் திருப்தியோடு புசிப்பார். வாசனை சுவை ஒன்றும் பார்ப்பதில்லை. மான அவமானங்களைக் கவனிப்பதில்லை. சுகதுக்கங்களையும் சிந்திப்பதில்லை. இடையில் அழுக்காடையையே உடுத்திருப்பார்.

ஜடபரதர் இப்படி இருந்துவருகையில், காளி கோவிலுக்கு நரபலி செலுத்துவதாக வேண்டிக்கொண்ட ஓர் அரசன், பலியிடுவதற்கேற்ற ஒருவனைக் கொண்டு வரும்படி சில ஏவலாளர்களை அனுப்பியிருந்தான். ஏவலாளர்கள் பல இடங்களிலும் தேடிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒரு நாள் இரவு ஜடபரதரிடம் வந்தார்கள். ஜடபரதர் அப்பொழுது வயலின் நடுவே ஒரு பரண்மீது உட்கார்ந்து தெய்வத்தியானம் செய்துகொண்டிருந்தா ராதலால், தம்மை மறந்து ஒரு பதுமைபோல் இருந்தார். அவரைக் கண்டதும் அவர்கள், 'இவன்தான் பலிக்கேற்றவன்' என்றெண்ணி ஜடபரதரைப் பிடித்துக் கட்டித் தூக்கிக்கொண்டுபோய்த் தங்கள் அரசனிடம்

விட்டார்கள். அரசன் அவரைக் காளி கோவிலுக்குக் கொண்டுபோகும்படி ஆணையிட்டுத் தன் பிரார்த்தனையைச் செலுத்த அவனும் அங்கே சென்றான்.

காளிதேவியின் ஸந்நிதியில் ஜடபரதருக்கு எண்ணெயிட்டு முழுக்காட்டி மண்டிபோட்டு உட்காரவைத்துத் தலையைக் குனிந்துகொண்டிருக்கும்படிச் செய்து அரசன் தேவியைத் துதித்தான். கொலையாளி அவரை வெட்டுவதற்குக் கத்தியைத் தூக்கிக்கொண்டு, எப்பொழுது தன் யஜமானனுடைய உத்தரவு பிறக்குமென்று காத்துக் கொண்டிருந்தான்.

ஜடபரதர் பிரம்மஞானம் கைவரப்பெற்றவர்; ஆகையினால் அவருடைய தவக்கனல் அந்தத் தேவியைத் தகிக்கத் தொடங்கியது. காளிதேவி அதனைப் பொறுக்க முடியாமல் பெருங்கோபத்துடன் விக்கிரகத்தை விட்டு வெளிப்பட்டு, "ஆகா! மகா பரிசுத்தமுடைய இந்த ஆத்மாவையா பலியிடத் துணிந்தீர்கள்?" என்று ஆரவாரித்து, அந்த அரசனையும் அவர்களைச் சேர்ந்த ஏவலாளர்களையும், அவர்கள் கொண்டுவந்த கத்தியினாலேயே கொன்றுவிட்டுக் கோபம் தணிந்து விக்கிரகத்தினுள் மறைந்தாள்.

பகவானுடைய பக்தர்களுக்குத் தீங்குசெய்ய எவன் நினைக்கிறானோ அவனுக்கே அத்தீங்கு உண்டாகும். சிறந்த பக்தர்களுக்கு எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும் பயம் உண்டாகாது. அவர்களை எப்போதும் எங்கும் நிறைந்த பகவான் கைவிடாமல் காப்பாற்றுவார்.

இவ்வாறு உயிர் தப்பிய ஜடபரதர் அங்கிருந்து புறப்பட்டுப் பல இடங்களிற் சஞ்சரித்துக்கொண்டிருந்தார். அப்படிச் செல்லும் அவர் ஒரு சமயம் இட்சுமதீ என்கிற நதியின் அருகே போய்க்கொண்டிருந்தார். அவர்

இப்படியிருக்கையில், ஸிந்து ஸௌவீரதேச அரசன் கபில முனிவருடைய ஆசிரமம் போகப் புறப்பட்டான். அப்பொழுது அவனுடைய பல்லக்கைச் சுமக்க ஓர் ஆள் தேவையாயிருந்தது. எவனையேனும் தேடி அழைத்துக் கொண்டு வரவெண்ணிப் புறப்பட்டுவந்த அவனுடைய ஏவலாளர்கள், ஜடபரதரை நதிக்கரையில் கண்டனர்; கண்டதும், "இவன் கொழுத்துப் போதுமான பலமுடையவனு யிருக்கிறபடியால் இவனே பல்லக்கைச் சுமக்கத் தகுதியானவன்" என்று கருதி அவரைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய்ப் பல்லக்கைச் சுமக்கும்படி வைத்தார்கள்.

அரசனுடைய பல்லக்குப் போய்க்கொண்டிருக்கிறது. பிரம்மஞானிகள், கீழே ஊர்ந்துபோகும் பிராணிகளின் மீது கால்வைத்து அவற்றிற்குத் தொந்தரவுண்டாக்குவது கூடாதென்று கருணைகொண்டு, தூர தூர, அதாவது இரண்டு அம்பு அளவு தூரம் காலெடுத்து நடப்பார்கள். அவ்வாறே ஜடபரதரும் நடந்தார். இதனுல் மற்றவர் களுடைய நடைக்கும் இவருடைய நடைக்கும் வேறுபாடு ஏற்பட்டுப் பல்லக்கு அசைந்தது. அதுகண்ட அரசன் சினங்கொண்டு ஜடபரதரை நோக்கி, "என்னடா இது? நீ உயிரோடிருக்கிருயா அல்லது இறந்து பிணமாய் விட்டாயா? என்னுடைய ஆணை கடந்து நடப்பதேன்? மற்றவர்களை ஏன் நீ அநுஸரிக்கவில்லை? உன் உடம்பு இருக்கிறதைக் கவனித்தால் நீ பல்லக்குச் சுமக்கப் பலமில்லாதவனுகத் தெரியவில்லையே! உனக்கென்ன கேடு?" என்று கூறி அதட்டினுன்.

ஜடபரதர் உடனே தம் வாய்திறந்து, "வேந்தே, தேகத்தில் அபிமானத்தை வைக்காமல் எப்போதும் ஆத்ம ரூபத்திலேயே ஈடுபட்டிருப்பவர்கள், உயிரோடிருந்தாலும் உயிரற்ற பிணத்துக்கு ஒப்பாகத்தான் உலாவுவார்கள்.

தேகத்தில் அபிமானம் உடையவர்களுக்கெல்லாம் பசி, தாகம், பயம், ஆசை, அன்பு, தூக்கம் முதலியன உண்டு. எம்போலியர்க்கு அவையுண்டோ? ஆதலின் உன் தண்டனை எம்மை ஒன்றுஞ் செய்யாது. அது அரைத்த மாவையே மறுபடியும் அரைப்பது போலாகும். ஆதலின் அது வீணேயாம்'' என்று கூறினார்.

இப்படிக்கூறக் கேட்டதும் அரசன், "ஓ! இவர் யாரோ ஒரு மகான் என்பதில் ஐயமில்லை. அந்தோ! அபராதி யானேனே!'' என்று பயந்து பல்லக்கை விட்டு இறங்கிச் சாஷ்டாங்கமாக அவரை நமஸ்கரித்து, "ஐய, நீர் யார்? மகா மகிமை உடையவராகக் காணப்படுகிறீர்! யக்ஞோபவீதம் தரித்துக் கொண்டிருக்கிறீர்! தத்தாத்தி ரேயர் போன்ற அவதூதராக விளங்குகிறீர்! நீர் யாருடைய புத்திரர்? எங்கே இருக்கிறவர்? என்னுடைய க்ஷேமத்தின் பொருட்டாகத்தான் வந்தீர்போலும்! என் பிழைகளை மன்னிக்கவேண்டும். நான் கபில முனிவரிடம் உபதேசம் பெற வேண்டுமென்று புறப்பட்டவன். பகவானான அந்தக் கபில மகரிஷி நீங்கள்தாமோ? என்னைப்போன்றவர்கள் உங்களுடைய மகிமையை எப்படி அறிவார்கள்? என்னை மன்னிக்கவேண்டும்'' என்று கூறிப் பணிந்தான்.

பரமஞானியாகிய ஜடபரதர் அவ்வரசன்மீது இரக்கங் கொண்டு, "வேந்தே, நீ வித்துவானல்ல; ஆயினும் வித்துவான்களுடைய வாதத்துக்குச் சமானமான பேச்சுகள் பேசினாய்'' என்று தொடங்கி மனம் குணம் இவற்றின் சொரூபம், தெய்வ மகிமை, பகவானுடைய சேவையினால் உண்டாகும் பயன், அகங்காரத்தினால் உண்டாகும் இழிவு இவைகளையும், இன்னும் அரசன் சந்தேகங்கொண்டு கேட்ட வேறு சில விஷயங்களையும் எடுத்துக் கூறி அரசனைத் தெளிவித்தார். அரசன் அவருடைய உபதேசம்

பெற்றதும் உள்ளத் துறவு பூண்டு பரம்பொருளை வழிபடுவானாயினான். அப்பால் காலக்கிரமத்தில் பரிசுத்த நிலையை அடைந்து முடிவில் பரமபதம் அடைந்தான். ஜடபரதர் முடிவில் பரம்பொருளோடு கலந்துகொண்டார்.

ஸ்ரீ சுகர் ஜடபரதருடைய சரித்திரங் கூறியபின், பரீக்ஷித்துக்கு அந்தப் பரத வம்சத்தில் உதித்த அரசர்களுடைய பெருமையை விளக்கினார்; சூரிய கதி, சந்திர கதி, நக்ஷத்திரங்களின் கதி முதலியவைகளையும் கிரஹணங்களின் ஸ்வரூபத்தையும் எடுத்துரைத்தார்; பிறகு இந்தப் பரதகண்டத்தினுடைய பெருமையை விளக்கத் தொடங்கி, சுவர்க்கம், நரகம் என்பதை ஸர்வப் பிராணிகளுக்கும் கர்மத்திற்கேற்றபடி உண்டாகின்றன என்றும், பரம பாகவதர்களுடைய பழக்கத்தினாலே மோட்சம் உண்டாகிறதென்றும் கூறியருளினார்; இந்தப் பாரத வருஷத்தில் பிறவியை அடைவதற்குத் தேவர்களும் இச்சிக்கிறார்களென்று இதன் மகிமையைச் சிறப்பித்துக் கூறினார்.

———o———

## பதினான்காம் அத்தியாயம்

———

### அஜாமிளன் கதை

இவற்றை யெல்லாம் கேட்டுணர்ந்த பரீக்ஷித்து ஸ்ரீ சுகரைப் பார்த்து, "ஸ்வாமி, பலவாறான கொடிய வாதனைகளையுடைய நரகத் துன்பத்தைக் கடப்பதெப்படி? அதற்குரிய உபாயத்தை எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்டான். ஸ்ரீ சுகர், "கேள்: மனம், வாக்கு, காயங்களினாலே செய்யும் பாப கர்மங்களுக்கு மநு முதலியவர்கள் பிராயச்சித்தங்கள் கூறியிருக்கிறார்கள்.

அந்தப் பிராயச்சித்தம் செய்துகொள்ளாதவர்கள் கொடிய நரக துன்பங்களை அடைவார்கள். ஆகையினால், வைத்தியன் நோயின் நிதான மறிந்து அதற்குத் தக்கபடி சிகிச்சை செய்வதுபோல், சொற்பமாகவோ மிகுதியாகவோ ஏற்பட்டுள்ள பாபங்களுக்குத் தக்கவாறு, மரணம் அடைவதற்குமுன் விரைவில் பிராயச்சித்தஞ் செய்து கொள்ளவேண்டும்" என்று கூறினார்.

இதைக் கேட்டதும் வேந்தன், "மகாநுபாவரே, பாபம் நரகத் துன்பத்திற்கு உள்ளாக்குவது என்று தெரிந்தும், மானிடர் உலக சுகத்தில் ஈடுபட்டுப் பாவத்தையே பண்ணுகிறார்கள். ஆகையினால் பிராயச்சித்தம் எப்படிக் கைகூடும்? ஒருவன் ஒருவேளையில் பிராயச்சித்தம் பண்ணிக்கொண்ட பிறகும் பாபத்தையே செய்கிறான். யானையை அழுக்குப்போகக் குளிப்பாட்டினாலும் அது திரும்பவும் புழுதியை எடுத்துப் போட்டுக்கொள்கிறது. அதனால் அதைக் குளிப்பாட்டியது வீணாகிறது. இதுபோல் மானிடர் பிராயச்சித்தம் செய்துகொண்டு மறுபடியும் பாபத்தைப் பண்ணுகிறபடியால் பிராயச்சித்தம் வீணாகிறதே!" என்றான்.

ஸ்ரீசுகர், "பிராயச்சித்தம் செய்துகொண்டால்மட்டும் பாபம் ஒழியாது. பிராயச்சித்தகர்மம் ஞான சாதனமானது. பாபத்தை அடியோடு ஒழிக்க ஞானமே முக்கியமான பிராயச்சித்தம். நியமாநுஷ்டான முடையவர்கள் மெள்ள மெள்ளத் தத்துவஞானத்தை அடைகிறார்கள். தருமம் உணர்ந்த ஜிதேந்திரியர்கள் பிராயச்சித்தத்தினாலும் கர்மபலத்தை விடுவதனாலும் உண்மையினாலும் தூய்மையினாலும் சரணாகதியினாலும் பாபத்தை ஒழிக்கிறார்கள். பகவானையே சரணாகதியாக அடைந்து பக்தி செலுத்தும் உத்தமர்கள் காலக்கிரமத்தில் பரமபதம் அடைவார்கள். ஆகையினால் இவ்வுலகத்தில் பகவத்பக்தியே நற்கதியைத்

தாக்கூடிய சிறந்த மார்க்கம். இதனை விளக்க ஒரு கதை உண்டு" என்று மேலே கூறலானார் :—

கன்னியாகுப்ஜம் என்கிற பட்டணத்தில் அஜாமிளன் என்றொரு பிராம்மணன் இருந்தான. அந்த வேதியன, சூது, கொலை, களவு, விபசாரம் முதலிய தீய செய்கைகளைச் செய்துகொண்டிருந்தான். இவற்றையன்றிப் பிராணிகளை யெல்லாம் துன்புறுத்திக்கொண்டும் இருந்தான். இப்படிப் பட்ட கொடிய பாவிக்குப் பத்துப்பிள்ளைகள் இருந்தனர். அவர்களில் கடைசிப் பிள்ளையாகிய நாராயண னென்பவனிடம் அஜாமிளன் அளவு கடந்த அன்பு பாராட்டிவந்தான். உண்ணும்போதும் உறங்கும்போதுங் கூட அவன் பிள்ளையை விட்டுப் பிரிய மனம் பொறுக்க மாட்டான்.

இப்படியிருந்த அஜாமிளனுக்கு ஆயுள் முடியுங் காலம் சமீபித்தது. அப்பொழுது அவனுக்கு ஒரு கொடிய நோய் கண்டது. அதில் அவன் மிகுந்த தொந்தரவடைந்து தேகம் மெலிந்து பிராணன் போகும் நிலையையுற்றான், அந்த வேளையில் அவனுடைய தேகம் வெயர்த்தது; நடுக்க மடைந்தது. அப்பொழுது யமதூதர் அவன்முன் தோன்றினர். அதனால் அவன் பயமடைந்தான்; தன் கடைசிப் புத்திரனான நாராயணனைப் பார்க்க விரும்பினான். அவனை, "நாராயணா! அடே நாராயணா!" என்று அழைத்தான. அவன் இவ்வாறு அழைத்த அக்கணமே, ஸ்ரீமந் நாராயணனுடைய தூதர்களும் தோன்றினார்கள். பிறகு யமதூதர்களுக்கும் நாராயணனுடைய தூதர் களுக்கும் வாக்குவாதம் உண்டாயிற்று.

யமதூதர்கள்:— இந்த அஜாமிளன் மகா பாவி. தன் மரபொழுக்கங் கெட்டுத் திரிந்தவன். நாங்கள் இவனை

யமதருமராஜாவினுடைய ஆணைப்படி பிடித்துப்போக வந்தோம்.

நாராயண தூதர்கள், "இவன் கொடிய பாபஞ் செய்தவனே யானாலும், 'நாராயணா வா' என்று இந்த வேளையில் அழைத்தபடியினால் இவனுடைய பாபங்கள் எல்லாம் பறந்துபோய்விட்டன.

"பக்திசெய் தாயினும் பகைசெய் தாயினும்
வித்தக னொருவன்பேர் விளம்பற் காயினும்
ஒத்துநா ராயணா வெனவு ரைப்பரேல்
கொத்துவெம் பாதகம் குலைந்து சாம்புமால்"

என்று கூறியிருக்கிறார்க ளல்லவா? நாராயணா, என்னும் நான்கு அட்சரங்கள் பிறவித் துன்பத்தை நீக்கும். கொலை முதலிய கொடிய பாதகங்களை ஒழிக்கும். அஞ்ஞானத்தைப் போக்கும்.

"தும்மினு மிருமினுந் துயர மிக்குளம்
விம்மினும் வீழினும் வினைசெய் போதிலும்
அம்மவிந் நாலெழுத் தறைவ ரேலவர்
செம்மலர் மால்கழல் சேர்தல் திண்ணமே"

என்று கூறியிருக்கிறார்கள். ஆதலின் இவன் தன் அன்பான புத்திரனை இந்த வேளையில் அழைத்ததும் நாராயணா என்னும் உச்சாரணமானது இவனை இவனது கொடிய பாபங்களிலிருந்து விடுவித்துவிட்டது. ஆகையினால் இவன் புண்ணியாத்மா; இவனை விட்டுப் போங்கள். உங்கள் தலைவராகிய காலக்கடவுளுக்குக் கூறுங்கள். அவர் இங்கு நடந்தது முறையென்று ஒப்புக்கொள்வர்" என்று கூறி யமதூதர்களை ஓட்டிவிட்டனர்.

யமதூதர்கள் சென்று தருமராஜனிடம் இச் செய்தியைக் கூறினார்கள்; "எல்லாப் பிராணிகளுக்கும் நீரே பிரபு; கர்மானுகுணமாகத் தண்டனை பண்ணுகிறவர்; மானிடர்களுடைய புண்ணிய பாபங்களைப் பிரித்து அறிகிறவர். இப்படிப்பட்ட உம்முடைய ஆணை, இது வரையில் மானிட உலகத்தில் தடுக்கப்பட்டதில்லை. இது ஆச்சரியமா யிருக்கிறது" என்றும் கூறினார்கள்.

இதைக்கேட்டதும் தருமராஜன், "அஜாமிளன் தன் பிராணன் போகும் தருணத்தில் பகவானுடைய நாமத்தை உச்சரித்திருக்கிறான். ஆதலின் அவனை நீர் பிடிப்பதற்கு இயலாது. திருமாலினுடைய திருவடித் தொண்டரிடம் நமது ஆணை செல்லாது. இனி நீங்கள் மணிவண்ணனாகிய அந்த நாராயணனுடைய நாமம் சொல்லும் தொண்டரிடம் செல்லாதிருக்கக் கடவீர்! தூதர்களே, என்னைக்காட்டிலும் வேறாய் ஸ்தாவர ஜங்கமங்களுக்குத் தலைவரான கடவுள் ஒருவர் உண்டு. நான் மானிடர்களுக்குள் பாபிகளைத் தண்டிக்கும் ஓர் அதிகாரியே யாதலால் அக்கடவுளுடைய கிங்கரன். பகவானுடைய நாம உச்சாரணத்தினாலல்லவா மகாபாதகனாகிய அஜாமிளனும் காலபாசத்தினின்றும் விடுபட்டான்! ஆகையினால் பகவானுடைய நாம உச்சாரணம் சகல பாபங்களையும் போக்கிவிடுமென்பதில் ஐயமில்லை. பிரகிருதி வாசனையினால் ஒருகால் பாபம் உண்டாயின், அதையும் பகவானுடைய நாம சங்கீர்த்தனம் போக்கிவிடும். ஆகையினால் ஹரிபக்தருடைய சமீபத்திற் செல்லாதீர்கள்" என்று கூறினான். யமதூதர்கள் கேட்டு ஆச்சரியமடைந்து பகவானுடைய நாம உச்சாரண மகிமை பெரிதென்று உணர்ந்தார்கள்.

---

# பதினைந்தாம் அத்தியாயம்

## தக்ஷவம்ச வரலாறு

பரீக்ஷித்து மகாராஜனும் பகவானுடைய நாம உச்சாரண மகிமை யுணர்ந்து ஸ்ரீ சுகரை நமஸ்கரித்து, "ஸ்வாமி, ஸ்வாயம்புவ மந்வந்தரத்தில் அசுரர்கள், நாகர்கள், பறவைகள், மிருகங்கள் முதலியவை எவ்வாறு உண்டாயின? இதைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்று கேட்டான்.

சுகர் கூறலானார் :—

மகாராஜனே! பிராசீன பரிகிசுவினுடைய பிள்ளைகளான பிரசேதசுக்கள் சமுத்திர மத்தியிலிருந்து வெளியில் வந்து பார்த்தார்கள். உலகமெல்லாம் மரம், செடி, புல், பூண்டு முதலியவைகளாலே நிறைந்திருப்பது கண்டு, 'என்ன இது? வாசத்திற்கு இடமில்லாமல் இவ்வாறு இவைகள் மண்டியிருக்கின்றன' என்றெண்ணிச் சினங்கொண்டு வாயுவையும் அக்கினியையும் படைத்து அவற்றை எரிக்கத் தொடங்கினார்கள். அதைக் கண்ட ஓஷதிகளுக்கு அதிபதியாகிய சந்திரன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் இந்த விருக்ஷங்களை அழிப்பது பெரிதன்று. ஸ்ரீ ஹரியானவர் இந்த விருக்ஷங்களையும் ஓஷதிகளையும் உணவிற்காகப் படைத்தார். உத்தமர்களே! பெரியோர்களுடைய மார்க்கமான சாந்தியை அனுசரித்திருங்கள். கோபத்தை அடக்குங்கள். குழந்தைகளுக்குத் தாய்தந்தையர்களும், கண்களுக்கு இமைகளும், மாதர்களுக்கு அவர்களுடைய கணவர்களும், குடிகளுக்கு அரசனும், துறவிகளுக்குக் கிருகஸ்தர்களும், அஞ்ஞானிகளுக்கு ஞானிகளும் உறவினரும் நண்பருமா யிருப்பார்கள். சகலப் பிராணிக

ளுடைய தேகங்களுக்குள்ளேயும் ஏவுதற் கர்த்தாவாய் அந்தராத்மாவான ஸ்ரீஹரி இருக்கிறார். ஆகையினால் எல்லாவற்றையும் அந்தர்யாமியான ஸ்ரீஹரிக்கு ஸ்தான மாகப் பாருங்கள். அப்பொழுது ஸ்ரீஹரி உங்களால் ஆராதிக்கப்படுவார். கோபத்தை அடக்குகிறவனே பெரியவன்" என்று கூறி அவர்களுடைய கோபத்தைத் தணித்துச் சமாதானம் பண்ணிப் பிரமலோசனை யென்கிற பெண்ணை அவர்களுக்குக் கொடுத்துவிட்டுப் போனான். அந்தப் பெண்ணை அவர்கள் மணந்துகொண்டார்கள்.

அவர்களுக்குத் தக்ஷர் பிள்ளையாகப் பிறந்தார். அவர் வெகுகாலம் தவஞ்செய்தார். முடிவில் பகவான் அவருக்குப் பிரத்தியக்ஷமாகி ஒரு பெண்ணைக் கொடுத்தார். அந்த மாதை அவர் மணந்துகொண்டு பல பிள்ளைகளைப் பெற்றார். அவர்களுக்கு ஹரியசுவர்கள் என்று பெயர். தக்ஷர் அவர்கள் எல்லோரையும் கிருகஸ்த தர்மத்தை மேற் கொண்டு காலங்கழிக்கும்படிக் கட்டளையிட்டு அனுப் பினார். அவர்கள் ஸிந்து நதியின் முகத்துவாரத்தில் உள்ள நாராயண ஸரஸிற்குப்போய் அங்கே ஸ்நானஞ் செய்தார்கள். அது புண்ணிய புருஷர்களாலே பரிசுத்தம் செய்யப்பட்ட திவ்ய தீர்த்தம்; ஆதலினால், அதில் நீராடியதும் அவர்களுக்கு இருந்த காமக்குரோதங்க ளெல்லாம் நீங்கின. உடனே அவர்களுக்குப் பரம்பொருளை அடையவேண்டுமென்கிற எண்ணம் உண்டாயிற்று. அந்த எண்ணம் உதயமானதும் அவர்கள் தவஞ்செய்யத் தொடங்கினர். அவர்களுக்குமுன் நாரதர் பிரசன்னமாகி, அவர்கள் எல்லோருக்கும் ஞானோபதேசம் செய்து பரமபதம் அடையும்படிச் செய்வித்தார்.

இவ்வாறு தம்முடைய மக்கள் எல்லோரும் நாரதராலே வேறுவிதமான புத்தியை அடைந்து காணாமற் போனதை அறிந்த தக்ஷர், மிகவும் விசனப்பட்டுப் புத்திர

சோகம் அடைந்தார். பிரம்மா அவரைச் சமாதானஞ் செய்தார். பிறகு தக்ஷருக்கு அசக்கினி என்னும் மனைவியினிடம் அநேகம் பிள்ளைகள் உண்டானார்கள். அவர்களும் மகா விரதசீலர்களாய் இருந்தார்கள். தக்ஷர் அவர்களுக்கும் இல்லற நெறியை அநுஷ்டிக்கக் கட்டளை யிட்டார். அவர்களும் நாராயண ஸரஸுக்குச் சென்று நீராடினர். நீராடிய அளவில் காமக்குரோதம் முதலிய சித்தமலங்கள் நீங்கப்பெற்று அங்கிருந்து தவம்புரிந்தனர். அவர்கள் முன்பும் நாரதர் பிராப்தமானார். அவர்களைப் பார்த்து, "நீங்கள் உங்கள் சகோதரர்களுடைய மார்க்கத்தைத் தெரிந்துகொள்ளுங்கள். சகோதரர் களுடைய மார்க்கத்தைப் பின்பற்றுகிறவன் தேவதை களோடு தேவலோகத்தில் சந்தோஷித்துக் கொண் டிருப்பான்" என்று கூறி, பெரிய தாயின் பிள்ளைகளுக்கு முன்செய்தபடி உபதேசம் செய்தார். அதனால் அவர்களும் தம் முன்னவர்களைப்போல் பரமபதம் அடைந்தனர்.

தம் மக்கள் இவ்வாறானதைக் கேட்ட தக்ஷர் மிகுந்த துக்கம்அடைந்து, பிறகு மனம் தேறி நாரதரைக் கண்டு கோபங்கொண்டு, "சத்புருஷருடைய வேஷம் பூண்டவனான நீ, என்னுடைய பிள்ளைகளுக்குத் துறவற மார்க்கத்தைக் காண்பித்தமையால் எனது காரியம் கெட்டுவிட்டது. கர்ம மார்க்க மரியாதையை உடையவர்களாயும் சாதுக்களாயும் கிருகஸ்தர்களாயும் இருக்கிற எங்களுக்கு, நீ பொறுக்க முடியாக் குற்றத்தைச் செய்துவிட்டாய். அதைப் பொறுத்தோம். ஆயினும் உனக்கு உலகங்களிலே இட மில்லாமற் போகக்கடவது" என்று சபித்தார். அந்தச் சாபத்தை நாரதர் பொறுமையோடு ஏற்றுக்கொண்டார். தீமை செய்தவர்க்குத் தீமைபுரிதல் பெரியோருடைய தன்மையல்லவாதலால் பொறுத்தார்.

அப்பால் தக்ஷர் அறுபது பெண்களைப் பெற்றார். அவர்களில் பத்துப் பெண்களைத் தர்மதேவதைக்கும், பதின்மூவரைக் காசியபருக்கும், இருபத்தேழு பேரைச் சந்திரனுக்கும், புதன், அங்கிரசு, கிரிசாசுவன் இம்மூவருக்கும் ஒவ்வொருவருக்கும் இரண்டு இரண்டு பெண்களாக ஆறு பெண்களையும், காசியபருக்கு நான்கு பெண்களையும் கொடுத்தார். இவ்வாறு விவாகம் செய்விக்கப்பட்ட அப்பெண்களின் மூலமாக உலகத்தில் அசுரர்களும், நாகர்களும், பசு பட்சிகள் முதலியனவும் உண்டாயினர்.

---

## பதினாறும் அத்தியாயம்

### விருத்திராஸுர வதம்

பரீக்ஷித்துக்கு இந்த வரலாறு கூறிய சுகர், தேவ சபையைப்பற்றி இயம்பத் தொடங்கினார் :

ஒரு சமயம் தேவகுருவாகிய பிருஹஸ்பதி தேவேந்திரனுடைய சபைக்குப் போனார். தேவேந்திரன் ஐசுவரியச் செருக்கினால் அவரைத் தக்கபடி உபசரியாமல் இருந்தான். அதனால் பிருகஸ்பதி அந்தச் சபையை விட்டுச் சென்றார். பிறகு தேவேந்திரன் தன் குருவிற்குத் தான் செய்த குற்றத்தை உணர்ந்தான். "என்ன காரணத்தினால் சபையிலே வந்த என் குருநாதருக்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்யாதொழிந்தேன்? அது செல்வச் செருக்கினால் அல்லவா? இப்படிப்பட்ட செல்வத்தை அறிவுடையவன் விரும்புவானா? இப்போதே குருவைத் தேடி அடைந்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று தன்னை நிந்தித்துக்கொண்டு

குருவைத் தேடினான்; குருவைக் காணவில்லை. ஆகையினால் பெருந்துக்கம் அடைந்தான்.

இவ்வாறு பிருஹஸ்பதி இந்திரனை விட்டு நீங்கியதை அறிந்த அசுரர்கள், தேவர்களை எதிர்த்துத் தாக்கினார்கள். தேவர்கள் அசுரர்களுடைய உபத்திரவம் பொறுக்க மாட்டாமல் பிரம்மாவினிடம் போய் முறையிட்டார்கள். பிரம்மா தேவேந்திரனைப் பார்த்துச் சொல்லலானார்: "குருவை அநாதரவு பண்ணியதால் வந்த சங்கடம் இது! ஆயினும் ஒன்று கூறுகின்றேன். அப்படிச் செய்யுங்கள் :—

துவஷ்டா என்னும் ஒரு பிராம்மணன் இருக்கிறான். அவனுக்கு விசுவரூபன் என்கிற ஒரு பிள்ளை இருக்கிறான். அவன் நல்ல சிஷ்டன். அவ்வந்தணனை நீங்கள் குருவாக அடையுங்கள். அவனுக்கு அசுரர்களிடம் சிறிது அன்பு உண்டு. அவன் இந்தச் சமயம் உங்களுக்குக் குருவாயிருந்து வேண்டிய உதவி செய்வான்" என இவ்வாறு கூறி அனுப்பினார்.

தேவேந்திரன் பிரம்மா சொன்னபடியே விசுவரூபன் என்னும் அந்த அந்தணனையே குருவாக அடைந்தான். அந்தக் குரு சுக்கிராசாரியருடைய வித்தையினாலே இரக்ஷிக்கப்பட்டிருக்கிற அசுரர்களுடைய சம்பத்தை நாராயண கவசமென்கிற வித்தையினாலே பிடுங்கித் தேவேந்திரனுக்குக் கொடுத்தான்; கொடுத்ததுமல்லாமல் அந்த நாராயண கவசத்தை இந்திரனுக்கு உபதேசமும் பண்ணினான். இதனால் இந்திரன் அசுரர்களை வென்றான்.

இப்படியான பிறகு விசுவரூபன் யாகஞ்செய்தான். அந்த யாகத்தில் அவன் தேவர்களுடைய மேன்மையைக் குறித்து ஆகுதி கொடுப்பதாக வெளிக்குக் காட்டிக் கொண்டே வந்தான். மறைவாக அசுரர்களுடைய மேன்மையை உத்தேசித்து ஆகுதி கொடுத்து வந்தான்.

இந்த வஞ்சகத்தை அறிந்த இந்திரன் அவனைத் தன் குருவென்றும் பாராமல் ஒரே வெட்டாக வெட்டிக் கொன்றுவிட்டான். வெட்டுண்ட விசுவரூபன் பிராம்மணனுதலால் இந்திரனைப் பிரம்மஹத்தி பிடித்துக்கொண்டது. அந்தத் தோஷத்தை அவன், பூமி, மரம், ஜலம், ஸ்திரீ இவர்களுக்குப் பகிர்ந்துகொடுத்துப் பரிசுத்தனானான். அவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்துத் திருப்தி செய்வித்தான்.

விசுவரூபன் இவ்வாறு இறந்த செய்தியை அறிந்த அவன் தந்தை துவஷ்டா இந்திரன்மீது கோபங்கொண்டு, அவனைக் கொல்லத்தக்க ஒருவனை உண்டாக்கக் கருதி ஆபிசார ஹோமம் செய்தான். அதிலிருந்து பயங்கர ரூபமுடைய ஒரு புருஷன் பிரளய காலத்திலே லோகங்களைச் சங்கரிக்கிற யமன்போலத் தோன்றினான். அவனைக் கண்ட எல்லோரும் பயந்து திக்குகள்தோறும் ஓடினார்கள். அவன் விருத்திராஸுரன் என்னும் பெயர் பெற்றான். அவன் தேவர்களைத் துரத்தித் துரத்தி அடித்தான். தேவர்கள் பிரயோகிக்கும் அஸ்திரசஸ்திரங்களை யெல்லாம் விழுங்கி விட்டான். தேவர்கள் இன்னது செய்வதென்று தெரியாதவர்களாய் இவனிடமிருந்து எப்படித் தப்புவதென்று கலங்கித் துக்கப்பட்டார்கள்; வேறு கதியைக் காணமற் பகவானைச் சரணமாக அடைந்து துதித்தார்கள்.

பகவான் அவருக்குப் பிரத்தியக்ஷமானார். தேவர்கள், அவரிடம் தங்கள் குறைகளைச் சொல்லிக்கொண்டார்கள். பகவான், "பூலோகத்தில் ததீசி யென்றொரு முனிவர் இருக்கிறார். அவரிடம் போய் அவரைப் பணிந்து உபசரித்து அவருடைய உடலைக் கேளுங்கள். அவர் தம் உடலைக் கொடுப்பார். அந்த உடலின் முதுகெலும்பினால் ஓர் ஆயுதம் செய்து கொள்ளுங்கள். அந்த ஆயுதம்

உங்களுக்கு ஜயத்தைக் கொடுக்கும்" என்று கூறி அனுப்பினர்.

தேவேந்திரன், பகவான் திருவாய்மலர்ந்தருளியபடியே ததீசி முனிவரிடம் போய் அவரை வணங்கி, "ஸ்வாமி, தேவர்களுடைய நன்மையின்பொருட்டுத் தங்கள் உடலைக் கொடுத்தருளவேண்டும்" என்று கேட்டான். ததீசி முனிவர் சகல தருமங்களையும் உணர்ந்தவர். ஆகையால் பலருடைய நன்மையின்பொருட்டுத் தாம் இறந்துபோதல் உத்தமமாகும் என்று கருதித் தம் சரீரத்தை விட்டு ஹரிசரணாரவிந்தம் அடைந்தார். இந்திரன் அந்த முனிவருடைய முதுகெலும்பினல் தேவதச்சனைக்கொண்டு வச்சிராயுதம் ஒன்று உண்டாக்கி விருத்திராஸுரனை எதிர்த்து அவனோடு கோர யுத்தம் புரிந்தான். அப்பொழுது தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் கடும்போர் மூண்டது. அந்த யுத்தத்தில் விருத்திராஸுரன் எல்லோரும் தன்னைப் புகழும்படியாய் விசித்திரமான யுத்தஞ் செய்தான். முடிவில் அவன் இந்திரனை விழுங்கிவிட்டான். தேவர்கள் துக்கமடைந்து கதறினார்கள். விருத்திராஸுரனுடைய வயிற்றுக்குள்ளே போன இந்திரன் நாராயண கவசத்தினலும் யோகமாயாப் பிரபாவத்தினலும் தன்னைக் காத்துக்கொண்டு வச்சிராயுதத்தினல் அவனுடைய வயிற்றைப் பிளந்துகொண்டு வெளியே வந்தான். பிறகு விருத்திராஸுரன் மரணமடைந்தான். அவனுடைய ஆத்மா எல்லோருடைய முன்னிலையிலும் ஜோதி ரூபமாக வெளிவந்து பகவானிடம் லயமடைந்தது.

விருத்திராஸுரன் சிறந்த பிராம்மணனாகையினல் அவனைக் கொன்றதனல் இந்திரனுக்குப் பிரம்மஹத்தி தோஷம் உண்டாயது. அதற்குப் பயந்த இந்திரன் ஆயிரம் வருஷகாலம் வரையில் தாமரைத் தண்டினுள்ளே வாசம் பண்ணிவந்தான். அகண்ட பூமண்டலாதிபதியாய்

விளங்கிய நகுஷன் இந்திரனுடைய ஸ்தானத்திற்கு வந்து அந்த ஆயிர வருஷகாலமும், வித்தை, தவம், யோகம் இவற்றின் பலத்தினுல் சுவர்க்கத்தை ஆண்டுவந்தான். முடிவில் அவன் தன்னுடைய கெட்ட நடத்தையினுல் இந்திராணியினுடைய சாபத்திற்கு ஆளாகிப் புவியில் மலைப்பாம்பாகப் பிறந்தான்.

பிறகு தேவர்கள் அசுவமேத யாகஞ் செய்து இந்திரனைப் பிரம்மஹத்தி தோஷத்தினின்றும் விடுவித்தார்கள்.

இந்திரன், அப்பால் சுவர்க்கலோகம் போய்த் தன் பதவியை ஏற்று அரசுபுரிந்துகொண்டு சுகமாக வாழ்ந்து வந்தான்.

---

## பதினேழாம் அத்தியாயம்

---

### சித்திரகேதுவின் வதை

குருவை அவமதித்த இந்திரனுக்கு இவ்வாருன இடர்கள் வந்தனவெனக் கூறியபின், பரீக்ஷித்து ஸ்ரீ சுகரைப் பார்த்து, "ஸ்வாமி, விருத்திராஸுரனுக்கு இப்படிப்பட்ட மகிமை எப்படி ஏற்பட்டது?" என்று கேட்டான். ஸ்ரீ சுகர் கூறுகிருர் :—

சூரசேன தேசத்தில் சித்திரகேது என்னும் ஒரு வேந்தன் இருந்தான். அவன் அகண்ட மண்டலாதிபதியாய் விளங்கினுன் ; அவனுக்கு அநேக மனைவிமார்கள் இருந்தார்கள். இருந்தும் புத்திர பாக்கியம் இல்லாமற்

போயிற்று. உதாரகுணம், அழகு, இளமை, வித்தை, ஐசுவரியம், ஞானம் முதலிய சகல சம்பத்தும் நிறைந்திருந்தும் அவனுக்குப் புத்திரன் இல்லாக் குறையே பெருங்குறையானபடியினால் சந்தோஷம் இல்லாதவனாய் இருந்தான்.

அப்படியிருந்த அரசனுடைய அரண்மனைக்கு ஒருநாள், ஆங்கிரஸ மகாமுனிவர் எழுந்தருளினார். சித்திரகேது மகாபுத்திமானாகையினால் பெரியோர்களை வரவேற்கத்தக்க முறையிலே வரவேற்று மிகவும் பணிவோடு வேண்டிய உபசரணைகளைச் செய்து மகிழ்வித்துத் தானும் தன் ஆசனத்தில் அமர்ந்தான். அப்பொழுது அந்த மகரிஷி அரசனுடைய முகத்தைப் பார்த்து, "வேந்தே, ஏதோ மனோரத மொன்று நிறைவேறப்பெறாமல் கவலைகொண்டிருப்பதாக அறிகிறேன். அப்படி ஏதேனும் உண்டா?" என்று கேட்டார்.

அரசன் உடனே எழுந்து அடிபணிந்து தனக்குள்ள குறையைச் சொல்லிக்கொண்டான். மகரிஷி அவன்மீது இரக்கங்கொண்டு அவனிடம் யக்ஞசேஷமான சருவை (மந்திரித்த சோற்றைக்) கொடுத்து, "வேந்தே, இதனை உன் பட்டமகிஷியான கிருதத்யுதி என்பவளுக்குக் கொடு; கொடுத்தால் உனக்குப் புத்திரபாக்கியம் உண்டாகும்" என்று அநுக்கிரகஞ் செய்து விடைகொண்டு சென்றார்.

அரசன் மகரிஷியின் ஆக்ஞைப்படி சருவைத் தன் பட்டமகிஷிக்குக் கொடுத்தான். பிறகு அவள் கருப்பந் தரித்து உரிய காலத்தில் ஒரு புத்திரனைப் பெற்றாள். சித்திரகேது பிள்ளையைப் பெற்ற அந்த மனைவியினிடம் மாத்திரம் அத்தியந்த அன்பு பாராட்டிவந்தான்; மற்றவர்களிடத்தில் அவ்வளவு அன்பு பாராட்டவில்லை. இதனால் மனம் நொந்த அவர்கள், ஒருநாள் அந்தப்

பிள்ளைக்கு விஷத்தைக் கொடுத்துவிட்டார்கள். அதனுல் அந்தப் பிள்ளை மரணமடைந்தது. அந்தோ! அவ் விறைவனும் அவன் மனைவியும் என்ன செய்வார்கள், பாவம்! அளவற்ற துயர்க்கடலில் மூழ்கிக் கரை காணுதவர்களாய்த் தவித்தார்கள்.

அப்படித் தவித்த அந்த வேந்தனிடம் ஆங்கிரஸ மகரிஷியும் நாரதரும் வந்து அவனுக்குப் பலவாறு சமாதானங் கூறித் தேற்றிப் பார்த்தார்கள். புண்ணிய பாவத்தின் ஸ்வரூபம், ஜீவாத்மாவின் ஸ்வரூபம் முதலியவற்றை எடுத்து விரிவாகக் கூறினுர்கள். என்ருலும் அரசன் தேறவில்லை. இது கண்ட நாரதர் இறந்துபோன அந்தப் பிள்ளையை உயிர்ப்பித்து, "உன்னைப் பெற்றவர்கள் அடையும் துக்கத்தைப் பார். நீண்ட ஆயுளுடன் நீ இருந்து உன் தந்தையினுடைய செல்வத்தை அநுபவி" என்று சொன்னுர்.

"விட்டுவிட்ட சரீரத்தில் மீண்டும் வந்து நான் பொருந்தமாட்டேன். புண்ணிய பாபரூப கர்மங்களினுலே தேவர்கள், விலங்குகள், மனிதர்கள் என்கிற பிறவிகளிலே சுழலாநின்ற எனக்கு எந்தப் பிறவியிலே இவர்கள் மாதா பிதாக்கள்? சகல பிராணிகளும் ஒன்றுக்கொன்று கிரமமாகப் பந்துவென்றும் ஞாதியென்றும் பகைவரென்றும் வாழ்கின்றன. எவனுக்கு எந்தப் பிராணி எதுவரையில் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அதுவரையில் அது அவனுடையது என்கிற சம்பந்தம் இருக்கிறதே யொழிய மற்றப்படி ஏது சம்பந்தம்?" என்று கூறி அந்தச் சிசு ஆவி பிரிந்தது. இதுகண்ட எல்லோரும் ஆச்சரியம் அடைந்தார்கள். சித்திரகேதுவும் அவன் மனைவியும் அந்தக் குழந்தையினிடம் வைத்திருந்த பாசத்தையும் சோகத்தையும் விட்டொழித்து அதை எடுத்துக் கொளுத்தி, செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்தார்கள். அந்தச் சிறுவனைக்

கொன்ற ஸ்திரீகளெல்லோரும் தங்களுடைய பிழையை எண்ணி வருந்தி வெட்கமடைந்தார்கள்; பாலஹத்தி தோஷம் நீங்குவதற்குரிய விரதம் அநுஷ்டித்தார்கள். நாரதரும் ஆங்கிரஸ மகரிஷியும் அந்தச் சித்திரகேதுவுக்குப் பிரம்மவித்தையை உபதேசித்துச் சென்றனர். பிறகு அவனுக்குப் பகவான் தரிசனம் தந்து திவ்யஞானம் உண்டாகும்படி அனுக்ரஹம் செய்தார்.

திவ்யஞானம் பெற்ற சித்திரகேது ஒருவராலும் தடுத்தற்கரிய வீரமும் இந்திரிய பலமும் உடையவனாய், சித்தர், சாரணர், முனிவர்கள் ஸ்தோத்திரம் செய்ய மகாயோகியாய் விளங்கினான். அவன் ஒரு சமயம் தனக்கு மகாவிஷ்ணு தந்த விமானத்தின்மீது திக்குகள்தோறும் சஞ்சரித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது, பரமசிவம் பார்வதிதேவியைத் தமது மடியில் வைத்துக்கொண்டு மகரிஷிகளின் மத்தியில் வீற்றிருப்பதைக் கண்டான். கண்டதும், "உலகங்களுக்கெல்லாம் குருவாக விளங்கும் இவர், சிறிதும் வெட்கமின்றிச் சபையில் தம் மடியில் ஸ்திரீயை வைத்துக்கொண்டு உலகத்து மனுஷனைப்போல் இருப்பது வெகு அழகாய் இருக்கிறது! நன்று நன்று இவர் பிரபாவம்! இவர் மஹா யோகியாம்" என்று கூறி நகைத்தான். இதனால் கோபங்கொண்ட பார்வதிதேவி, "அடே வணக்கமில்லாத் துஷ்டா, நீ அசுர ஜன்மத்தை அடையக்கடவாய்" என்று சபித்தாள். உடனே சித்திரகேது விமானத்தினின்றும் இறங்கிவந்து பார்வதி தேவியை வணங்கி, அவள் தந்த சாபத்தை ஏற்றுக் கொண்டான். பிறகு அவனுக்கு அசுரஜன்மம் உண்டா யிற்று. சித்திரகேது சிறந்த பக்தனானதனால் இந்த அசுர ஜன்மத்திலும் மகா மகிமையோடு விளங்கினான் என்று சுகர் கூறினார்.

பிறகு பரீக்ஷித்து ஸ்ரீ சுகரை நமஸ்கரித்து, மருத்துக்கள் தேவதைகளான வரலாற்றைக் கூறும்படி பிரார்த்தித்தார்.

ஸ்ரீ சுகர் கூறுகிறார் :—

காசியப ரிஷியினுடைய பத்தினியாகிய திதியென்பவள் ஒரு சமயம் அவரைப் பார்த்து, "ஸ்வாமி, என் மக்களைக் கொன்ற விஷ்ணுவுக்குச் சகாயனான இந்திரனைக் கொல்லத் தக்க புத்திரனை அடைய விரும்புகிறேன்" என்று கேட்டாள். காசியபர் இதைக் கேட்டதும் துக்கமும் பரிதாபமும் அடைந்து, மனைவியை நோக்கி, "அதற்கு நீ ஒரு வருஷ காலம் ஒரு விரதம் அநுஷ்டித்தல் வேண்டும். நடுவில் விரத பங்கம் ஏற்படுமானால் உனக்குப் பிறக்கும் அந்தப் புத்திரன் தேவேந்திரனுக்கு உறவினனாய்விடுவான்' என்று கூறி அந்த விரதம் அநுஷ்டிக்கவேண்டிய வழியைத் தெரிவித்தார்.

திதி அவ்வாறே விரதமிருந்தாள். இந்திரன் திதியினுடைய அபிப்பிராயத்தை உணர்ந்து அவளுடைய விரதத்திற்குப் பங்கஞ் செய்யக் கருதி அவளிடம் வந்து அவளுக்கு வேண்டிய பணிவிடைகள் செய்துகொண்டு தன் எண்ணத்தை முடிக்கச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான். ஒருநாள் மாலை வேளையில் திதி, விரதத்தால் உண்டாகிய இளைப்பினால் நித்திரைபோனாள். அதுசமயம் பார்த்து இந்திரன் அவளுடைய கருப்பத்தைத் தன் வச்சிராயுதத்தின் வன்மையினாலே ஏழு கண்டமாக அறுத்து மறுபடி ஒவ்வொரு கண்டத்தையும் ஏழு ஏழாக அறுத்தான். இவ்வாறு அறுபட்டும் அந்தக் கருப்பம் பகவானுடைய கிருபையினால் மரித்துப்போகாமல் இருந்து இந்திரனைப் பார்த்து, "உன்னுடைய உடன்பிறப்பை ஏன் தொந்தரை செய்கிறாய்?" என்று கேட்டது. இந்திரன், "இனி அஞ்ச வேண்டாம்" என்று கூறினான். பிறகு அந்த மருத்துக்கள்

நாற்பத்தொன்பது கூறும் நாற்பத்தொன்பது தேவர்கள் ஆனார்கள். பிறகு திதிதேவி விழித்துக்கொண்டு தன் கருப்பம் இவ்வாறானதற்குத் தன் விரதபங்கமே காரணம் என்று அறிந்தாள். ஆயினும் தேவர்களாக விளங்குவது கண்டு சந்தோஷமடைந்தாள். இந்திரனும் திதியினிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு மருத்துக்களுடனே தன் உலகம் சென்றான்.

பரீக்ஷித்து இவ்வாறு சுகர் கூறிய இப்புண்ணிய கதையைக் கேட்டு மகிழ்ந்தார்.

---

## பதினெட்டாம் அத்தியாயம்

——(o)——

### பிரகலாதன் சரித்திரம்

"எல்லாப் பிராணிகளுக்கும் அடைக்கல ஸ்தானமாயும் அநுகூலராயும் பரமகாருண்ய மூர்த்தியாயும் விளங்கும் பகவான், இந்திரன் பொருட்டு அசுரர்களையெல்லாம் ஏன் கொன்றார்? பரமானந்த சொரூபராகிய அவருக்குத் தேவர்களால் ஆவதென்ன? அசுரர்களால் ஆகாமற்போனதென்ன? இதனை எனக்கு விளக்கியருளல் வேண்டும்" என்று பரீக்ஷித்து மகாராஜா சுகரைக் கேட்டான்.

ஸ்ரீ சுகர் கூறலானார்:—

பகவான் விருப்பும் வெறுப்பும் இல்லாதவர். ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்கிற மூன்றும் பிரகிருதியினுடைய குணங்கள். பகவான் இவ்வண்டகோடிகளைப் படைக்கும் போது ராஜஸகுணப் பிரதானரான பிரம்மாவா யிருப்பர். படைத்தவற்றை ரட்சிக்குங்காலத்தில், சத்துவகுணப்

பிரதானரான விஷ்ணுவாக இருப்பர். அழிக்கவேண்டிய காலத்தில் தாமஸகுணப் பிரதானரான ருத்திரராக இருப்பர். இவ்வாறு பரப்பிரம்மத்தினிடம் ஆரோபிக்கிற இவ்விகாரங்க ளெல்லாம் அந்த மூன்று குணங்களினுலே அமைந்தனவாம்.

சத்துவகுணம் விருத்தியாகும் காலத்தில் தேவர்களையும், ராஜஸம் விருத்தியாகுங்காலத்தில் அசுரர்களையும், தாமஸம் விருத்தியாகுங்காலத்தில் ராக்ஷஸர்களையும் அந்த அந்தக் காலாநுகூலங்களைக்கொண்டு பகவான் அந்த அந்தத் தேகங்களிலே பிரவேசித்து அவரவர்களை விருத்திபண்ணுகிருர். கட்டை முதலியவற்றில் தீயானது அவற்றையன்றி வேருக அறியப் படாததுபோல் பகவானுனவர், தேவாதி சரீரங்களைக் காட்டிலும் வேருக அறியப்படுவதில்லை. ஆயினும் ஞானிகள், தேவாதி சரீரங்களிலே பிரவேசித்திராநின்ற அந்தப் பரமாத்மாவைக் காரியத்திலுலே அறிகின்றனர். ஈசுவரன் தாம் நியமித்த பிரதான புருஷர்களின்பொருட்டு முக்குணங்களுக்கு ஆசிரயமான காலத்தைத் தாமே உண்டாக்குகிருர். எந்தக் காரணத்தாலும் எந்தக் காரியத்திலும் பகவான் பிரகிருதி புருஷருடைய சம்பந்தம் அடைவதில்லை. காலமானது சத்துவகுணத்தை விருத்தி பண்ணுகிறது, ஆகையினுலே பகவானும் சத்துவகுணப் பிரதானர்களான தேவகணங்களை ரட்சிக்கிருர்; தேவதைகளுக்குப் பகைவர்களாயும், ராஜஸ தாமஸ குணங்களை இயல்பிலேயே உடையவர்களாயும் இருக்கிற அசுரர்களைச் சங்கரிக்கிருர். வேந்தே, 'விருப்பு வெறுப் பில்லாத பகவானுக்குத் தேவர்களிடத்தில் அன்பும், அசுரர்களிடத்தில் சினமும் உண்டாதல் எவ்வாறு பொருந்தும்?' என்ற இதே கேள்வியை முன்னொரு காலத்தில் தருமபுத்திரர் கேட்க, நாரதர் கூறுகிருர் :—

சேதி தேசாதிபதியாகிய சிசுபாலன் என்பவன் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் பெரும் பகைகொண்டு அவரைத் திட்டினன். முடிவில் அவன் பகவானுடைய சக்கராயுதத்திற்கு இரையானன். அவனுடைய ஆத்மா ஜோதி சொரூபமாய்க் கிருஷ்ணபரமாத்மாவிடம் லயமடைந்தது. இதைக்கண்ட தருமபுத்திரர், "மகா கொடிய பாதகனுகிய இந்தச் சிசுபாலனுக்கு இந்த நல்ல பதவி எவ்வாறு கிடைத்தது?" என்று சந்தேகங் கொண்டு நாரதரைக் கேட்டார்.

நாரதர் சொல்லுகிருர் :—

"பகவானுக்கு நான் எனது என்னும் அபிமானம் இல்லே. ஆகையினுல் அவரிடத்தில் எந்தவிதமான பக்தியையும் செய்யலாம். கோபிகள் ஸ்நேகரூபமான பக்தியைச் செய்தார்கள். கம்ஸன் பயத்தினுல் பக்தி செய்தான். சிசுபாலன் பொருமையினுல் பக்திசெய்தான். விருஷ்ணி யாதவர்கள் உறவு ரூபமான பக்தியைச் செய்தார்கள். நீங்கள் அன்பினுல் பக்தியைச் செய்தீர்கள். நாங்கள் தியானரூபமான பக்தியைச் செய்கிருேம், தருமராஜனே, உங்கள் சிறிய தாயார் மக்களான சிசுபால தந்தவக்திரர்கள் இருவரும் பூர்வம் விஷ்ணுவினிடத்தில் பாரிஷித சிரேஷ்டர்களாயிருந்தவர்கள். பெரியோர்களுக்குச் செய்த அபராதத்தினுல் சாபமடைந்து இவ்வாறு பூலோகத்திற் பிறந்தார்கள்" என்று கூறி, மேலே பேசுவதற்குள் தருமபுத்திரர், "ஸ்வாமி, ஹரிதாஸர்களுக்குத் தீமை தரும்படியான அந்தச் சாபம் யாருடையது? அது எத்தகையது?" என்று கேட்டார். நாரதர், "வேந்தே, ஒருகால் பிரம்மபுத்திரர்களான ஸநகாதி மகரிஷிகள் பகவானேத் தரிசிக்கும்பொருட்டு வைகுண்டம் போனுர்கள். அங்குத் துவாரபாலகர்களாய் இருந்தவர்கள் இவர்களேத் தடுத்தார்கள். அதனுல் ஸநகாதிகள் சினங்கொண்டு,

'நீங்கள் இருவரும் மகாவிஷ்ணுவினுடைய ஸந்நிதானத்தில் வாசம் பண்ணுவதற்குத் தகுதியுடையவர்களல்லர். ஆகையினால் நீங்கள் அசுர ஜன்மத்தை அடையக் கடவீர்கள்' என்று சாபம் தந்தார். இந்தச் சாபத்தின்படி துவாரபாலகர்கள் இரணியகசிபு, இரணியாக்ஷன் என்னும் இரண்டு அசுரர்களாகப் பிறந்தார்கள். இவ்வாறு சபித்த ஸநகாதிகள் கிருபைகூர்ந்து அவர்களை நோக்கி, 'மூன்று ஜன்மத்துக்குப் பிறகு நீங்கள் மீண்டும் இந்த விஷ்ணு பதத்துக்கு வருவீர்கள்' என்று அநுக்கிரகமும் செய்தார்கள். இரணியகசிபுவை நரசிங்கமூர்த்தி சங்கரித்தார். இரணியாக்ஷனை வராகமூர்த்தி சங்கரித்தார். இரணியகசிபு நாராயணனிடத்தில் துவேஷங்கொண்டான்; அதனால், ஹரிபக்தனாக விளங்கிய தன் புத்திரன் பிரகலாதனைக் கொல்லத் தன்னால் இயன்றவரையில் முயன்றும் சாமர்த்திய மில்லாதவனானான்.

"இப்படிப்பட்ட அந்த அசுரர்களிருவரும் அப்பால் இராவண கும்பகர்ணர்களாகப் பிறந்தார்கள். அவர்களைப் பகவான் இராமாவதாரம் எடுத்து வதஞ்செய்தார். அப்பால் அவர்கள் இப்போது சிசுபாலன், தந்தவக்திரன் என்கிற க்ஷத்திரியர்களாகப் பிறந்தார்கள். இந்தப் பிறவியில் அவர்கள் கிருஷ்ணபகவானுடைய சக்கரத்தினால் சகல பாபங்களினின்றும் விடுபட்டுத் துவேஷமாகிற யோகத்தினாலே அச்சுதனுடைய சாரூப்பியத்தை அடைந்து விஷ்ணு பாரிஷிதர்களாய் அவருடைய சமீபத்தை அடைந்தனர்" என்றார்.

இவ்வாறு கூறிய நாரதரைப் பார்த்து, தருமபுத்திரர், "ஸ்வாமி, பரமபக்தனாகிய அந்தப் பிரகலாதனுடைய சரித்திரத்தைக் கிரமமாகச் கேட்க விரும்புகிறேன்" என்றார்.

நாரதர் கூறலானார்:—

தருமபுத்திரனே, இரணியாக்ஷனாகிய தன் தம்பியைப் பகவான் வராகாவதாரம் எடுத்துச் சங்கரித்தாரல்லவா? அதனால் பகவானிடம் இரண்யகசிபு கோபங்கொண்டு, அவரை ஒழித்துவிடுவதெனத் தீர்மானித்தான். விஷ்ணு வானவர் பிராம்மணர்கள் செய்யும் யக்ஞ சொரூபர்; தர்மமயமான புருஷர்; தேவர்கள், ரிஷிகள், பிதிர்க்களுக்கும் தருமத்துக்கும் பரகதியாயிருப்பவர் என்னும் இந்த உண்மையுணர்ந்து, பிராம்மணர்களையும் தேவர்களையும் இம்சிக்கத் தொடங்கினான். தேவர்களெல்லோரும் அவனுடைய இம்சை பொறுக்கமாட்டாமல் சுவர்க்க லோகத்தை விட்டுப் பூமியிலே வந்து ஒருவருக்கும் தெரியாமல் சஞ்சரிக்கலாயினர்.

இவ்வாறுசெய்தபின் இரணியகசிபு தான் ஒருவராலும் ஜயிக்கப்படாத பலத்தையும், மரண மில்லாமையையும், ஜகத்துக்கெல்லாம் தானே ஏகசக்ராதிபதியாக இருக்கும் தன்மையையும் பெறக் கருதி மந்தர பர்வதத்தினுடைய தாழ்வரையில் கால் பெருவிரலை மாத்திரம் பூமியில் ஊன்றிநின்று, கைகளை உயரத் தூக்கிக்கொண்டு விண்ணோக்கிய பார்வையுடன் கடுமையான தவம்புரிந்தான். அந்த அசுரனுடைய சிரசிலிருந்து தபோமயமான அக்கினி புகையுடனே தோன்றி லோகமெங்கும் பரவித் தகித்தது. அதனால் நதிகளும் கடல்களும் கொதிப்படைந்து கலங்கின. தீவுகளும் பர்வதங்களும் உள்ள பூமி நடுங்கியது. கிரகங்களுடனே நட்சத்திரங்கள் விழுந்தன, தேவர்கள் எல்லோரும் பிரம்மலோகம் போய் முறையிட்டார்கள். பிரம்மதேவர் உடனே இரணியனுடைய ஆசிரமம் வந்து அவனுக்குக் காட்சி கொடுத்து, "உனக்கு வேண்டும் வரமென்ன? நீ எதைக்குறித்து இப்படிப்பட்ட கடுமையான

தவம் புரிகின்றாய்? நீ செய்த இந்தத் தவம் பூர்விகர்களான ரிஷிகளும் செய்ததில்லையே!" என்று கூறினார்.

இரணியகசிபு உடனே பிரம்மாவை வணங்கி, "நீர் சிருஷ்டித்த பொருள்களுள் எதனாலும் எனக்கு மரணம் உண்டாகாதபடி அருள்புரிய வேண்டும். உள்ளும் புறம்பும், பகலிலும் இரவிலும், புவியிலும் விண்ணிலும், உம்மாலே சிருஷ்டிக்கப்படாத வேறு எந்தப் பொருள்களாலும், ஆயுதங்களாலும், மனிதர்களாலும் மிருகங்களாலும், உயிரில்லாத வஸ்துக்களாலும் உயிருடனே கூடிய வஸ்துக்களாலும், சுரர்களினாலும் அசுரர்களினாலும் எனக்கு மரணம் உண்டாகாமல் இருக்கவேண்டும். யுத்தத்திலே எனக்குச் சமானமாக எவரும் இருத்தல் கூடாது. சகலப் பிராணிகளுக்கும் நான் ஒருவனே தலைவனாக இருத்தல்வேண்டும். உமக்கிருப்பது போல அணிமாதி ஐசுவரியமும் எனக்கு இருக்கவேண்டும்" என்று கேட்டான். பிரம்மதேவர், "இரண்ய, உனது தவம் எமக்குப் பெருமகிழ்ச்சியைத் தந்தபடியால் நீ விரும்பியபடி உனக்கு எல்லா வரங்களையும் தந்தோம்!" என்று கூறித் தமது உலகம் போய்ச் சேர்ந்தார்.

இரணியகசிபு தவம்புரியச் சென்றிருந்த பொழுது தேவேந்திரன் தேவர்களுடன் படைதிரட்டிச் சென்று அசுரர்களை வென்று இரணியகசிபுவின் மனைவி லீலாவதி என்பவளைச் சிறைசெய்து தன் ரதத்தின்மீது எடுத்துக் கொண்டு சென்றான். லீலாவதி அப்பொழுது கர்ப்பமாக இருந்தாள். இதனை அறிந்த நாரதர், வழியில் இந்திரனைச் சந்தித்து, "நீ ஏன் இந்தக் காரியம் செய்கிறாய்?" என்று கேட்டார். இந்திரன், "ஸ்வாமி, இவள் கர்ப்பமாயிருக்கிறாள். இவளுக்குப் பிள்ளை பிறக்குமாயின், அவன் அந்த இரணியனைவிடக் கொடியனாய் இருப்பானாதலால்

இவள் பிரசவிக்கிற வரையில் என்னிடம் வைத்திருந்து பிரசவித்தவுடன் அந்தப் பிள்ளையைக் கொன்றுவிட்டு எமது பகையைத் தீர்த்துக்கொள்ளக் கருதி இவ்வாறு இம்மாதைக் கொண்டுபோகிறேன். இவளை நான் ஒன்றும் செய்யப்போவதில்லை. பிரசவித்தபின் இவளை இவள் கணவனிடம் அனுப்பிடுவிடுவேன்" என்றான். நாரதர், இதைக்கேட்டதும் நகைத்து, "அடடா! என்ன காரியஞ் செய்தாய்? இவள் வயிற்றில் இருக்கும் பிள்ளை மஹா ஹரிபக்தன். இவனாலேதான் உங்களுக்கும் உலகங்களுக்கும் க்ஷேமம் உண்டாகப்போகிறது ஆகையினால் நீ எண்ணியபடி செய்வது நன்றன்று. இந்த மாதை என்னிடம் விட்டுச்செல். நான் தக்க ஏற்பாடு செய்கிறேன்" என்றார். இந்திரன் வேறு பேசாமல் அவ்வாறே லீலாவதியை முனிவரிடம் விட்டுச் சென்றான். நாரதர் லீலாவதியைத் தமது ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்று, அவள் வயிற்றில் இருக்கும் குழந்தையினுடைய க்ஷேமத்திற்காக அவளுக்குப் பரம உபதேசங்களைச் செய்தார்.

அந்தக் குழந்தைதான் பிரகலாதனென்கிற ஹரிபக்த சிரோமணியாய்ப் பிறந்தது.

தான் இல்லாத சமயத்தில் இவ்வாறு இந்திரன் சிறை செய்துகொண்டு போன செய்தியை நாரதரால் கேள்விப்பட்ட இரணியன், இந்திரனிடத்திலும் தேவர்களிடத்திலும் மகா உக்கிரமான கோபங்கொண்டான். ஹரியினிடத்திலும் அவனுக்குக் கோபம் அதிகரித்தது. ஆகையால் அவன் ஹரிபக்தர்களைக் கண்டால் கண்டவிடத்திலேயே கொல்வதைத் தன் தொழிலாகக் கொண்டான். இப்படிப்பட்ட அவனுக்குப் பிறந்த பிரகலாதன், பிறக்கும்போதே ஹரிபக்த சிரோமணியாக இருந்தமையினால் அவனைச் சரிப்படுத்துவது இரணிய

னுடைய முதல் வேலையாய் முன்னின்றது. ஆகவே அவன், தன் மகனைத் தங்கள் குருவாகிய சுக்கிராசாரியரிடம் ஒப்பித்து, "இவனை நம்முடைய வழிக்குத் திருப்புங்கள்; இவன் எப்போதும் என் பகைவனுடைய பெயரையே கூறுகிறான்" என்று சொல்லி அனுப்பினான்.

பின்பு ஒருநாள், இரணியகசிபு தன் மகன் பிரகலாதனைத் தன் மடியில் எடுத்துவைத்துக்கொண்டு, "குழந்தாய், நீ நல்ல மார்க்கமெனக் கற்றுத் தேர்ந்தது எது?" என்று கேட்டான். பிரகலாதன், "அன்புள்ள தந்தாய்! அகங்கார மமகாரங்களையுடைய ஜீவர்களுக்கு ஸ்ரீ ஹரியை வழிபடுவதே நல்ல மார்க்கமெனக் கற்றேன்" என்றான். இதைக் கேட்டதும், "ஓ சுக்கிராசாரியருடைய சாமர்த்தியம் நன்று; நன்று" என்று கூறிச் சினங்கொண்டு நகைத்தான். பிரகலாதனோடு சேர்ந்த பையன்கள் இருவர், "பெருமானே, ஒன்றைச் சொல்லிக்கொடுத்தால் உம் புத்திரன் வேறொன்று சொல்லுகிறான்; அதற்கு என்ன செய்வது?" என்றார்கள்.

அசுரன், "பாலனான இவனுக்குச் சொல்லிக் கொடுத்ததை விட்டு, ஹரிவிஷயமான மற்றொன்றைச் சொல்வதற்கு எப்படித் தெரியும்? மறைந்து திரியும் ஹரி பக்தர்களுடைய காரியமாயிருக்கும் இது. இனி இவனை எவருடனும் சேரவிடாதிர்கள். நம்முடைய தர்மங்களைச் சொல்லும்படி செய்யுங்கள்" என்றான்.

சுக்கிராசாரியர் தம்மால் இயன்றவரையில் பலவாறான உபாயங்களால் பிரகலாதனது புத்தியை மாற்றுவதற்குப் பார்த்தார். ஒன்றாலும் அவனுடைய புத்தியை மாற்ற முடியவில்லை. பிரகலாதன், "காந்தத்தினிடம் இரும்பு எப்படிச் சுழலுமோ, அவ்வாறே என்னுடைய மனமானது நாராயணனுடைய ஸந்நிதானத்தில் தானாகவே பேதிக்

கின்றது" என்று எப்போதும் மறுமொழி சொல்லிக் கொண்டு வந்தான்.

பிரகலாதன் இப்படி இருந்துவகையில் ஒருநாள் அவன் தந்தை அவனை அழைத்து, "நீ இதுவரையில் உன் குருவினிடம் கற்ற வித்தைகளின் சாராம்சமான ஒன்றைச் சொல்" என்று கேட்டான். பிரகலாதன், "நாராயண னுடைய புண்ணிய சரித்திரங்களைச் சிரவணஞ்செய்து அவனுடைய திருவடி முடிசூடி அவனை நல்ல மலர்களால் அர்ச்சித்து வழிபடுவதல்லவா அறிவுடைமை யாகும்?" என்று கூறினன். இதைக் கேட்டதும் இரணியகசிபு சுக்கிராசாரியரை வருவித்து அவரைக் கோபித்துக் கொண்டான். சுக்கிராசாரியர், "உம்முடைய புத்திரன் நான் சொல்லிவைத்ததையும் சொல்வதில்லை. அயலார் சொல்வதையும் சொல்வதில்லை. இவனுக்கு விஷ்ணுத் தியானம் சுபாவத்திலேயே ஏற்பட்டிருக்கிறது" என்றார். அசுரன் பிரகலாதனை நோக்கி, "இப்படியெல்லாம் சொல்ல உனக்கு யார் சொல்லிக்கொடுத்தது?" என்று கேட்டான். பிரகலாதன், "துஷ்ட சித்தமுடையர்களுக்குப் பகவானி டத்தில் பக்தி குருவினாலும் உண்டாகாது; சுபாவத்திலேயும் ஏற்படாது" என்று கூறினன். இதைக் கேட்டதும் இரணியன் கோபங்கொண்டு ஏவலாளர்களை அழைத்து, "இந்தத் துஷ்டனைக் கொல்லுங்கள். இல்லாவிட்டால் இவனை ஊரைவிட்டுத் துரத்துங்கள். பகைவனானாலும் மருந்துபோல் இதத்தைச் செய்பவனன்றோ புத்திரன்? தன் சரீரத்திலே பிறந்த பிள்ளையானாலும் நோயைப்போல் பிரதிகூலத்தைச் செய்பவன், எப்படிப் புத்திரனாவான்? அவனே பகைவன். சரீரத்திற்கு உபத்திரவத்தைத் தரும் அவயவத்தைச் சேதிக்க வேண்டுமல்லவா? ஆகையினால் மித்திரன்போல வேஷதாரியாகவும் சத்துருவாயும்

இருக்கிற இவனை, விஷப் பிரயோகம் முதலிய எந்த உபாயங்களினுலாவது கொல்லுங்கள் " என்றுன்.

அசுரன் ஆணைப்படி அந்த ஏவலாளிகள் பிரகலாதனைப் பிடித்து இழுத்துக்கொண்டுபோய்க் குத்தியும் அடித்தும் வெட்டியும் பார்த்தார்கள்; மலைமேலிருந்து உருட்டிவிட்டார்கள்; நெருப்பில் வீழ்த்திஞர்கள், பாம்பை விட்டுக் கடிக்கும்படி செய்தார்கள்; இன்னும் இவை போல்வன பலவும் செய்தார்கள். ஒன்றுலும் அவன் சாகவில்லை. நாராயணுவென்னும் நாம உச்சாரணமே அவனைக் காத்தது.

பகவானுடைய பாதாரவிந்தத்தை நம்பிய பிரகலாதன் இவ்வாறு இருப்பதனுல் இரணியன் பெரு வருத்தத்தில் ஆழ்ந்து அப்பால் அவனை அழைத்து, "அடே! பிரகலாதா! நீ என் இவ்வாறு இருக்கிருய்? நீ துஷ்டன்! என் ஆணை கடந்து நடக்கும் உன்னை யமலோகத்துக்கு அனுப்புவேன். எனக்குப் பயந்து மூன்று உலகங்களும் நடுங்கிக்கொண்டிருப்பதை நீ அறியாயோ? இப்படி அறிந்திருந்தும் நீ எந்தப் பலத்தினுல் இப்படி இருக்கிருய்?" என்று கேட்டான்.

பிரகலாதன், " தந்தையே, நாராயணனுடைய பலந்தான் எனக்கு. அவர் எனக்கு மாத்திரம் பலமாக இருக்கிறுர் என்பதில்லை. உம்மைவிடப் பலசாலிகளான மற்றவர்களுக்கும் பலமாக இருக்கிருர். காலரூபியாயும் இருக்கிருர். அவரே சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணுகிருர். ஆதலினுல் எல்லோருக்கும் அவரே கதி என்றுன்.

இரணியன், " அடா அறிவில்லாதவனே, மரணம் கிட்டியிருக்கிறவர்களுக்கே இப்படிப்பட்ட துர்ப்புத்தி உண்டாகும். என்னைக்காட்டிலும் இன்னுமொரு கடவுள் எங்கே இருக்கின்றுன்?" என்று கேட்டான்.

பிரகலாதன் :—

" கடலினு முளனே வண்டு களுலலால் வீழு மந்தண்
மடலினும் உளனே ஓங்கு மலேயினும் உளனே மன்ன
உடலினுள் உயிர்போ லெல்லா வுலகினு முளனே வெய்ய
அடலுடை யாழி தாங்கு மமலனென் றழைத்தா னம்மா."

இறைவன் எங்கும் உளன் என்று பிரகலாதன் சொன்ன மாத்திரத்தில் இரணியன் கோபங்கொண்டு எழுந்து கத்தியை ஓங்கியவாறே பிரகலாதன் கரத்தைப் பிடித்து இழுத்து, "அடே, நீ சொல்லுகிறபடி அவன் எங்கும் இருப்பது உண்மையானல் இந்தத் தூணிலும் அவன் இருக்கவேண்டுமே? இங்கே இருக்கின்ருனு?" என்று கேட்டு அங்கிருந்த தூணில் அறைந்தான். அவன் அறைந்த அக்கணமே அந்தத் தூணைப் பிளந்துகொண்டு,

"இடித்ததோர் அசனி என்ன எறுழ்வலிக் கனகன் சீறி
அடித்ததூ ணத்து நின்றும் ஆடகப் பசும்பொன் அண்டம்
வெடிப்பமால் வரைப ணிப்ப வெடிபட நகைத்து வெய்தின்
வடித்தபூந் துளவ மாலே வாளரி முளேத்த தம்மா"

என்றபடி அண்டம் வெடிக்கவும் பெரிய மலேகள் நடுங்கவும், எல்லோரும் அஞ்சும்படி நகைத்துக்கொண்டு துளவ மாலேதரித்த பிரகாசம்பொருந்திய ஒரு நரஹரி ரூபம் தோன்றியது. அதைப் பார்த்த இரணியன், 'என்ன இது! மிருகமும் அல்ல; மனிதனும் அல்ல. காணுதற்கரிய நரஹரி ரூபம் பெற்றிருக்கிறது' என நினைத்துப் பின் தைரியங் கொண்டு கதையைச் சுழற்றி, வீர அட்டகாசஞ் செய்து அந்த நரஹரியை எதிர்த்தான். தம்மை எதிர்த்த அந்த இரணியனைப் பகவான், கருடன் பாம்பைப் பிடிப்பதுபோல் பிடித்துத் தமது தொடையின் மேல் கிடத்திக்கொண்டு, கூரிய நகங்களினுலே அவனுடைய மார்பைப் பிளந்து சங்கரித்தார்.

அந்த நரசிங்கமூர்த்தியினிடம் போகத் தேவர்களும் அஞ்சினார்கள்; அவர் அவ்வளவு உக்ரமாக விளங்கினார். எல்லோரும் அஞ்சவே, பிரகலாதன் அவரிடம் போய்க் கைகுவித்து நின்று துதித்தான். பகவான் சாந்தம் அடைந்து பிரகலாதனை நோக்கி, "உனக்கு வேண்டும் வரமென்ன? உன் பக்திக்கு உகந்தோம்" என்றார். பிரகலாதன் பணிந்து, "ஜகதீசா, சர்வக்ஞராகிய தேவரீர் அறியாத தொன்றுண்டோ? நான் உலக இன்பங்களைக் கருதிப் பக்தி செய்தவனல்ல வென்பதைத் தேவரீர் அறிவீர்கள். நான் நிராசையாகவேதான் பக்தி செய்தேன். ஆதலின் எனக்கு வேண்டுவது ஒன்றுமில்லை. ஆயினும், புல், பூண்டு முதலிய மிகத் தாழ்ந்த பதவியை நான் அடைந்தாலும், தங்களிடம் பக்தி மாறாதிருக்க அநுக்கிரகஞ் செய்தல்வேண்டும். எனக்கு வேறு எந்த விதமான ஆசையும் இல்லாதிருக்க வேண்டும். கஷ்டங்களுக்குக் காரணம் ஆசையல்லவா?" என்றான்.

பகவான், "பிரகலாத, நீயே என் பக்தர்களுள் சிறந்தவன். நீ ஒரு விருப்பமும் இல்லாமல் பக்தி செய்தவனானாலும் முற்பிறப்பில் செய்த புண்ணியத்திற்குத் தக்க பலனை இப்போது அநுபவிக்கவேண்டியவனாகையினால் நீ இவ்வுலகிலிருந்து என்னைப் பக்தி செய்துகொண்டிரு. ஆனால் உலக சுகங்கள் எதிலும் பற்றற்று இருக்கக் கடவாய்; பிறகு காலக்கிரமத்தில் என்னை வந்து அடைவாயாக" என்றார்.

இவ்வாறு கூறிய பகவானைப் பிரகலாதன் பணிந்து, "ஆண்டவனே, என் தந்தையார் உமது மகிமையை அறியாமல் உம்மை நிந்தித்ததுமல்லாமல் உம்மிடம் பக்தி செலுத்திய என்னையும் இம்சித்தார். ஆனாலும் உமது கடைக்கண் பார்வையினால் புனிதரானார். ஆதலால் அவர் பிழையைப் பொறுத்துக் கடைத்தேறும்படி அநுக்கிரகஞ்

செய்யவேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். பகவான், "அன்ப, நீ இந்த இரணியனுடைய கிருகத்தில் பிறந்தமையினால், உன் தந்தையான அவன் கடைத்தேறி விட்டான். அவனையன்றி உன் குடும்பம் இருபத்தொரு தலைமுறையும் கடைத்தேறிவிட்டது. ஆகையினால் நீ உன் தந்தைக்குச் செய்யவேண்டிய பிரேத கிருத்தியங்களைச் செய்" என்று கூறி யனுப்பினார். பிறகு பகவான் தம் அருகே வந்து நின்ற பிரம்மதேவரைப் பார்த்து, "சதுர் முகனே, அசுரர்கள் குரூரமான சுபாவம் உடையவர்க ளல்லவா? அவர்களுக்கு இப்படிப்பட்ட வரங்கொடுத்தது பெரிய தவறு. இனி அவ்வாறு செய்யவேண்டாம். துஷ்டர் களுக்கு இடங்கொடுப்பது பாம்புக்குப் பால் வார்ப்பதுபோ லாகும்" என்று கூறி மறைந்தருளினார்.

இப்படிப்பட்ட மகிமை வாய்ந்த பிரகலாதனது சரித் திரத்தைக் கேட்டு மனமகிழ்ந்த தருமபுத்திரர் நாரதரை வணங்கி, "ஸ்வாமி, வர்ணாசிரம தர்மங்களையும் அவற்றிற் குரிய ஆசாரங்களையும் விளக்கியருளவேண்டும்" என்று கேட்டார். நாரதர் அவ்வாறே அவற்றைத் தெளிவாய்க் கூறினார். முடிவில், "உலக இன்பம் தீங்கை விளைவிக் கும். அதற்காக, மானிடர் நற்சகவாசஞ் செய்யவேண்டும். நல்லோர் உறவினால் பகவத்கிருபை உண்டாகும். பக்தியி னால் கடைத்தேறலாம்" என்று கூறி, "தருமராஜனே, நான் பூர்வ ஜன்மத்தில் கந்தர்வனாயிருந்தேன். அப்பொழுது நான் மனம்போனபடி நடந்து வந்தேன். பாப புண்ணியம் தெரியாமல் அலைந்தேன். அப்பொழுது தேவர்கள் ஒரு பெரிய யாகஞ்செய்தார்கள். அதற்கு நானும் போயிருந் தேன். அங்கு அப்ஸர ஸ்திரீகள் பாடி ஆடினார்கள். நானும் அவர்களோடு பாடி ஆடிக் குதித்தேன். அதனால் யாக அதிபதிகள் சினங்கொண்டு, 'நீ பரிகாசஞ் செய்தாய், ஆதலால் நீ ஈன ஜன்மத்தை அடையக்கடவாய்' என்று

சபித்தனர். அவர்கள் சாபத்தின்படி நான் ஒரு தாஸிக்குப் பிள்ளையாகப் பிறந்தேன். நான் அந்த ஈனப்பிறவியை அடைந்தேனாயினும், எப்போதும் பிரம்மஞானிகளுக்கு வேண்டிய பணிவிடைகள் புரிந்துவருவேன். அவர்களோடு கூடவே இருந்துவருவேன். இப்படி ஸத்ஸங்க ஸகவாசஞ் செய்தபடியினால் நான் திரும்பவும் பிரம்ம புத்திரனானேன். ஆதலின் ஸத்ஸங்கத்தைத் தேடி அடைவதுதான் அறிவுடைமையாகும். உங்களுக்கு ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சகவாசம் ஏற்பட்டிருக்கிறபடியால் நீங்களே தன்யர்கள், புண்ணிய புருஷர்கள்" என்று தெரிவித்தருளினார். தரும புத்திரர் பரம சந்தோஷம் அடைந்து நாரதரைப் பணிந்து வேண்டிய உபசாரணைகள் செய்து ஆசீர்வாதம் பெற்றார். நாரதர் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு தம்மிடம் சென்றார்.

---

## பத்தொன்தாம் அத்தியாயம்

---

### கஜேந்திர மோக்ஷம்

இவ்வாறு பிரகலாதனுடைய சிறப்பைப் பரீக்ஷித்துவுக்குக் கூறி முடித்தபிறகு ஸ்ரீ சுகர், ஸ்வாயம்பு முதலிய ஆறு மன்வந்தரங்களைப்பற்றிப் பேசினார். அவைகளில் நான்காவது மன்வந்தரதைப்பற்றிச் சொல்லுகையில், பகவான் கஜேந்திரனை ஒரு முதலை வாயிலிருந்து விடுவித்து ரட்சித்தார் என்று கூறினார். பரீக்ஷித்து அந்தச் சரித்திரத்தை விரிவாக அறிய விரும்பினார். ஸ்ரீ சுகர் மனமகிழ்ச்சியுடன் கூறுகிறார்:—

திரிகூடம் என்ற ஒரு பெரிய மலையின் சாரலிலே பல யானைகளுடன் கஜேந்திரன் (யானையரசு) சஞ்சரித்துக்

கொண்டிருந்தது. அப்படியிருந்த அந்த யானையரசு தன் பரிவாரங்களுடன் அந்தச் சாரலில் இருந்த ஒரு பெரிய தடாகத்தில் இறங்கி நீர் விளையாடிக்கொண்டிருந்தது. அநேக யானைகள் இறங்கிக் கலக்கியபடியால் அந்தத் தடாகத்தில் இருந்த நீர்ப்பிராணிக ளெல்லாம் மிகுந்த தொந்தரவடைந்தன. இப்படித் தொந்தரவடைந்த முதலை அந்தக் கஜேந்திரனுடைய காலைக் கவ்விக்கொண்டு தன் முழுப் பலத்துடன் உள்ளுக்கிழுத்தது. யானையும் தன் முழுப் பலத்தையுங்கொண்டு காலைப் பிடுங்கிப்பார்த்தது. இதைப் பார்த்துப் பயந்த மற்ற யானைகளெல்லாம் கரையேறி நின்று வீரிட்டுக் கத்தின. முதலைக்கு வரவரப் பலம் அதிகரித்தது. யானைக்குப் பலம் குறைந்தது. குறையவே அது மனந்தளர்ந்து, இனி நமக்குப் பகவானைத் தவிர வேறு துணையில்லை யென்று தீர்மானித்து, தன் துதிக் கையை மேலே தூக்கிக்கொண்டு, "ஆதிமூலமே! அநாதை யான என்னைக் காக்கவேண்டும்" என்று வீரிட்டுக் கத்தியது.

கஜேந்திரன் தம்மை அழைப்பது கேட்ட பகவான் அதன்மீது இரக்கங்கொண்டு, கருடவாகனத்தின்மேல் அந்தத் தடாகக்கரையிலே தோன்றிக் காட்சி தந்து சக்கரா யுதத்தைப் பிரயோகித்து முதலையின் வாயைக் கிழித்து யானையை விடுவித்தார்.

ஹூஹூ என்னும் பெயர்கொண்ட கந்தர்வன் ஒரு முனிவருடைய சாபத்தினால் இவ்வாறு முதலையானபடியால் அவன் இப்பொழுது சாபம் நீங்கப் பெற்றான். ஆகையினால் இறந்த அந்த முதலையினின்றும் அந்தக் கந்தர்வன் தோன்றிப் பகவானைத் துதித்துக்கொண்டே தன் உலகம் அடைந்தான்.

கஜேந்திரனும் முன்ஜன்மத்தில் இந்திரத்யும்னனென்னும் ஒரு வேந்தனாயிருந்தது. இந்திரத்யும்னன் என்ற

அந்த அரசன் சிறந்த பக்திமானு யிருந்தான். அவன் வானப்பிரஸ்தாசிரமம் பூண்டு காட்டில் வந்து ஆசிரமம் ஏற்படுத்திக்கொண்டு தவம் புரிந்துவந்தான். அப்பொழுது அவனிடம் அகஸ்தியர் வந்தார். அவன் அவரை மதியாமலே நிஷ்டையில் இருந்தான். அதனுல் அவர் கோபங்கொண்டு, "நீ காட்டானை ஆகக்கடவாய்!" என்று சாபங்கொடுத் தார். அவர் சாபம் தந்ததும் வேந்தன் பயந்து அவரைப் பணிந்து, "ஸ்வாமி! என்னை மன்னித்து எனக்கு அந்த யானை ஜன்மத்திலும் பகவானுடைய நினைப்பு இருக்கும் படியாய் அநுக்கிரகம் செய்தல்வேண்டும்" என, அகஸ்தியர், "அப்படியே யாகும்" என்று அநுக்கிரகம் செய்து சென்ருர். பிறகு அரசன் யானை ஜன்மம் அடைந்து யானைகளுக்குத் தலைவனுனன். அதனுல் கஜேந்திரன் என்று பெயர்பெற்ருன்.

இப்பொழுது பகவானுடைய தரிசனங் கிடைக்கப் பெற்றமையால் கஜேந்திரன் தன் சாபம் நீங்கப்பெற்று பகவானுடைய சாரூப்யத்தை அடைந்தது.

நான்காவது மந்வந்தரம் இவ்வாறு முடிந்தது. இனி ஐந்தாவது மந்வந்தரம் கூறுகிறேன். இதில் இத்தகைய விசேஷம் ஒன்றும் இல்லையாயினும், ஸர்வதமநு என்கிற அரசன் மகாப் பிரசித்தவானுக விளங்கினுன். ஆருவது மநுவாக வந்தவன் சாட்சுஸ மநு வென்று விளங்கினுன். இவனுடைய காலத்திலே பகவான் வைராஜனுடைய மனைவியான சம்பூதியினிடம் அசிதரென்கிற பெயரை உடையவராய் அவதரித்துச் சமுத்திர மதனஞ்செய்து தேவர்களுக்கு அமிர்தம் கொடுத்தார். அப்பொழுது பகவான் கூர்மாவதாரங்கொண்டு பாற்கடலிலே மந்தர பர்வதத்தைத் தாங்கினுர்.

இங்ஙனம் கூறிய சுகரைப் பார்த்து, பரீக்ஷித்து, "ஸ்வாமி! பகவான் கூர்மாவதாரங் கொண்ட வரலாறு

அறிய விரும்புகிறேன்" என்று கேட்க, அவர் கூறுகிறார் :—

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் கொடிய போர் நடந்தது. அதில், துர்வாஸ மகரிஷியினுடைய சாபத்தினால் தேவர்கள் நிர்ஜீவர்களாய் விழுந்து எழுந்திருக்கமாட்டாமற்போயினர். இவ்வாறு விழுந்தவர், பிரம்மாவிடம் போய் முறையிட்டார்கள். பிரம்மா அவர்களை அழைத்துக் கொண்டு மகாவிஷ்ணுவினிடம் போய் அவரைத் துதித்தார். மகாவிஷ்ணு அவர்களுக்குப் பிரத்தியட்சமாகி, "பிரம்மாதிதேவர்களே! உங்களுக்கு மங்களமுண்டாகக் கடவது. நீங்கள் யாவரும் அசுரருடன் கொண்டிருக்கும் பகைமையை விட்டுவிடுங்கள். நீங்கள் இருவருமாகச் சேர்ந்து பாற்கடலைக் கடையுங்கள். மந்தரபர்வதத்தை மத்தாகவும் வாசுகி யென்கிற நாகராஜனை நாணாகவும் கொள்ளுங்கள். அதினின்றும் பெருகும் அமுதத்தினால் உங்களுக்கு நன்மை உண்டாகும். அதற்கு வேண்டிய உதவியை நானும் செய்கிறேன்" என்று கூறி மறைந்தார்.

பிறகு தேவர்கள் அசுரேசனிடம்போய்ச் சமாதானம் செய்துகொண்டனர்; சமுத்திர மதனம் செய்வதாகவும் தெரிவித்தனர். அசுரவேந்தனும் அதில் விருப்பங் கொண்டான். பிறகு இருதிறத்தவரும் சேர்ந்து மந்திர பர்வதத்தைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு வந்தார்கள். கொண்டுவரும் வழியில் தூக்கமுடியாமல் கடலில் போட்டு விட்டார்கள். அப்போது பகவான் அங்கே தோன்றி அம் மலையை ஒரு மத்தால் எடுத்துக் கருடன்மீது வைத்துத் தாமும் அதன்மேல் ஏறிக்கொண்டு, தேவாசுர கணங்கள் சூழப் பாற்கடல் வந்து பர்வதத்தை அதிலே தள்ளினார். பிறகு தேவர்கள் நாகராஜனாகிய வாசுகியைக் கயிறாகும்படி வேண்டினார்கள். வாசுகி அமுதத்தில் ஆசைகொண்டு அவ்வாறே துணைபுரிய உடன்பட்டு வந்தான். அப்பால்

தேவர்கள் வாசுகியைக் கயிருக மந்தரகிரியில் கட்டிக் கடையத் தொடங்கினர்கள். பகவான் அப்பொழுது வாசுகியின் தலைப்பக்கம் பிடித்துக்கொண்டார். அதைப் பார்த்துத் தேவர்களும் தலைப்பக்கமே பிடித்துக்கொண்டார்கள். அசுரர்கள் நிஷித்தமான வால்பக்கத்தைப் பிடிக்க மாட்டோமென்று சொன்னர்கள். அப்பால் பகவான் சிரித்துக்கொண்டே நாகராஜனுடைய தலைப்புறத்தை விட்டு வாலைப் பிடித்துக்கொண்டார். தேவர்களும் வால்பக்கத்தைப் பிடித்துக்கொண்டார்கள். ஆகவே தேவர்கள் வால்பக்கமும் அசுரர்கள் தலைப்பக்கமும் பிடித்துக்கொண்டு கடைய ஆரம்பித்தார்கள்.

கடையும்போது மந்தர பர்வதமானது மேலே மிதக்காமல் உள்ளே முழுகியது. தேவாசுரர்கள் அது மேலே மிதக்கப் பலவாருன முயற்சிகளைச் செய்துபார்த்தார்கள். ஒன்றும் பயன்படாமற் போகவே பயந்தார்கள். அப்பொழுது பகவான் பெரிய கூர்மரூபம் எடுத்துக் கொண்டு கடலில் பிரவேசித்து அந்தப் பெரிய மந்தர பர்வதத்தை முதுகிலே தாங்கினர். தமது அம்சங்களால் தேவர்களுள்ளும் அசுரர்களுள்ளும் பாம்பினுள்ளும் பிரவேசித்துப் பலம் விருத்தியாகும்படி செய்தார். பிறகு சமுத்திர மதனம் நடந்தது. அதனுல் வாசுகிக்குக் கஷ்டம் அதிகமாயிற்று. ஆகவே அவன், அக்கினி ஜ்வாலைகளையும் விஷத்தையும் கக்கத் தொடங்கினன். வாய்ப்பக்கமிருந்த அசுரர்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள். தேவர்கள் அஞ்சினர்கள். கடல் தத்தளித்தது. ஜலஜந்துக்களெல்லாம் வருந்தின. இப்படியிருக்கையில் கடலிலிருந்து திடீரென்று ஆலகால விஷம் உண்டாயிற்று. அந்த விஷம் எல்லோரையும் தகித்தது. ஒருவராலும் தாங்கமுடியவில்லை. என்ன செய்யலாமென்று எல்லோரும் ஆலோசித்துக் கைலையங்கிரி வாசராகிய பரமசிவத்திடம் சென்று அடைக்கலம்

புகுந்தார்கள். சிவபெருமான் மனமிரங்கிப் பாற்கடலுக்கு வந்து உலக க்ஷேமத்தின்பொருட்டு அந்த விஷத்தைப் பானஞ் செய்து எல்லோரையும் காப்பாற்றினுர்.

பிறகு தேவர்களும் அசுரர்களும் சந்தோஷித்து மறுபடியும் கடலைக் கடைந்தார்கள். அப்பொழுது காமதேனு வெளிவந்தது. அதனை ரிஷிகள் அடைந்தார்கள்.

அப்பால் உச்சைசிரவசு என்ற பெயருடைய வெண்மையான குதிரை தோன்றிற்று. அசுரர்கள் அதனைக் கைக்கொண்டார்கள். பிறகு ஐராவதமென்கிற யானை வெளிப்பட்டது. இதனை இந்திரன் அடைந்தான்.

அதன்பின் பாரிஜாதமென்ற விருக்ஷம் உண்டாயிற்று. பின்பு அப்ஸரஸ்திரீகள் உண்டானுர்கள். பாரிஜாதத்தையும் அப்ஸரஸ்திரீகளையும் தேவர்கள் அடைந்தனர். அப்பால் பகவானிடம் அன்புடைய ஸ்ரீமகாலட்சுமி உண்டானுள். மகாலட்சுமிக்குத் தேவர்கள் சகல மரியாதைகளும் செய்தார்கள். மகாலட்சுமி மகாவிஷ்ணுவுக்கு மாலை இட்டாள். பகவான் லட்சுமி தேவியைத் தம்முடைய மார்பிலே வைத்துக்கொண்டார். பிறகு வாருணி தேவி உண்டானுள். அந்த வாருணியை அசுரர்கள் அங்கீகரித்தனர். பின்னர் விஷ்ணுவின் அவதாரமாகிய தந்வந்தரி கையில் அமுத கலசத்துடன் பாற்கடலிலிருந்து வெளியாகி அமுதத்தைக் கீழே வைத்தார்.

அந்த அமுத கலசத்தைத் தாமே அடையவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு அசுரர்கள் பலாத்காரமாக எடுத்துக்கொண்டார்கள். இதனுல் தேவர்கள் பரம துக்கம் அடைந்து மகாவிஷ்ணுவைச் சரணடைந்தார்கள். பகவான், "விசனப்படாதீர்கள், அதனை உங்களுக்கு எப்படியாவது வாங்கித் தருகிறேன்" என்று கூறி மறைந்தார்.

அவ்வாறே மறைந்த பகவான் பின்பு மறுகணத்திலே எல்லோருடைய மனத்தையுங் கவரக்கூடிய சகல லட்சணங்களும் அமைந்த ஜகன்மோகினியாக வந்து அசுரர் இருக்கும் இடம் சென்றார். அசுரர்கள் அந்த ஜகன்மோகினியைக் கண்டதும் வியப்படைந்து, அவளிடம் வந்து சூழ்ந்துகொண்டு அவளைப் புகழ்ந்து, "அம்மணி, நல்ல சமயத்திற்கு வந்தாய்; இந்த அமுத கலசத்தைப்பற்றி எங்களுக்கும் தேவர்களுக்கும் விவாதம் உண்டாயிருக்கிறது. நீ இதனை எங்களுக்குப் பங்கிட்டுக் கொடு" என்று அவளிடம் கொடுத்துவிட்டு அவள் கையைப் பார்த்துக்கொண்டு மயங்கி நின்றார்கள்.

மோகினி ரூபங்கொண்ட ஹரியானவர் அவர்களை நோக்கி, "நான் செய்யும் காரியத்தில் நீங்கள் குற்றம் கூறாமல் ஒப்புக்கொள்ளவேண்டும். அப்படியானால் நான் இந்த அமிர்தத்தைப் பங்கிடுகிறேன்" என்றார். அசுரர்கள் அந்த மோகினியின் அழகில் மயங்கியிருந்தபடியால், "சரி, அப்படியே செய்கிறோம்" என்று ஒப்புக்கொண்டனர்.

பிறகு அந்த மோகினி அசுரர்களையும் தேவர்களையும் தர்ப்பாஸனங்களிலே இரண்டு வரிசைகளில் உட்கார வைத்துத் தேவர்களுக்கு முதலில் அமுதங்கொடுத்தாள். அசுரர்கள் அந்த மோகினி தங்களை வஞ்சிக்கிறாளென்பதை அறிந்தும் அவளுடைய நட்பைக் கெடுத்துக்கொள்ள மனமில்லாமல் மௌனமாயிருந்தார்கள்.

இப்படி நடக்கையில் ராகு என்ற ஓர் அசுரன் மாத்திரம் மெதுவாய் எழுந்து தேவர்களிருந்த வரிசையில் சூரியசந்திரர்களுக்கிடையே போய் உட்கார்ந்துகொண்டான். மோகினி அவனுக்கும் அமுதம் அளித்துவிட்டாள். அவனும் அதனை வாயில் போட்டுக்கொண்டான். அந்த அசுரனைக் கண்டுபிடித்த சூரியனும் சந்திரனும், "அசுரன் பந்தி மாறி அமுதம் கொள்கிறான்" என்று கூறி அவனை

வெளிப்படுத்தினர். மோகினியாகிய பகவான் உடனே தம் சக்கராயுதத்தை ஏவி அவன் தலையைக் கொய்துவிட்டார். அவன் தலை அறுப்பட்டதாயினும் அமுத சம்பந்தத்தால் அதற்கு அழிவுண்டாகவில்லை. முடிவில் அது ராகு கேதுக் கிரகங்களாயிற்று. பிறகு தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் சண்டை நடந்தது. பகவான் அவர்கள்முன் தோன்றி அசுர மாயைகளைச் சிதறவடித்தார். அசுரர் தலைவர்களைத் தமது சக்கரத்தால் வதஞ்செய்தார். பின்னர் இந்திரனுக்கும் பலிக்கும் உக்கிரமான யுத்தம் நடந்தது. பலி பலவாருன மாயங்கள் செய்து இந்திரனைச் சோர்வடையும்படி செய்தான். இந்திரன் அஞ்சாமல் தன்னுடைய வச்சிராயுத பலத்தினுல் அவனை எதிர்த்துப் போராடினுன். அப்பொழுது நமுசி என்ற அசுரனொருவன் இந்திரனை எதிர்த்து அவன்மீது சூலாயுதத்தை எறிந்தான். இந்திரன் அவன்மீது தன் வச்சிராயுதத்தைப் பிரயோகித்தான். அது அவன்மீது பாயமாட்டாமற் போயிற்று. அதனுல் இந்திரன் துக்கமடைந்து பகவானைத் தியானித்தான். அப்போது, "இந்திரனே, இந்த நமுசி, உலர்ந்த ஆயுதத்தினுலும் ஈரமாயிருக்கிற ஆயுதத்தினுலும் கொல்லத்தக்கவனல்லன். ஏனெனில் ஒருகால் இவனுக்கு நாம் அப்படி வரம் கொடுத்திருக்கிருேம். ஆகையினுல் இவனைக் கொல்வதற்கு வேருேர் உபாயம் சிந்திக்கத்தக்கது" என்று அசரீவாக்கு உண்டாயது.

இதைக்கேட்ட இந்திரன் மனக்கவலை நீங்கி, உடனே நுரையினுலே ஆயுதஞ்செய்து அதனை விடுத்து அவ்வசுரன் தலையை வெட்டிச் சாய்த்தான். உடனே நாரத பகவான் அங்கே தோன்றிச் சண்டையை நிறுத்திவிட்டார். அப்பொழுது சுக்கிராசாரி, யுத்தத்தில் மடிந்த அசுரர்களையெல்லாம் ஸஞ்சீவினி மந்திரத்தாற் பிழைக்கும்படி செய்து அழைத்துக்கொண்டு போய்விட்டார்.

## இருபதாம் அத்தியாயம்

—(o)—

### வாமன திரிவிக்ரம அவதாரங்கள்

பாற்கடலில் தேவாசுரர்கள் அமுதமெடுத்த இந்த வரலாறு கூறிய பின்பு, ஸ்ரீசுகர் ஏழாவது மங்வந்தரத்தைப் பற்றிக் கூறுகிறார்.

பரீக்ஷித்து மகாராஜனே! ஏழாவது மங்வந்தரத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு பலியென்னும் அசுரனுடைய வல்லமையை அடக்குவதற்காக வாமன வடிவமாக அவதாரம் செய்தார். இந்தச் சரித்திரம் கேட்கத்தக்கது.—

மகாபலி யென்பவன் ஓர் அசுரராஜன். இவன் தவத்தினால் அதிக பலவானாக விளங்கினான். அதனால் இவன் மூன்று உலகங்களையும் தன் வசப்படுத்திக் கொண்டான். இந்திர பதவியையும் பிடித்துக்கொண்டான். தேவர்களெல்லோரும் இவனுக்குப் பயந்து எங்கேயோ ஓடிப்போய் மறைந்துவிட்டனர். இவன் இவ்வாறு தேவர்களை அடக்கியாண்டானென்றாலும், இவன் ஏனைய அசுரர்களைப்போல் இராமல் மகா பக்திமானாகவும் நீதிமானாகவும் விளங்கினான். இவன் பிரகலாத வம்சத்திலே உதித்தவனல்லவா?

அதிதிதேவியின் மக்களல்லவா தேவர்கள்? அவர்கள் மறைந்துபோகவே, அந்தத் தேவி பெருந்துயர மடைந்து தன் நாயகனாகிய காசியபரிடம் போய் முறையிட்டாள். காசியபர் அதிதிதேவிக்கு ஒரு மந்திரோபதேசம் செய்து அதனை ஜபித்து மகாவிஷ்ணுவை வழிபடும்படி ஆணை யிட்டார். அவள் அப்படியே செய்துவந்தாள். அவளுக்குப் பகவான் பிரத்தியக்ஷமாகிக் குறையைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, "நீ கவலைப்படாதே. நான் தவத்தினால்

கட்டுண்டேன். உன்னிடம் நான் அவதாரஞ்செய்து தேவர்களுக்கு உதவி செய்கிறேன்" என்று வரந்தந்து மறைந்தருளினார். இதைக் காசியபர் அறிந்து சந்தோஷம் அடைந்தார்.

பிறகு பகவான் அதிதி தேவியின் கர்ப்பத்தில் வந்தார். அப்பொழுது பிரம்மதேவர் பகவானை மிகுந்த உருக்கத்துடன் துதித்தார். பகவான் நான்கு புஜங்களுடன் சங்கு சக்கர பீதாம்பரதாரியாய் அவதாரஞ்செய்தார். அப்போது பிரபஞ்சமெல்லாம் பரமானந்தமடைந்து துதித்தன. காசியபரும் அதிதி தேவியும் என்றும் அடையாத ஆனந்தமடைந்து பகவானைத் துதித்தார்கள். பகவான் உடனே தம்முடைய நிஜஸ்வரூபம் மாறி வாமன ரூபமெடுத்துக்கொண்டார். அதைக்கண்டு வியப்படைந்த அவர்களெல்லோரும் ஈசன் செயல் என்றெண்ணி அக்குழந்தைக்குச் செய்யவேண்டியவைகளைச் செய்து திருப்தியடைந்தார்கள்.

இவ்வாறு பகவான் இங்கே அவதரித்திருக்கையில், பலியானவன் ஒரு சிறந்த வேள்வி செய்தான். அந்த வேள்விக்கு எல்லோரும் சென்றனர், அப்பொழுது வாமன ரூபராய் விளங்கும் பகவானும் சென்றார். மகாபலி இவரைக் கண்டதும் அன்போடும் பணிவோடும் வரவேற்று ஆசனத்திருத்தி, "தங்களுக்கு வேண்டுவது எதுவோ அதனைக் கேட்கலாம்" என்றான். பகவான் இதனையே தேவர்களுக்குச் சகாயம் செய்வதற்குரிய நல்ல சமயமாய்க்கொண்டு மகாபலியை நோக்கி, "கொடையாளியே! நான் உன்னிடம் விரும்புவது இந்த எனது காலால் மூன்றடி பூமியேயன்றி வேறொன்றும் இல்லை" என்றார். இதைக்கேட்டதும் மகாபலி ஆச்சரியமடைந்தான். "என்ன இந்த அற்பமானதை இவர் யாசிக்கிறார்" என்று எண்ணி, "இன்னும் என்ன வேண்டும்?" என்று

கேட்டான். வாமனதேவர், "வேந்தே, மூன்றடி மண் போதும்" என்று சொன்னார். மகாபலி, "ஸ்வாமி, அப்படியே யாகட்டும்" என்று கூறி மனமகிழ்ச்சியுடன் தானஞ்செய்ய ஆரம்பித்தான்.

அப்பொழுது அவனுடைய குருவாகிய சுக்கிராச்சாரியார், பலியை அணுகி, "இங்கே வந்து உன்னை மூன்றடி மண் கேட்பவர் மகாவிஷ்ணு. இவர் எப்போதும் தேவர்களுக்கு நன்மை செய்வதிலேயே கண்ணுயிருப்பவர். அவர் மூன்றடி மண், பிடிவாதமாய்க் கேட்கிறாரல்லவா? அதில் ஏதோ சூதிருக்கிறது என்பதில் ஐயமில்லை. ஆகையால் இந்தத் தானத்தை நீ கொடாதே. கொடுப்பாயானால் உனக்குப் பெரிய ஆபத்து வரும். என் சொல்லை மீறி நடவாதே" என்று கூறினார்.

மகாபலி இதைக் கேட்டதும் நகைத்து, "நான் என்னவென்று சொல்லட்டும்! கொடுத்த வாக்கை மறுப்பதற்கு ஆகுமா? மகாவிஷ்ணுவே என்னிடம் வந்து இவ்வாறு தானம் ஏற்கும்போது நான் ஏன் கொடுப்பதுகூடாது? இவருக்கு நான் தானம் கொடுப்பேனானால் கிருதார்த்தனாவேன்" என்று கூறி, "ஸ்வாமி! விரும்பியபடியே மூன்றடி மண் கொடுத்தேன்" என்றுரைத்து வாமனர் திருக்கரத்தில் மகாபலி தீர்த்தம் வார்த்தான்.

தீர்த்தம் வார்த்தவுடனே பகவான் விசுவரூபம் எடுத்துக்கொண்டு, ஓர் அடியால் மேல் ஏழுலகத்தையும் அளந்தார்; இரண்டாவது அடியால் கீழ் ஏழுலகத்தையும் அளந்தார். இப்படி அளக்கவே அசுரர்கள் கோபங்கொண்டு மகாவிஷ்ணுவைத் தாக்கச்சென்றனர். மகாபலி, "இது நமக்கு நல்லகாலமல்ல. ஆதலின் அடங்குங்கள்; தவிரத் தானங்கொடுத்த சமயம் நாம் இவ்வாறு செய்வது கூடாது" என்று கூறி அவர்களைத் தடுத்தான். அப்பால்

பகவான் மகாபலியை நோக்கி, "மற்ருேர் அடிக்கு இடம் எங்கே?" என்று கேட்டார். மகாபலி எங்கிருந்து கொடுப்பான்? என்ன செய்வான்? அந்தோ! இதற்கு என்ன செய்வது என்று கஷ்டப்பட்டான். பகவான், 'மூன்ருவது அடிக்கு இடங்காட்டு' என்று கூறி, அவனை வருண பாசத்தினுல் கட்டி வருத்தினுர். மகாபலி ஒன்றுஞ் செய்யமுடியாமல் பகவானையே துதித்துக்கொண்டு தலை வணங்கி நின்று, "ஸ்வாமி! நான் என் சொல்லை உண்மையாகச் செய்துகொள்கிறேன். மூன்ருவது அடிக்கு இடமாக என் சிரசைக் கொள்ளலாம்" என்று குனிந்து கொண்டு தன் சிரசைக் காட்டினுன். பகவான் உடனே அவனை வருணபாசத்திலிருந்து விடுவித்து அவனுடைய சிரசில் தமது அழகிய திருவடிமலர் சூட்டினுர். அவன் அப்பொழுதே பாதாள உலகம் போனுன். பிரகலாதனும் பகவானுடைய ஆக்ஞையால் அவன் கூடவே சென்ருர். பகவான் மகாபலியை நோக்கிச் சந்தோஷத்துடன், "நீ இங்கேயே இரு. உன்னை நாம் என்றும் காப்பாற்றுகிருேம். இனி மறு மங்வந்தரத்தில் உனக்கு இந்திரபதவி தருகிருேம்" என்று வரமளித்தார். மகாபலி பகவானுடைய கருணையை எண்ணி மகிழ்ந்தவனுய், "இறைவன் செய்வதெல்லாம் நமது நன்மைக்கே" என்றுணர்ந்து திருப்தியடைந்து பாதாள உலகத்திலே வசித்துவருவானு னுன். பிறகு பகவான் இந்திரனுக்கு மூன்றுஉலகங்களையும் கொடுத்தார். தேவர்கள் எப்போதும்போல் தங்கள் நிலைமையை அடைந்து சுகமாய் இருந்தார்கள். பகவான் வாமனரூபத்திலிருந்து விசுவரூபங் கொண்டதைத்தான் திரிவிக்கிரம அவதாரம் என்பார்கள்.

---

# இருபத்தோராம் அத்தியாயம்

---

## மச்சாவதாரம்

இவ்வாறு பகவான் வாமன அவதாரத்தை எடுத்து முடித்தபிறகு மச்சாவதார மெடுத்தார் என்று ஸ்ரீசுகர் கூறினர், பரீக்ஷித்து இந்த அவதார வரலாற்றை விளக்கும்படி வேண்டிக்கொண்டார். ஸ்ரீசுகர் கூறுகிருர்:—

முன் கல்ப முடிவில் பிரம்மாவினுடைய நித்திரை யினுல் நைமித்திகம் என்று ஒரு பிரளயம் உண்டாயிற்று. அந்தப் பிரளயத்தில் பூமி முதலிய எல்லா உலகங்களும் கடலில் முழுகின. அப்பொழுது ஹயக்கிரீவன் எனும் அசுரன் பிரம்மதேவரிடமிருந்து வெளிவந்த வேதத்தைத் திருடிக்கொண்டு போய்க் கடலில் ஒளிந்துகொண்டான். அசுரனுடைய இந்தத் துஷ்டச் செய்கையை அறிந்த பகவான் மச்சரூபம் எடுத்துக்கொள்ளத் தீர்மானித்தார். இந்தக் காலத்தில் ஸத்யவ்ரதர் என்ருெரு ராஜரிஷி யிருந்தார். அவர் ஜலத்தையே பானம் பண்ணிக்கொண்டு தவம் புரிந்துகொண்டிருந்தார். அப்படிப்பட்ட அவர் ஒருநாள் கிருதமால் என்னும் ஓர் ஆற்றில் ஸ்நானம் செய்துவிட்டு ஜலதர்ப்பணஞ் செய்தார். அப்பொழுது அவர் கையில் ஜலத்தோடு ஒரு மீன் வந்தது. அதை அவர் கண்டவளவில் கைஜலத்தை நதியில் விட்டுவிட்டார். அந்த மீன் நீந்திக்கொண்டே அவர் சமீபத்திலிருந்தபடி, "நான் இந்த நதியிலுள்ள ஜலஜந்துக்களுக்காக அஞ்சி உன்னை அடைந்தேனுதலால் என்னைக் காப்பாற்று. இதில் விடாதே" என்று கூறிற்று.

அந்த ரிஷி அதைக் கேட்டு வியப்படைந்து அந்த மீனைப் பிடித்துத் தம் கைக் கமண்டலத்திலே போட்டுக்

கொண்டார். அது அந்தக் கமண்டலத்தின் அளவுக்கு உடனே பெரிதாயிற்று. அதைக் கண்டு ரிஷி வியந்தவா றிருக்கையில், அது தன்னை வேறு ஒரு பெரிய பாத்திரத்தில் விடும்படி வேண்டிக்கொண்டது. ரிஷி அவ்வாறே செய்தார். மீன் அந்தப் பெரிய பாத்திரத்தின் அளவாயிற்று. பிறகு ரிஷி வேறொரு பெரிய பாத்திரத்தில் அதை விட்டார். மீன் அதன் அளவுக்கும் பெரிதாயிற்று. ரிஷி வியப்படைந்து அதனை ஒரு குளத்தில் விட்டார். அது குளத்தின் அளவு பெரிதாயிற்று. பிறகு ரிஷி அந்த மீனைக் கடலிலே கொண்டுபோய் விடும்படி செய்தார்.

அம்மீன் கடலிற் போய்ச் சேர்ந்ததும் வெகு விரைவிலே பெரிதாயிற்று. அதைக் கண்டு, "இஃதென்ன, இப்படிப் பெரிதாகிறது. என்ன மாயமோ தெரியவில்லை" என்று வியப்புற்று நிற்கையில், பகவானுன அந்த மீன், "இன்றைக்கு ஏழாவது நாள் உலகம் ஜலப்பிரளயத்திலே மூழ்கும். நீ உலகத்திலுள்ள வஸ்துக்களெல்லாவற்றிலும் ஒவ்வொன்று சேகரித்துக்கொள். நான் ஓர் ஓடத்தை அனுப்புவேன். அதில் ஏறிக்கொள். உனக்கு ஒரு தீங்கும் நேராது. நான் அப்பொழுது அந்த ஜலத்தில் என் வேலையை முடித்துக்கொண்டு வருவேன். அந்த ஓடமும் ஜலத்திலே மிதந்துகொண்டு எனது அருகே வரும். அந்த ஓடத்தை ஒரு பாம்பினுல் என்னுடைய கொம்பிலே கட்டிவிடு. பிறகு என் மகிமை விளங்கும்" என்று கூறி மறைந்தார்.

இதைக்கேட்ட ராஜரிஷி சந்தோஷமடைந்து உடனே அங்கோரிடத்தில் தர்ப்பைகளைப் பரப்பி அதில் அமர்ந்து பகவானைத் தியானஞ் செய்யத் தொடங்கினர். அப்பால் பகவான் கூறியபடி ஏழாவது நாள், கடலானது பொங்கிப் பெருகியது. அப்பொழுது ஓர் ஓடம் அந்த ராஜரிஷியின் இடம் வந்தது. பகவான் சொல்லியபடி ராஜரிஷி

எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு அந்த ஓடத்தில் ஏறிக்கொண்டார். ஜலம் வரவரப் பெருகியபடியால் ஓடமும் உயர மிதக்கத் தொடங்கியது. ராஜரிஷி சிறிதும் அஞ்சாமல் பகவானுடைய ஆணையை எண்ணி மகிழ்ந்து அவரையே துதித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அந்த மீனும் இவரிடம் வந்தது. அதைக்கண்டதும் ரிஷி, பகவான் முன் எச்சரித்தபடி அதனுடைய கொம்பில் அந்த ஓடத்தைப் பாம்பினால் கட்டிவிட்டார். அப்பொழுது பகவான் அவருக்கும் மற்ற ரிஷிகளுக்கும் ஞானோபதேசம் செய்தார்.

அப்பால் பிரளயம் முடிந்தது. பகவான் பிரம்ம தேவரிடம் ஹயக்ரீவன் எடுத்துக்கொண்டுபோன வேதத்தைக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு நடந்த விஷயத்தைச் சொல்லி மறைந்தார். பிறகு அந்த ஸத்யவ்ரத ராஜன் இந்தக் கல்பத்தில் பகவானுடைய கருணையினால் வைவஸ்வத மநுவானான்.

---

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

---

### மநுவம்ச வரலாறு

ஸ்ரீ சுகர் கூறுகிறார்:

வைவஸ்வத மநுவின் வம்ச அபிவிருத்தியின் பொருட்டு வஸிஷ்டர் ஒரு வேள்வி செய்துவைத்தார். அந்த யாகத்தில் பாலையே உணவாகக் கொண்டிருந்த மநுவினுடைய மனைவியாகிய சிரத்தை யென்பவள் ஹோதாவை நமஸ்காரம் பண்ணித் தனக்குப் பெண் உண்டாகும்படி ஓமம் செய்யவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். ஹோதா அவள் வேண்டுகோளுக்கு

இணங்கி மந்திரத்தை மாற்றி உச்சரித்து ஓமம் செய்தனர். அதன் பயனாக இளையென்கிற பெண் பிறந்தது. அப்பொழுது மநு தமக்குப் பிள்ளை பிறக்கவில்லையே என்று வருத்தங்கொண்டு வஸிஷ்டரிடம் சென்று சொல்லிக்கொண்டார்.

வஸிஷ்டர், ஆண்பிள்ளையை விரும்பிச் செய்த வேள்வியின் பயனாய்ப் பெண் பிறந்தது ஏனென்று ஆலோசித்தார். அவருக்கு உண்மை விளங்கியது. உடனே அவர் மநுவை நோக்கி நடந்ததைக் கூறி, "ஆயினும் நீர் துக்கப்படவேண்டாம். உமக்குப் புத்திரனுண்டாகும்படி செய்கிறேன்" என்று கூறிப் பகவானைத் தியானித்து இளையென்கிற பெண், இளன் என்கிற ஆண்பிள்ளை யாகவேண்டுமென்று கேட்டார். அவ்வாறே இளை இளனானான்.

அந்த இளன் ஒருநாள் காட்டிற்கு வேட்டையாடச் சென்று வேட்டை முகத்தில் பல வனங்கள் கடந்து அப்பால் மேருவின் தாழ்வரையிலிருந்த குமாரவனம் போய்ச் சேர்ந்தான். அது பரமசிவன் உல்லாஸமா யிருக்கும்படியான வனமாதலால் அங்கே பிரவேசிக்கிற ஆண்மக்களெல்லோரும் பெண்கள் ஆய்விடுவார்கள். அதனை இளன் அறியானாதலால், அங்கே பிரவேசித்ததும் அவனும் அவனுடைய பரிவாரங்களும் வாகனங்களும் பெண்களாயினர். அதனால் எல்லோரும் வருத்தமடைந்து இன்னது செய்வதென்று தெரியாமல் வருந்தினார்கள். பெண்களாகக் காடுகள்தோறும் அலைந்தார்கள். ஒரு காட்டில் சந்திரனுடைய புத்திரனாகிய புதன் தவம் பண்ணிக்கொண் டிருந்தான். அவன் அந்த இளையை இச்சித்து அவளை மணந்தான். பிறகு அவளுக்கு புரூரவசு என்ற புத்திரன் பிறந்தான்.

இப்படியான கொஞ்சநாளைக்கெல்லாம் பெண்ணுய் உழலும் அவ்வரசன் வஸிஷ்ட மகரிஷியினிடம் சரணடைந்தான். வஸிஷ்ட மகரிஷி பரமசிவத்தைத் தியானித்து வேண்டிக்கொண்டார். கருணாநிதியாகிய அவர், "இவ்வரசன் உனது தபோபலத்தினால் ஒரு மாதம் புருஷனாயும், ஒருமாதம் ஸ்திரீயாயு மிருப்பன்" என்று அநுக்கிரகஞ் செய்தார். பிறகு அவ்வரசன் அப்படியே இருந்துகொண்டு அரசு புரிந்துவந்தான். அவனுக்கு உத்கலன், கயன், விமலன் என்று மூன்று பிள்ளைகள் உண்டானார்கள். அவர்கள் மூவரும் மூன்று ராஜ்யங்களுக்கு அரசரானார்கள். அப்பால் முடிவில் இளன் தன் அரசுரிமையைப் புரூரவஸ் என்ற புத்திரனுக்குக் கொடுத்துவிட்டுத் தவம்புரியக் காட்டிற்குச் சென்றான்.

இளன் இவ்வாருகவே, மனுவானவர் மக்கட்பேற்றை விரும்பி யமுனாநதி தீரத்தில் நூறுவருஷகாலம் தவஞ் செய்தார்; ஸ்ரீஹரியை வேள்விகளினாலே ஆராதித்தார். அவருக்கு இக்ஷ்வாகு முதலிய பத்துப் பிள்ளைகள் உண்டானார்கள். அவர்களுள் பிரஷாத்ரு என்பவன் தங்கள் குலகுருவாகிய வசிஷ்ட முனிவருடைய பசுக்களை மேய்த்து வருகிறவனானான். அவன் நல்ல சாந்தகுண முடையவன். அதனால் அத்தொழிலை மிகுந்த பொறுமை யோடு செய்துவந்தான். அப்படியிருக்கையில் ஒரு நாளிரவு பசுமந்தையில் ஒரு புலி புகுந்து ஒரு மாட்டை அறைந்து அதனைக் கவ்விக்கொண்டு ஓடியது. பிரஷாத்ரு அந்தப் புலியைத் தொடர்ந்தோடி அதனை ஓர் ஈட்டியினால் குத்தினான். அந்த ஈட்டி புலியின்மீது பாய்ந்ததுமல்லாமல் மாட்டின்மீதும் பாய்ந்தது. ஆனால் மாடு இறந்துவிட்டது. புலி மாட்டை விட்டு ஓடிவிட்டது. மறுநாட்காலையில் குரு தமது பசு இறந்துகிடப்பதைக் கண்டு உடனே

பிரஷாத்ருவை, "நீ நீசனுகக் கடவாய்" என்று சபித்தார்.

அந்தச் சாபத்தைக் கேட்டதும் பிரஷாத்ரு குருவின் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசாமல் மிகவும் அடங்கி யிருந்து சாபத்தை ஏற்றுக்கொண்டான்; உடனே ஒன்றிலும் பற்றில்லாத மனமுடையவனுய், பகவத் பக்தி, தியானம், ஞானம் முதலிய நல்ல குணங்களை மேற்கொண் டான். அதனுல் தன் வாழ்நாட்களை அவன் மிக்க மேன்மையாகக் கழித்தான். பிறகு ஒரு நாள் அவன் காட்டுத் தீயில் அகப்பட்டுத் தன் தேகத்தை விட்டான்.

மனுவினுடைய மற்ருெரு பிள்ளையாகிய சரியாதி என்பவனுக்கு ஸுகந்யை என்ருெரு பெண் பிறந்தாள். சரியாதி ஒரு சமயம் தன் பெண்ணுடன் ஒரு வனத்திற்குச் சென்ருன். அங்கே சியவன மகரிஷியின் ஆசிரமமிருந்தது. அங்கே ஸுகந்யை தன் தோழிகளுடன் போய் விளையாடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அங்கிருந்த ஒரு புற்றில் இரண்டு ஒளிகள் பிரகாசித்தன. அவற்றைக் கண்ட ஸுகந்யை ஒரு முள்ளை எடுத்து அந்த ஒளிகளைக் குத்தினுள். உடனே அங்கிருந்து இரத்தம் பெருகியது. அந்த க்ஷணமே அரசனுடைய சேனைகளுக் கெல்லாம் ஜலமலங்கள் கட்டுப்பட்டுப் போயின. அதனை அறிந்த அரசன் அவர்களை நோக்கி, "பிருகு புத்திரரான சியவன ரிஷிக்கு நீங்கள் ஏதேனும் தவறு இழைத்தீர்களா?" என்று கேட்டான். அப்போது ஸுகந்யை, தான் புற்றிலே முள்ளெடுத்துக் குத்தியதையும், பின் அதிலிருந்து இரத்தம் பெருகியதையும் கூறினுள். அரசன் அதைக் கேட்டுப் பயந்து, அந்தப் புற்றினருகே தன் புத்திரியை அழைத்துக் கொண்டு சென்று அதிலிருந்த ரிஷியை அழைத்து வணங்கித் தன் புத்திரி அறியாமற் செய்த செய்கைக்காக அவனை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டான். பிறகு

அம்முனிவருடைய அபிப்பிராயத்தின்படி தன் பெண்ணை அவருக்கே மணஞ் செய்துகொடுத்து, அப்பெண்ணை அவரிடமே விட்டுவிட்டுத் தன் பட்டணம் போனான். ஸுகன்யை தன் நாயகரது மனம்போல் நடந்து அவரை மகிழ்வித்துச் சுகமாக வாழ்ந்துவந்தாள்.

இப்படியிருக்கையில் சில காலத்திற்குப்பிறகு அந்த வனத்திற்கு அசுவினி தேவர்கள் வந்தார்கள். அவர்களை அம்முனிவர் வணங்கித் தமக்கு நல்ல யௌவன முண்டாகும்படி வேண்டிக்கொண்டார். தேவர்கள் அந்த ரிஷியைக் கையிலே பிடித்துக்கொண்டு ஒரு மடுவிலே மூழ்கினர். மூழ்கியவளவில், அம்மூவரும் அழகிய இளமைப் பருவத்தினராய் எழுந்தனர். மூவரும் ஒரே மாதிரியா யிருந்தமையினால் ஸுகன்யைக்குத் தன் நாயகரைக் கண்டுபிடிக்கத் தெரியவில்லை. அதனால் அவள் அசுவனிதேவர்களை வணங்கி வேண்டிக்கொண்டாள். தேவர்கள் அவளுடைய நாதரை அவளுக்கு காட்டித் தங்கள் உலகம் அடைந்தார்கள்.

பிறகு ஒருநாள் சரியாதி மகாராஜன் ஒரு வேள்வி இயற்றக்கருதிச் சியவனருடைய ஆசிரமம் போனான். அங்கே தன் மகள் ஒரு யௌவனபுருஷனுட னிருப்பதைக் கண்டு, "ஓ இவள் தன் புருஷன் கிழவனென்று அவமதித்து வேறொருவனைச் சேர்த்துக்கொண்டு திரி கிறாள்" என்றெண்ணிச் சினமடைந்து அவளை அழைத்து, "நல்ல குலத்தில் பிறந்த உனக்கு இப்படிப்பட்ட விபரீத புத்தி எப்படி உதித்தது" என்று கேட்டான். ஸுகன்யை நகைத்துத் தந்தையை வணங்கி நடந்ததைக் கூறினாள். அரசன் அஃதுகேட்டு அவளைப் புகழ்ந்தான். அப்பால் சியவன மகரிஷி சரியாதி மகாராஜன் விரும்பியபடி யாகத்தை நிறைவேற்றிக்கொடுத்தார்.

அவ்வரசனுக்கு, உத்தானபரிகசு, ஆனர்த்தன், பூரிஷேனன் என்று மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். ஆனர்த்தனுக்கு ரேவதன் என்றொரு புத்திரன் பிறந்தான். அவன் கடலின் நடுவே குசஸ்தலி என்றொரு பட்டணத்தை ஸ்தாபித்துக்கொண்டு ஆனர்த்தம் முதலிய தேசங்களைப் பரிபாலனம் செய்துவந்தான். ரேவதனுக்கு நூறு பிள்ளைகளும், ரேவதியென்கிற ஒரு பெண்ணும் பிறந்தார்கள். அவளுக்கு அவன் தந்தை தக்க நாயகனை மணஞ்செய்விக்க விரும்பிப் பிரம்மதேவரைப் பிரார்த்தித்தான். பிரம்மதேவர் அந்தப் பெண்ணை, பூபாரத்தை நீக்குவதன்பொருட்டுப் பூமியில் அவதரித்தவரான பலராமருக்குக் கொடுக்கும்படி ஆக்ஞாபித்தார். பிறகு அவ்வரசன் பலராமருக்கே தன் பெண்ணை விவாகம் செய்துகொடுத்தான்.

---

## இருபத்துமூன்றும் அத்தியாயம்

---

### மநுவம்ச வரலாறு

மநுவின் புத்திரனாகிய நபாகன் என்பவனுக்கு நாபாகன் என்று ஒரு மைந்தன் பிறந்தான். அவன் தந்தை சொல் தவறாதவனாயிருந்து சத்கர்மங்களை அனுசரித்து பிரம்மஞானமடைந்தான். அவனுக்கு அம்பரீஷன் என்ற பிள்ளை பிறந்தான். அம்பரீஷன் பகவானிடம் பரமபக்தி செலுத்திக்கொண்டு அரசுபுரிந்துவந்தான். பகவான் இடத்திற் செலுத்திவந்த அன்பினால் அவன் நாளடைவில் உலகத்தில் சகல பற்றுகளையும் விட்டுச் சிறந்த பாகவத சிரோமணியாய் விளங்கினான். அப்படியிருக்கையில் அம்பரீஷன் ஒரு வருஷம் வரையில் துவாதசி விரதம்

அநுஷ்டித்துவரத் தீர்மானித்து அவ்வாறே தானும் தன் மனைவியுமாயிருந்து அநுஷ்டித்துவந்தான். விரதமுடிவில், அம்பரீஷன் கார்த்திகை மாதத்தில் மூன்று நாள் உபவாசமிருந்து, பின் காளிந்தி நதியில் ஸ்நானஞ் செய்து அருகிலுள்ள மதுவனத்தில் வாசுதேவரைத் தியானம் செய்துவிட்டுப் பிறகு பிரம்மநிஷ்டர்கள் பலபேருக்குப் போஜனம் செய்வித்தான். பிறகு அவன் பாரணை செய்யப் போனான். அப்பொழுது அவனிடம் மகா கோபிஷ்டரும் தவ மகிமையிற் சிறந்தவருமாகிய தூர்வாஸ மகரிஷி வந்தார். அவரைக் கண்டதும் அரசன் செய்யவேண்டிய மரியாதைகளையும் உபசாரங்களையும் செய்து வரவேற்று, அவரையும் போஜனத்திற்கு அழைத்தான். அவர் நதிக்குப் போய் அனுஷ்டானாதிகளை முடித்துவிட்டு வருவதாகச் சொல்லிக் காளிந்தி நதிக்குச் சென்றார். அவர் வர நாழிகையாயிற்று. அதற்குள் துவாதசி கழிந்து போகும் போலிருந்தது. துவாதசி கழிவதற்குள் பாரணை செய்துவிட வேண்டும். மகரிஷி வரவில்லை. துவாதசியும் கழியப் போகிறது. என்ன செய்வான் அரசன்? பிராம்மணர்களை நோக்கி, "இதற்கென்ன செய்வது" என்று கேட்டான். அவர்கள் துளசி தீர்த்தத்தைப் பாரணை செய்யலாமென்று கூற, அவ்வாறே அரசன் துளசி தீர்த்தத்தை ஆசமனீயம் செய்தான். இதனால் விரதம் கெடாது என்று பெரியோர் கூறியதில் அரசன் சமாதானமடைந்து பகவானைத் தியானித்துக்கொண்டு மகரிஷியின் வரவை எதிர்பார்த்தவனாயிருந்தான்.

பிறகு தூர்வாஸர் வந்தார். அவர் அரசன் தமக்கு முன் பாரணை செய்ததை அறிந்தார். ஆதலினால் கோபங்கொண்டு தம்முடைய ஜடையில் ஒன்றைப் பிடுங்கியெடுத்து அதைச் சக்கராயுதம்போல் செய்து அரசன்மீது பிரயோகித்தார். அது வருவதுகண்ட அரசன், இருந்த

இடம் விட்டு அசையாமல் பகவானையே தியானித்துக் கொண்டிருந்தான்.

அச்சமயம் பகவானுடைய ஸுதர்சன சக்கரம் பக்தனைக் காப்பாற்ற ஆகாயத்தினின்றும் திடீரென்று தோன்றி, தூர்வாஸருடைய சக்கரத்தை எரித்து, அவரையும் துரத்தியது. தூர்வாஸர் சகல தேவர்களிடமும் போய்ச் சரணமடைந்தார். அவர்களெல்லோரும் அதை எதிர்க்கத் தம்மால் ஆகாதென்று சொல்லிவிட்டார்கள். பிறகு முனிவர் பிரபஞ்ச முழுவதும் ஓடி ஒளிந்தார். கடைசியில் மகாவிஷ்ணுவினிடமே போனார். அவர், "இது என் பக்தனுடைய செய்கை. அதனை நான் தவிர்ப்பதற்கு ஆகாது. அவனுக்குள் நான் அடக்கமான வன். ஆகையினால் அவனே ஏதாவது மனமிரங்கிச் செய்தால்தான் உண்டு" என்றார்.

அப்பால் தூர்வாஸர் அம்பரீஷனிடம் வந்து சரண மடைந்தார். அவன் பகவானைப் பிரார்த்தித்தான். சுதர்சனம் அவரை விட்டு வாசுதேவரிடம் சென்றது. அதுவரையில் அம்பரீஷன் போஜனம் செய்யாமலிருந்தான். அப்பொழுது மகரிஷிக்குப் போஜனம் அளித்துவிட்டுப் பிறகுதான் போஜனம் செய்தான். அப்பால் தன் அரசைத் தன் பிள்ளையினிடம் ஒப்பித்துவிட்டு வனஞ்சென்று தவம்புரிந்து பரமபதம் அடைந்தான்.

இனி மனுவினிடம் உண்டான இக்ஷ்வாகுவைப் பற்றிக் கூறுகிறேன் :—

இக்ஷ்வாகுவுக்குப் பிக்ஷுகி என்று ஒரு பிள்ளை. அவனுக்குக் ககுஸ்தன் என்று ஒரு புத்திரன் பிறந்தான். அவன் அவனை ராஜாவாக்கிவிட்டுத் தவத்திற்குப் போனான். ககுஸ்தன் தேவர்களுக்கு அநுகூலனாயிருந்து அவர்களுடைய பகைவர்களாகிய அசுரர்களை வென்றான்.

அதனால் அவனுக்குப் புரஞ்சயன் என்று பெயர் கிடைத்தது. அவனுடைய வம்சத்தில் யுவனாசுவன் என்பவன் தோன்றினான். அவன் பிள்ளையில்லாமல் வருந்தினான். அவனிடம் இரக்கங் கொண்ட ரிஷிகள் புத்திரபாக்கியம் உண்டாகுமாறு ஒரு யாகம் செய்வித்தனர். அப்பொழுது ஒருநாள் இரவில் யுவனாசுவனுக்குத் தாகம் அதிகமா யெடுத்தது. அதனால் அவன் யாகத்திற்கு வைத்திருந்த ஜபதீர்த்தத்தை எடுத்துக்குடித்து விட்டான். பிறகு யுவனாசுவனுடைய இடுப்பைப் பிளந்து கொண்டு ஒரு குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்ததும் பாலுக்கு அழுதது. அப்பொழுது இந்திரன் தோன்றித் தன் கைப் பெருவிரலை அதற்குக் கொடுத்தான். அந்தக் குழந்தைக்கு மாந்தாதா என்று பெயர்வந்தது. தேவர்களுடைய கிருபையினால் யுவனாசுவனும் பிழைத்துக் கொண்டான்.

மாந்தாதாவுக்கு முசுகுந்தர் முதலிய நான்கு புத்திரர்களும் ஐம்பது பெண்களும் பிறந்தனர். அந்த ஐம்பது பெண்களையும் ஸௌபரி என்ற ஒரு மகரிஷி மணந்து கொண்டார். பிறகு அந்த மாந்தாதாவின் வம்சத்தில் அனரண்யர் பிறந்தார். அவருடைய வம்சத்தில் திரிசங்கு பிறந்தான். அவன் தன் குருவாகிய வஸிஷ்ட மகரிஷியினுடைய சாபத்தினால் சண்டாளனானான். பின் விசுவாமித்திரருடைய பிரபாவத்தினால் சரீரத்தோடு சுவர்க்கம் சென்றான். தேவதைகள் அவனுக்கு அங்கே இடங்கொடுக்கவில்லை. அதனால் அவன் கீழே தள்ளப்பட்டு விசுவாமித்திரருடைய தவ மகிமையினால் அங்கேயே நிலை நிறுத்தப்பட்டான். அவனுடைய பிள்ளை அரிச்சந்திரன். அரிச்சந்திரனுடைய ஸத்திய பலத்தையும் தைரியத்தையும் விசுவாமித்திரர் பரீக்ஷித்தறிந்து சந்தோஷமடைந்தார். முடிவில் அவன் ஞானோபதேசம் பெற்றுப் பரமாத்ம

சொரூபத்திலே கலந்தான். அரிச்சந்திரனுக்கு ரோகிதன் பிறந்தான். அவன் வம்சத்தில் பாகுகன் என்பவன் தோன்றினன். அவன் தன் மனைவியோடுகூட வனஞ் சென்று அங்கே மரணமடைந்தான். அப்போது அவன் மனைவி உடன்கட்டையேறப் பார்த்தாள். அதை ஔரவர் என்ற மகரிஷி தடுத்தார். மேலும் அவள் அப்போது கர்ப்பவதியா யிருந்தாள். அவளுடைய சக்களத்திமார்கள் அவளுக்கு விஷங்கலந்து கொடுத்து அவளுடைய கர்ப்பத்தைக் கலைக்கப் பார்த்தார்கள். ஔரவ ரிஷியினுடைய அநுக்கிரஹத்தினல் கர்ப்பம் கலையாமல் பிள்ளையாகப் பிறந்தது. அவன் சகர சக்கரவர்த்தியென்று பெயர்பெற்று மகா கீர்த்திமானக விளங்கினன். சகரனுக்கு அறுபதாயிரம் பிள்ளைகள். சகரன் ஓர் அசுவமேத யாகம் செய்தான். அவன் அப்பொழுது விடுத்த அசுவத்தை, இந்திரன் அபகரித்துக்கொண்டு போனன். அதைச் சகரனுடைய பிள்ளைகள் அறுபதினயிரம் பேர்களும் தேடினர்கள். பூமியில் எங்கும் அது அகப்படவில்லை. அதனல் அவர்கள் கீழேதோண்டிப் பாதாளம் போய்ப் பார்த்தார்கள். அங்கே அந்த அசுவம், கபிலர் என்று பெயர்கொண்ட முனிவருடைய ஆசிரமத்தில் இருக்கக் கண்டார்கள். அசுவத்தை அபகரித்தவன் இவன் தானென்று எண்ணி அந்த முனிவரை ஆயுதங்களாலே கொல்லப் போனர்கள். அப்பொழுது அவர் கண்ணைத் திறந்துபார்த்தார். அதனல் அந்த அறுபதினயிரம் பேரும் பஸ்மமானர்கள்.

சகரனுடைய மற்றொரு மனைவிக்கு அஸமஞ்சன் என்றொரு புத்திரனிருந்தான். அவனுக்கு அம்சுமான் என்று ஒரு புத்திரனிருந்தான். அசமஞ்சன் உலகத்துக்கு விரோதமான காரியங்களைச் செய்துவந்தான். அதனல் அவனைச் சகரன் ஊரை விட்டுத் துரத்தி விட்டான். பிறகு

அவன் தன்னுடைய யோகபலத்தினால் வியாதிபெற்றான். அவனைக் கண்டு அரசன் சந்தோஷமடைந்தான். அவன் மகனாகிய அம்சுமான், யாக அசுவத்தைத் தேடிக்கொண்டு பாதாள உலகம்போய்க் கபிலரை வணங்கி, அவருடைய அநுக்கிரஹம் பெற்று அசுவத்தை யடைந்து தன் பாட்டனிடம் அதைக் கொண்டுவந்து சேர்த்து வணங்கி, யாகத்தை நிறைவேற்றிவைத்தான்.

அவன் வம்சத்தில் பகீரதன் பிறந்தான். பகீரதன் கடுந்தவம் புரிந்து ஆகாய கங்கையைப் பூவுலகத்திற் பெருகும்படி செய்து, அதனைத் தன் பாட்டன்மார்களாகிய சகர புத்திரர்கள் சாம்பராய்க் கிடந்த இடத்திற்குக் கொண்டு போனான். அந்தக் கங்கா தீர்த்தம் பட்ட மாத்திரத்தில் அவர்கள் எல்லோரும் ஸ்வர்க்கம் அடைந்தார்கள்.

பகீரதனுக்குப் பிறகு அவன் வம்சத்திற் சில தலைமுறை விட்டு ருதுபர்ணன் பிறந்தான். அவனுக்கு ஸௌதாஸன் என்பவன் பிறந்தான். அவன் ஒரு சமயம் காட்டிற்கு வேட்டையாடப்போய் அங்கோர் ராக்ஷஸனைக் கொன்றான். அந்த ராக்ஷசனுடைய தம்பி அதனால் கோபங்கொண்டு அரசனை வஞ்சனையினாலே கொல்லவெண்ணி மானிட உருவம் தாங்கி அரசனிடம் சமையற்காரனாக வந்து அமர்ந்தான். அப்பொழுது அவன் வஸிஷ்ட முனிவருக்கு நரமாம்ஸம் படைத்தான். அதனால் அவர் அரசன்மீது கோபங்கொண்டு அவனைப் பன்னிரண்டு வருஷகாலம் ராக்ஷஸனாகத் திரியும்படி சபித்தார். தான் ஒரு தோஷமும் அறியாதிருக்கத் தன்னை அநியாயமாகச் சபித்த முனிவரிடம் கோபங்கொண்டு அவரைச் சபிக்கக் கையில் தண்ணீரை எடுத்தான். அந்தக் கோபத்தை அவன் மனைவி மாற்றித் தடுத்தாள். பிறகு அவன் அந்த ஜலத்தைத் தன் காலில் விட்டுக்கொண்டான். அந்தக் கால்

கறுத்துப்போயிற்று. அதனால் அவனுக்குத் கல்மாஷபாதன் என்கிற பெயர் உண்டாயிற்று.

கல்மாஷபாதன் ராக்ஷஸனாகத் திரிகையில், ஒரு பிராம்மணனும் அவன் மனைவியும் சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருக்கிற சமயத்தில் அந்தப் பிராம்மணனைக் கொன்று தின்னப் பார்த்தான். பிராம்மணன் அதை அறிந்து, "இது தகாத காரியம்; செய்யாதே" என்று தடுத்தான். அவன் கேளாமல் அவ்வந்தணனைக் கொன்று தின்றான். அதனால் அவன் மனைவி அந்த ராக்ஷஸனைப் பார்த்து, "நீயும் உன் மனைவியும் சந்தோஷமாகப் பேசி விளையாடும்போது மரணமடைவாய்" என்று சபித்து விட்டு உடன்கட்டையேறி மடிந்தாள். அரசன் சாபம் நீங்கித் தன் மனைவியை அடைந்தபின் அவளை நெருங்குவதற்கில்லாமல் வருந்தினான். பிறகு அவனுக்கு வஸிஷ்டருடைய அநுக்கிரஹத்தினால் அச்மகன் என்று ஒரு பிள்ளை உண்டானான்.

அவன் வம்சத்தில் கட்வாங்க மகாராஜா பிறந்தான். கட்வாங்கன் வம்சத்தில் ரகு, அஜன், தசரதன், ராமன் முதலியவர்கள் தோன்றினார்கள்.

ஸ்ரீராமனுக்கு அவன் தந்தை தசரதன் பட்டங்கட்ட யத்தனித்தான். அதையறிந்த அவனுடைய இளைய மனைவி கைகேயி என்பவள் தன் மகனுக்குப் பட்டங்கட்டவும், ராமனைப் பதினான்கு வருஷம் வனத்திற்கு அனுப்பவும் வேண்டுமென்று வரங்கேட்டாள். தசரதன் அவ்வாறே தந்தான். புத்திரனான ராமன் அதனைப் பரிபாலிக்கும் பொருட்டுப் பதினான்கு வருஷகாலம் தன் மனைவியோடு வனவாசம் செய்து ராவணாதி ராக்ஷஸர்களை யெல்லாம் கொன்று முனிவர்களுக்கும் உலகத்துக்கும் க்ஷேமத்தை உண்டாக்கி எல்லோரும் வாழ்த்த அயோத்தியா நகரம்

வந்து தன் அரசுரிமைபெற்றுச் சுகமாக வாழ்ந்துவந்தான். அவனுக்குக் குசன் லவன் என்ற புத்திரர்கள் பிறந்தார்கள். பிறகு அந்த வம்சம் ஸுமித்திரன் என்கிற ராஜனோடு கலியில் முடிவடையும்.

இனி இக்ஷ்வாகுவின் பிள்ளை நிமியின் வம்சத்தைப் பற்றிக் கூறுகிறேன் கேள் :

நிமி ஒரு சத்திரயாகத்தைச் செய்யத் தொடங்கினன். அந்த யாகத்தை நிறைவேற்றிவைக்கும்படி வஸிஷ்டரை வேண்டிக்கொண்டான். வஸிஷ்டர், "நான் இப்பொழுது இந்திரனுக்கு ஒரு யாகஞ் செய்துவைக்க ஒப்புக்கொண்டிருக்கிறேன். பிறகு உன் யாகத்தை முடிக்கிறேன்" என்று கூறி இந்திரலோகம் போய்விட்டார். பிறகு நிமி, இந்தத் தேகம் அநித்தியம் என்பது அறிந்து வேறு சில முனிவர்களைக் கொண்டு அந்த யாகத்தைச் செய்து முடித்தான். பிறகு வஸிஷ்டர் வந்து, "நான் வருவதற்குள் நீ எப்படி யாகத்தை முடித்தாய்?" என்று கோபங் கொண்டு அவனைச் சபித்தார். அவனும், 'தருமத்தை யறியாத நீரும் அழியக்கடவீர்' என்று சபித்தான். பிறகு நிமியும் உயிரை விட்டான். வஸிஷ்டரும் தம் தேகத்தை விட்டு மித்திராவருணனுடைய குடும்பத்திலே பிறந்தார். அப்பால் தேவர்கள், நிமியைத் தேகமில்லாதவனைப் பிராணிகளுடைய நிமை கொட்டுதலிலும் விழிப்பதிலும் காணும்படியாயிருக்க அவனுக்கு வரம் தந்தனர். ரிஷிகள் அவனுடைய தேகத்தைக் கடைந்தார்கள். அதிலிருந்து ஒரு புத்திரன் பிறந்தான். அவன் ஜனகனென்று பேர் பெற்றான். பிறகு அவனுடைய வம்சம் விருத்தியடைந்தது. அந்த வம்சத்து அரசர்கள் எல்லோரும் வேதாந்த ஞானிகளாய் விளங்கினர்கள்.

———

# இருபத்துநான்காம் அத்தியாயம்

——(o)——

## சந்திர வம்ச வரலாறு

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:— இனிச் சந்திரவம்ச சரித்திரத்தைப்பற்றிச் சொல்லுகிறேன்.

பிரம்மதேவருக்கு அத்திரி யென்ெருரு புதல்வன் பிறந்தான். அந்த அத்திரி மகரிஷியினுடைய நேத்திரத்தில் உண்டான ஆனந்த பாஷ்பத்திலிருந்து அமுதமயமான சந்திரன் பிறந்தான். சந்திரனுக்குப் புதன் பிறந்தான். புதனுக்கு இளையென்பவளிடம் புரூரவசு பிறந்தான். அவன் வம்சத்தில் காதியென்பவன் தோன்றினுன்.

அந்த அரசனுக்கு ஸத்தியவதி என்று ஒரு பெண் பிறந்தாள். அவளை விரும்பிய ரிசீகர் என்ற முனிவருக்கு அவ்வரசனிடம் கன்யாசுல்கமாக ஆயிரம் வெள்ளைக் குதிரைகள் வேண்டுமென்றும், அவற்றுள் ஒன்று மாத்திரம் காது கறுத்ததாய் இருக்கவேண்டுமென்றும் கேட்டார். ரிஷி வருணனிடம் சென்று அப்படிப்பட்ட குதிரைகளைக் கொண்டுவந்து கொடுத்து அந்தப் பெண்ணை மணந்துகொண்டார்.

ரிசீகரிடத்தில், காதியின் மனைவியும் ஸத்தியவதியும் பிள்ளை வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அவர் அதன் பொருட்டு இரண்டு பாத்திரத்தில் ஹவிஸ் இட்டு ஹோமஞ்செய்ய யத்தனித்து அவற்றை மந்திரித்து வைத்து விட்டு ஸ்நானத்திற்குச் சென்ருர். அப்போது காதிராஜன் மனைவி, ரிஷி தம்முடைய மனைவியின் ஹவிஸில் ஏதாவது விசேஷமான மந்திரம் ஜபித்திருப்பாரென்று கருதி ஸத்தியவதியின் பாகத்தைத் தான் உண்டு தன் பாகத்தை அவளுக்குக் கொடுத்துவிட்டாள். ரிஷி திரும்பிவந்து

விஷயம் அறிந்து, "என்ன ஆச்சரியம் இது? நான் பிராம்மணனாகையினால் என் மனைவிக்குப் பிராம்மணப் பிள்ளை பிறக்கவும், காதி க்ஷத்திரிய னாகையினால் அவன் மனைவிக்கு உலகை ஆளும்படியான க்ஷத்திரியப்பிள்ளை பிறக்கும்படியாயும் ஹவிஸை ஜபித்து வைத்திருந்தேன். நீங்கள் இப்படி விபரீதம் செய்துவிட்டீர்களே! இனி என்ன செய்கிறது?" என்று வருத்தப்பட்டார். பிறகு ஸத்தியவதி ரிஷியைக் கெஞ்சிக்கேட்டுக்கொண்டாள். ரிஷி மனமிரங்கி, "உன் பிள்ளை பிராம்மணனாகவே இருக்கட்டும். ஆனால் என் பேரன் க்ஷத்திரிய தருமத்தை அநுசரிப்பான்" என்று கூறினார்.

அப்பால் ரிசீகருக்கு ஜமதக்கினி என்ற முனிவர் பிறந்தார். அவருக்கு மூன்று பிள்ளைகள். அவர்களுள் கடைசியானவர் பரசுராமர் என்பவர். அவர் பரத கண்டத்திலிருந்த கொடிய அரசவம்சத்தை இருபத்தொரு தலைமுறை நாசஞ் செய்தார். கார்த்தவீரியார்ச்சுனன் என்னும் ஒரு க்ஷத்திரியனே அவருக்கு அப்படிப்பட்ட கோபத்தை உண்டாக்கினான்.

கார்த்தவீரியார்ச்சுனன் நிகரற்ற வீரன்; மகா வரப் பிரசாதி. அவன் தத்தாத்திரேயரை நோக்கித் தவமிருந்து ஆயிரம் கரங்களைப் பெற்றான். திக்குவிஜயம் செய்தான். ராவணனையும் பிடித்துச் சிறைவைத்திருந்தான். அவன் ஒருநாள் வனத்தில் வேட்டையாடிக்கொண்டு வந்து ஜமதக்கினி முனிவருடைய ஆசிரமத்தில் தன் பரிவாரங் களோடு தங்கினான். தபோதனர் அவனுக்கும் அவன் பரிவாரங்களுக்கும் தமது காமதேனுவைக் கொண்டு திருப்திகரமாகப் போஜனம் செய்வித்தார். அந்தக் காமதேனுவைக் கார்த்தவீரியார்ச்சுனன் தன் அரண் மனைக்குக் கொண்டுபோக விரும்பி அதைக் கவர்ந்து போகத் தன் பரிவாரங்களுக்குக் கட்டளையிட்டான்.

அவர்கள் அவ்வாறே அதைத் திருடிப் பிடித்துக்கொண்டு சென்றனர். அதையறிந்த பரசுராமர் அவர்களை எதிர்த்து மடக்கிக்கொண்டார். அரசனுக்கும் பரசுராமருக்கும் போர் மூண்டது. போரில் பரசுராமர் கார்த்த வீரியார்ச்சுனனைக் கொன்று காமதேனுவை மீட்டுக் கொண்டுவந்து தம் தந்தையிடம் ஒப்பித்தார். ஜமதக்கினி பரசுராமரைப் பார்த்து, "நீ செய்த காரியம் சரியானதல்ல. கொடிய பாபச்செய்கை செய்தாய், அது வெறுக்கத்தக்கது. நாம் உயர்குலத்தவர்களல்லவா ? பொறுமையினால் நாம் சகல ஜனங்களாலும் பூஜிக்கப்படுகின்றோம். அப்படி யிருக்க, நாம் பொறுமையிழந்து இப்படிப்பட்ட செய்கை செய்யலாமா ? நீ செய்த பாபச் செய்கைக்காகத் தீர்த்த யாத்திரை செய்துவரவேண்டும்" என்றார். அவர் அப்படியே செய்துவிட்டு வந்தார். இதுமுதல் பரசு ராமருக்கு க்ஷத்திரியரிடம் வெறுப்பு உண்டாயது.

ஒருநாள் பரசுராமருடைய அன்னை ஹோம காரியத்திற்கு வேண்டிய சுத்த ஜலம் கொண்டு வருவதற்காக நதிக்குச் சென்றாள். அங்கே சில கந்தர்வர்கள் விளையாடிக்கொண் டிருந்தனர். அந்த விளையாட்டைப் பார்த்தபடியே அவள் கொஞ்சநேரம் அந்த நதிக்கரையில் நின்றுகொண்டிருந்து பிறகு ஜலம் கொண்டுவந்தாள். இதற்குள் ஹோம வேளை தவறிவிட்டது. அதனால் முனிவர் கோபங்கொண்டு மனைவியைக் கொன்றுவிடும்படி மைந்தர் களுக்குக் கட்டளையிட்டார். முதல் இரண்டு பிள்ளைகளும் அன்னையைக் கொலை செய்ய ஆலோசனை செய்துகொண்டு நின்றனர். ஜமதக்கினி முனிவர் அவர்களையும் சேர்த்துக் கொல்லும்படி பரசுராமருக்குக் கட்டளையிட்டார். பரசுராமர் உடனே தாயையும் தமையன்மார்களையும் கொன்று தந்தையை வணங்கினார். "தந்தை உனக்கு என்ன வரம் வேண்டும் ? நான் உன்னிடம் சந்தோஷமடைந்தேன்"

என்றார். பரசுராமர், "நான் இப்போது கொன்ற இவர்களை உயிர்ப்பிக்க வேண்டும். இவர்களுக்கு, இவர்கள் செய்த குற்றமும் நான் இவர்களைக் கொன்றதும் மறந்து போய்விட வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார், முனிவர் தமது தபோபலத்தால் அவர்களை உயிர்ப்பித்துப் பரசுராமரைச் சந்தோஷப்படுத்தினார்.

கார்த்தவீரியார்ச்சுனனுடைய மைந்தர்கள் தங்கள் தந்தையைக் கொல்வித்த ஜமதக்கினி முனிவரிடம் பெருங் கோபங்கொண் டிருந்தார்கள். அவர்கள் ஆசிரமத்தில், பரசுராமர் இல்லாத சமயம் பார்த்து நுழைந்து அங்கே ஹோமாக்கினியின் முன்பு சமாதியிலிருந்த ஜமதக்கினி முனிவரைக் கொல்லப் போனார்கள். அவர் மனைவி அவர்களைப் பார்த்துத் தன் நாயகரைக் கொல்லவேண்டா மென்று வெகுதூரம் கேட்டுக்கொண்டாள். அவர்கள் கேளாமல் ஒரே பிடிவாதமாய் அவரைக் கொன்றுவிட்டுப் போய்விட்டார்கள். அந்தத் துயரம் பொறுக்கமாட்டாமல் முனிவர் மனைவியான ரேணுகாதேவி வயிற்றில் புடைத்துக்கொண்டு கதறினாள். அவள் கதறியது பரசுராமர் செவியில் பட்டது. அவர் ஓடிவந்து பார்த்தார்; தந்தை வெட்டுண்டு கிடப்பதைக் கண்டதும் பெருந் துயரமுற்று அழுது புலம்பித் தாமே ஆறுதலடைந்தார். அவருடைய அன்னை அவருக்குக் கார்த்தவீரியார்ச்சுன னுடைய பிள்ளைகள் செய்த கொடுமையைக் கூறி அழுதாள். பரசுராமர் உடனே க்ஷத்திரியர்மீது பெருங் கோபங்கொண்டார். "உலகில் க்ஷத்திரியப் பூண்டே இல்லாமல் அடித்துவிடுகிறேன்" என்று சபதம் செய்து கொண்டு, முதலில் கார்த்தவீரியார்ச்சுனனுடைய பிள்ளைகளைக் கொன்றார். பிறகு இருபத்தொருதரம் பரத கண்டத்தை வலமாக வந்து க்ஷத்திரியர் எல்லோரையும் கொன்று குருக்ஷேத்திரத்திற்கருகே ஸ்யமந்தபஞ்சகம்

என்ற ஐந்து ரத்த மடுக்களை உண்டாக்கினார். அந்த மடுக்களிலே அவர் தம் தந்தைக்குச் செய்யவேண்டிய தர்ப்பணம் முதலியவைகளைச் செய்தார். அவர் செய்த அந்தக் கர்மங்களினாலே ஜமதக்கினி முனிவர் ஸப்த ரிஷிகளுள் ஒருவரானார். பரசுராமர் சிரஞ்சீவி ஆனார். அவர் மகேந்திர மலையில் வந்து வசிக்கிறார்.

காதிக்கு விசுவாமித்திரர் உண்டானார். அவர் தவத்தினால் க்ஷத்திரிய குணத்தை விட்டுப் பிரம்மதேஜஸை யடைந்து நூற்றொரு பிள்ளைகளைப் பெற்றார். அவர்கள் நானாவழியில் பிரிந்துபோனார்கள்.

இனி, சந்திரவம்சத்தில் உதித்த புரூரவசுவைப்பற்றிச் சொல்லுகிறேன் கேள் :—

புரூரவசுவுக்கு ஐந்து பிள்ளைகள். அவர்களுள் நகுஷனே பிரக்கியாதி பெற்றான். நகுஷனுக்கு யதி, யயாதி, சையாதி, யாதி, வியாதி, கிருதி என்று ஆறுபிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுள் யதி துறவியானான். யயாதி அரசனானான். அவனுக்கு அவன் தம்பிமார் நால்வரும் உதவியாக இருந்து அரசுபுரிந்து வந்தனர். நகுஷன் புண்ணிய பலத்தினால் சுவர்க்கத்தை அடைந்து, அங்கே இந்திரன் மனைவி சசிதேவியை இச்சித்து ரிஷிகள் சாபத்தினால் மலைப் பாம்பு ஆனான். யயாதி சுக்கிராசாரியினுடைய பெண் தேவயானை என்பவளையும் விரஷபர்வாவினுடைய பெண் சர்மிஷ்டை என்பவளையும் மணந்து கொண்டான்.

தேவயானை, யது, துறுவசு என்று இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். சர்மிஷ்டை, துர்க்கிரன், அநு, பூரு என்று மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். இந்தப் புத்திரர்களுள் பூரு பிரசித்தனானான். பூருவுக்கு ஜனமேஜயன் பிறந்தான். அவனுடைய வம்சத்தில் ஸுமதி

யென்பவன் தோன்றினன். அவனுக்குத் துஷ்யந்தன பிறந்தான். அவன் காட்டிற்கு வேட்டையாடச் சென்று அங்கே கண்ணுவ மகரிஷியினுடைய ஆசிரமத்தில் வளர்ந்துவந்த சகுந்தலை என்பவளை மணந்துகொண்டான். அவனுக்குப் பரதன் என்று ஒரு புத்திரன் பிறந்தான்.

இவ்விதம் கூறிப் பரதனுடைய வம்சத்தை விஸ்தரித்துப் பரீக்ஷித்து வரையில் சொல்லி, அப்பால் பரீக்ஷித்துவின் பிள்ளை ஜனமேஜயனையும்பற்றி விஸ்தரித்தார்.

பிறகு யயாதி பிள்ளைகளாகிய யதுவினிடமிருந்து தோன்றிய யாதவகுலத்தை எடுத்துக் கூறி அதற்குச் சம்பந்தமான விருஷ்ணி, அந்தாள் முதலியவர்களைப்பற்றியும் சொல்லி, முடிவில் பகவான் கிருஷ்ணபலராமர்களின் சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினர்.

---

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

—o—

### ஸ்ரீ கிருஷ்ணுவதாரம்

பூமியில் கொடியவர்கள் அதிகரித்தனர். அப்பொழுது பூமிதேவி காமதேனுவின் உருக்கொண்டு பிரம்மதேவரிடம் சென்று, "பாரம் தாங்கமுடியவில்லை" என்று முறையிட்டாள். அவர் மற்றத் தேவர்களுடன் சென்று திருப்பாற்கடலை யடைந்து மகாவிஷ்ணுவைத் துதித்துப் பிரார்த்தித்தனர். மகாவிஷ்ணு பிரஸன்னராகி, "தேவர்களே, நீங்கள் முதலிலே யாதவகுலத்தில் அவதாரம் செய்யுங்கள். நான் பின்பு அவதாரஞ்செய்து பூபாரம் தீர்க்கிறேன்" என்று வாக்களித்தனுப்பினர். தேவர்கள் அவ்வாறே செய்தனர். யாதவர்களில் உக்கிரசேனன் என்று ஓர் அரசனிருந்தான். அவனுக்குக்

கம்ஸன் என்று ஒரு மைந்தன் இருந்தான். அவன் மகா கொடியவனுயும் பாபத்திற்கும் பழிக்கும் அஞ்சாதவனுயும் இருந்தான். அதனுல் அவன் தன் தந்தையைப் பிடித்துச் சிறையிலிட்டுத் தானே அரசனுனுன்.

உக்கிரசேனனுக்குத் தேவகன் என்று ஒரு தம்பி உண்டு. அவனுக்குத் தேவகி என்று ஒரு பெண் இருந்தாள். அவளை யதுவின் வம்சத்தில் உதித்த சூரசேனனுடைய புத்திரர் வஸுதேவர் என்பவருக்கு விவாகம் செய்து கொடுத்தார்கள். விவாக ஊர்வலத்தில் கம்ஸன் தன் தங்கையும் வஸுதேவரும் ஏறியிருந்த ரதத்தைத் தானே ஸாரதியாயிருந்து செலுத்தினுன். அப்பொழுது, "அடே மூடா, உன் தங்கையாகிய தேவகியினுடைய எட்டாம் பிள்ளை உன்னைக் கொல்லப்போகிறது. நீ ஏன் இந்த விவாகத்தை இப்படிக் கொண்டாடுகிருய்?" என்று ஓர் அசரீரிவாக்குப் பிறந்தது.

இதைக் கேட்டதும் கம்ஸன் கடுங்கோபங் கொண்டு, "இவள் இருந்தாலல்லவா இவளுடைய எட்டாம் பிள்ளை என்னைக் கொல்லத் தோன்றும்? இதோ இந்த க்ஷணமே இவளைக் கொன்றுவிடுகிறேன்" என்று கத்தியை உருவி வெட்டப்போனுன். வஸுதேவர் அவனைத் தடுத்து, "அப்பா நீ ஏன் மரணத்திற்காக இவ்வாறு அஞ்சுகிருய்? உனக்கு இவ்வாறு மரணம் நேரிடப்போகிற தென்பதை அசரீரி அறிவித்தது. அதனுலென்ன? உலகத்தில் மரண மடையாதவன் எவன்? மரணத்தை யாராலே விலக்குவ தற்காகும்? நீ இப்பொழுது உன் தங்கையைக் கொல்வதால் யாது பயன்? இதனுல் நீ துஷ்டன், கொலைபாதகன் என்கிற பெயரையே அடைவாய். ஆதலின் இந்தக் காரியம் செய்யாதே. இவளுடைய பிள்ளை தானே உன்னைக் கொல்லப்போகிறது? இவள் அல்லவே? நான் ஒன்று சொல்கிறேன்: எனக்குப் பிறக்கும் குழந்தைகளையெல்லாம்

தவருமல் உன்னிடம் கொடுத்துவிடுகிறேன். நீ அவைகளை உன் விருப்பப்படி செய்துகொள்'' என்ருர். கம்ஸன் உடனே கோபந்தணிந்து ஊர்வலத்தை நடததி முடித்தான்.

அப்பால் வஸுதேவரும் தேவகியும் பகவத்பரராய் வாழ்ந்துவந்தனர். அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்தன. கம்ஸன் அவர்களுடைய குழந்தைகளில் ஆறு குழந்தைகளை வஸுதேவர் கொடுக்கப்பெற்று அவைகளைத் தான் கொண்ட அச்சத்திஞல் கொன்ருன். பிறகு தேவகி ஏழாவது கர்ப்பம் அடையுமுன்னே, அவளையும் வஸுதேவரையும் சிறையில் அடைத்துவிட்டான். சிறைச்சாலையில் தேவகி ஏழாவது கர்ப்பத்தை அடைந்தான். பகவானுடைய யோக மாயை அந்தக் கர்ப்பத்தைக் கலைத்து, வஸுதேவருடைய மற்ருெரு மனைவியாகிய ரோகிணி யென்பவளிடம் சேர்ப்பித்துவிட்டது. ரோகிணி தேவி, மதுரைக்கருகில் யமுனைக்கு அக்கரையிலிருந்த கோகுலத்தில் இருந்தாள். ஆகவே கம்ஸனுக்கு அந்தக் கர்ப்பம் கலைந்துவிட்டதென்று வஸுதேவர் கூறிவிட்டார். பிறகு தேவகி எட்டாவது கர்ப்பமடைந்தாள். அதைக் கேட்டதும் கம்ஸன் சிறைச்சாலைக்குப் போய், தேவகியைத் கொன்றுவிட யத்தனித்தான். அவளது திவ்ய சோபையைக் கண்டதும் அவனுக்கு அவளைக் கொல்ல மனம் வரவில்லை. ஆகையினுல் அவன் வஸுதேவரைப் பார்த்து எட்டாவது குழந்தை பிறந்ததும் சிறிதும் தாமதியாமல் தனக்குத் தெரிவிக்கவேண்டுமென்று சொல்லிவிட்டுச் சென்ருன்.

அப்பால் எட்டாவது குழந்தை பிறக்கும் அன்றிரவில் காவலாளர்களெல்லாம் நெடுநேரம் வரையில் விழித்திருந்தார்கள். ஆயினும் சென்ற சில நாட்களாகத் தூக்கமின்றி விழித்திருந்த சிரமத்தினுல் அப்பொழுது அயர்ந்து தூங்கிவிட்டனர். சென்ற சில நாட்களாகத் தூக்கம் பிடிக்காமல் பயந்து கொண்டிருந்தமையினுல், கம்ஸனும் அன்றிரவு

குழந்தை பிறக்கும் வேளையில், அயர்ந்து நித்திரை போய் விட்டான்.

அப்பால் கோகுலாஷ்டமியாகிய அன்றிரவு சந்திரோதய காலத்தில் தேவகிக்குக் குழந்தை பிறந்தது. அது சங்கு சக்கர பீதாம்பரமுடையதாயும், சதுர்புஜ முடையதாயும் விளங்கியது. அந்தத் திவ்ய சொரூபத்தைக் கண்ணுற்கண்ட தேவகி வஸுதேவர் இருவரும் தாங்கள் சிறைச்சாலையில் இருப்பதையே மறந்துவிட்டார்கள். அவர்களுடைய காலிலே பூட்டியிருந்த விலங்குகள் தாமே கழன்றுபோயின. உடனே அவர்கள், அவதரித்திருப்பது பகவானென்றறிந்து வணங்கித் துதித்தார்கள். பகவான் அவர்களை நோக்கி, "எனது யோகமாயைதான் உங்களுடைய ஏழாவது பிள்ளையை என் கட்டளைப்படி கர்ப்பத்திலேயே கலைத்து ரோகிணி தேவியிடம் சேர்த்தது. அது இப்பொழுது அங்கே என் தமையனுகப் பிறந் திருக்கிறது. யோகமாயை இப்பொழுது யமுனைக்கு அக் கரையிலிருக்கும் நந்தகோபருடைய மனைவி யசோதைக்குப் பெண்ணுகப் பிறந்திருக்கிருள். நீங்கள் காலதாமதம் செய்யாமல் சிசுரூபமாக இருக்கும் என்னை எடுத்துக் கொண்டுபோய் நந்தகோபருடைய வீட்டிற்குச் சென்று யசோதையினிடம் விட்டுவிட்டு அவளிடமிருக்கும் பெண் குழந்தையை இங்கே எடுத்துக்கொண்டு வந்துவிடுங்கள். நீங்கள் தைரியமாக இதைச் செய்யுங்கள். எல்லாம் அநுகூலமாகவே முடியும்" என்று சொல்லிவிட்டுச் சாதாரணக் குழந்தையாய்விட்டார். பிறகு அவர்களுக்கு அந்தக் குழந்தை பகவான் என்ற நினைவே இல்லாமற் போயிற்று. ஆனுல் பகவான் இட்ட கட்டளை மாத்திரம் வஸுதேவருக்கு நினைப்பில் இருந்தது. அவர் உடனே குழந்தையை எடுத்துக்கொண்டு பயத்துடன் சிறைச்சாலையி லிருந்து புறப்பட்டு அதன் கதவைத் தொட்டார். உடனே

கதவு திறந்துகொண்டது. ஆச்சரியத்துடனும் சந்தோஷத்துடனும் அவர் வெளியே வந்தார். காவலாளிகள் அயர்ந்து தூங்குவதைக் கண்டார். ஆயினும் பெரும் பயத்துடன் தெருவுக்கு வந்தார். அப்பொழுது வானத்தில் மேகம் சூழ்ந்து சிறுமழை பெய்தது. சிறு சிறு இடிகள் இடித்தன. வஸுதேவரும் குழந்தையும் மழையில் நனையாமல் இருக்கும்படி ஆதிசேஷன், குடைபோல் மறைத்துக்கொண்டார். வஸுதேவர் மெதுவாய்ப் பகவானைத் தியானம் செய்துகொண்டே நடந்து யமுனைக்கு வந்துசேர்ந்தார். யமுனை கரை புரண்டோடியது. ஆயினும் வஸுதேவருக்கு அந்த யமுனை வழிவிட்டது. ஆகையினால் அவர் யமுனையை எளிதிற் கடந்து கோகுலம்போய் நந்தகோபருடைய வீட்டிற்குள் பிரவேசித்தார்.

அங்கே எல்லோரும் அச்சமயம் அயர்ந்து நித்திரை செய்தனர். நந்தகோபரும் வரிசெலுத்த மதுரைக்குச் சென்றிருந்தார். சமயம் நல்லதாய் இருந்தது. வஸுதேவர் ஒருவருக்குந்தெரியாமல் யசோதையின் பிரசவ அறைக்குள் பிரவேசித்தார். அங்கே யசோதை மயங்கிக் கிடப்பதையும் அவளருகே பெண் குழந்தை ஒன்று படுத்திருந்ததையும் கண்டு மெதுவாய்ப் பகவானை அவள் பக்கத்தில் விட்டு, அந்தக் குழந்தையைத் தாம் எடுத்துக்கொண்டு அந்த வீட்டிலிருந்து வெளிப்பட்டு வேகமாக நடந்து மதுரைக்குப் போய்ச் சிறைச்சாலையிற் பிரவேசித்துக் குழந்தையைத் தேவகியினிடம் விட்டுவிட்டுக் கதவைச் சாத்தினார். அதன் பூட்டுத் தானே விழுந்துவிட்டது. பிறகு விலங்கை யெடுத்துத் தேவகி காலில் மாட்டித் தமக்கும் மாட்டிக் கொண்டார். விலங்கு உடனே பூட்டிக்கொண்டது. இவற்றை யெல்லாம் கண்ட வஸுதேவரும் தேவகியும் பகவானுடைய செயலை எண்ணி எண்ணிச் சந்தோஷம் அடைந்தார்கள்.

இச்சமயத்தில் குழந்தை அழுதது. அதைக் கேட்டுக் காவலாளிகள் விழித்துக்கொண்டு ஓடிப்போய்க் கம்ஸனுக்குத் தெரிவித்தனர். அப்பொழுதுதான் அவன் கிருஷ்ணன் பிறந்துவிட்டதாக ஸ்வப்னம் கண்டு விழித்துக் கொண்டான். இச்செய்தி செவியிற் கொண்டவளவில், "ஆ! அப்படியா! இதோ வந்தேன்! வந்தேன்!" என்று கூறிக்கொண்டு எழுந்து ஓடிவந்து சிறைச்சாலையிற் பிரவேசித்துப் பார்த்துத் தேவகியினிடம் குழந்தையைக் கொடுக்கும்படி கேட்டான். தேவகி அந்தக் குழந்தையைக் கொல்லவேண்டாமென்று எவ்வளவோ தூரம் சொல்லிப் பார்த்தாள். அவன் கேட்கவில்லை. பிடிவாதமாய்க் குழந்தையை அவள் கரத்திலிருந்து பிடுங்கி ஒருபாறைமேல் எறிந்து கொல்லப்பார்த்தான். அப்பொழுது அந்தக் குழந்தை அவன் கையிலிருந்து கிளம்பி உயரப்போய், காளிதேவியின் உருவங்கொண்டு நின்று அவனைப் பார்த்து, "அடே பாவி, என்னைக் கொல்வதால் உனக்கென்ன லாபம்? உனக்கு யமனாக இருப்பவன் வேறோரிடத்தில் வளருகிறான். குழந்தைகளை வீணே கொல்லாதே" என்று கூறிவிட்டு மறைந்தது.

என்ன செய்வான் கம்ஸன்! "ஐயோ, வீணே தங்கையினுடைய குழந்தைகளையெல்லாம் கொன்றேனே, மூடன்" என்றெண்ணித் தங்கையினிடம் இரக்கங்கொண்டு சிறைச்சாலைக்குட் போய் வஸுதேவரையும் தேவகியையும் கண்டு தன்னை மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டு அவர்களைச் சிறைச்சாலையிலிருந்து விடுவித்தான். வஸுதேவரும் தேவகியும் கம்ஸனுக்குப் பல நியாயங்கள் கூறிச் சமாதானப்படுத்திவிட்டுத் தங்கள் வீட்டுக்குப் போனார்கள்.

அப்பால் மறுநாள் பொழுது விடிந்ததும், கம்ஸன் தன் மந்திரி பிரதானிகளுடனிருந்து ஆலோசனை செய்து,

பூதனை யென்கிற ராக்ஷஸியை வருவித்து, எந்தக் குழந்தை பலமும் திடமுமுடையதாய்க் காணப்படுகிறதோ அதை எப்படியாவது கொன்றுவிடும்படிக் கட்டளை யிட்டான்.

---

## இருபத்தாறும் அத்தியாயம்

### ஸ்ரீகிருஷ்ணனின் குழந்தைப் பருவம்

யசோதைக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கும் செய்தி கோகுல முழுவதும் பரவியது. எல்லோரும் சந்தோஷம் அடைந்தார்கள். சந்தோஷத்தில் நந்தகோபர் தான தருமங்களைச் செய்தார். அப்பால் கோகுலம் செழிப் படைந்தது. பல செளகரியங்கள் உண்டாயின.

இப்படியிருக்கையில், கம்ஸன் ஏவிய பூதனையென்கிற ராக்ஷஸி, மானிட ஸ்திரீயைப்போல் நெடுகிலும் போய் அநேக குழந்தைகளைக் கொன்றுகொண்டே வந்து, யசோதையின் வீட்டில் வந்து அவள் குழந்தையை எடுத்துப் பால் கொடுத்தாள். எல்லோரும் யாரோ ஓர் இடைச்சி, குழந்தையினிடம் ஆசையாய்ப் பால்கொடுப்ப தாக நினைத்துக்கொண் டிருந்தார்கள். பால் கொடுக்கும் போதே அவள், "ஆ! ஆ!" என்று அலறிக்கொண்டு கீழே விழுந்தாள். அவள் அக்கணமே ராக்ஷஸரூப மடைந்து உயிரைவிட்டாள். இதைக் கண்டு நந்தகோபர் முதலிய ஆடவர்களும், யசோதை முதலிய ஸ்திரீகளும் ஆச்சரிய மடைந்து குழந்தைக்குத் திருஷ்டி கழித்து, இதன் காரணம் யாதோ தெரியவில்லையே யென்றெண்ணி ஒருவர்க் கொருவர் பலவாறாகப் பேசிக்கொண்டார்கள். அக் குழந்தை, எல்லாம் உணரவல்ல பகவானானபடியினாலே,

பூதனை வந்து பால் கொடுத்தவுடன் அவளுடைய வஞ்சக எண்ணத்தை அறிந்து அவளிடம் பால் குடிக்கும்போதே அவள் உயிரையும் சேர்த்து உறிஞ்சிவிட்டது.

பிறகு கோபாலர்கள் பூதனையின் சரீரத்தைக் கொளுத்தினார்கள். அந்தப் பிணத்திலிருந்து உண்டான புகை நல்ல சந்தனக்கட்டை முதலியவற்றின் புகைபோல் நல்லவாசனை வீசியது. இதனாலே எல்லோரும் பூதனை பாபம் நீங்கப்பெற்றாள் என்று அறிந்து ஆநந்தம் அடைந்தனர்.

அப்பால் வஸுதேவர், கர்க்கர் என்கிற புரோகிதரைக் கோகுலத்திற்கு அனுப்பி யசோதை குமாரனுக்கும் ரோஹிணியின் குமாரனுக்கும் பேர்வைக்கும்படி செய்தார். கர்க்கர், ரோகிணியின் குமாரனுக்கு ராமன் என்றும், யசோதையின் குமாரனுக்குக் கிருஷ்ணன் என்றும் பெயரிட்டு, செய்யவேண்டிய சடங்குகளைச் செய்தார். இப்படி கர்க்கர் வந்து நாமகரணம் செய்தது ஒருவருக்கும் தெரியாது. தெரிந்தால் ஒருவேளை கம்ஸன் இந்தக் குழந்தைகளின் பேரில் சந்தேகம் கொள்வானென்று வஸுதேவர் இதை வெகு ரகஸியமாக முடித்தார். கர்க்கர் நந்தகோபரை நோக்கி, "இக்குழந்தைகளை அசுரர்களால் கொல்ல முடியாது; ஆயினும் நீங்கள் வெகு ஜாக்கிரதையுடன் இவர்களைக் காப்பாற்றுங்கள்" என்று கூறிச் சென்றார்.

பிறகு அந்தக் குழந்தைகள் இருவரும் குப்புறத் தவழ்ந்து எழுந்து தளர்நடையிட்டு அப்பால் ஓடி ஆடிச் சிரித்து மழலைபேசிப் பெற்றோர்களுக்குப் பரமானந்தத்தைக் கொடுத்துவந்தனர். அவர்கள் சில சமயம் கன்றுக்குட்டிகளை அவிழ்த்துப் பசுவினிடம் பால்குடிக்கும்படி செய்வார்கள்; சில சமயம், மாடுகளைக் கட்டுத்தறியினின்றும் அவிழ்த்து

விட்டுவிடுவார்கள். உரியிலிருந்து வெண்ணெயைத் திருடிக் குரங்குகளுக்குக் கொடுத்து விளையாடித் தாங்களும் உண்பார்கள். அண்டைவீட்டுக் குழந்தைகளை அழவிட்டு வேடிக்கை பார்ப்பார்கள். தங்களுக்கு எட்டாத உயரத்திலிருக்கும் உரிகளிலுள்ள பால், தயிர், வெண்ணெய்களை உரல் முதலியவற்றின் மீதேறி எடுத்து உண்டுவிட்டு ஓடிவிடுவார்கள்.

இப்படியாக இன்னும் பலவிதமான விளையாடல்களைச் செய்துவந்தனர். ஒரு சமயம் பலராமன் ஓட்டமாக ஓடி வந்து யசோதையைப் பார்த்து, "அம்மா, கிருஷ்ணன் மண்ணைத் தின்றுவிட்டான்" என்று சொன்னான். அதைக் கேட்டதும் யசோதை, "எங்கேயடா அவன்?" என்று கேட்டுக்கொண்டே போய்க் கிருஷ்ணனைப் பிடித்து, "ஏனடா மண்ணைத் தின்றாய்?" என்று கேட்டாள். கிருஷ்ணன், "இல்லையம்மா! யார் சொன்னது நான் மண்ணைத் தின்றதாக?" என்றான். யசோதை கையில் கோலை எடுத்துக்கொண்டு, "உண்மையைச் சொல்" என்று அதட்டிக்கேட்டு, "வாயைத்திற பார்ப்போம்" என்றாள். கிருஷ்ணன் வாயைத் திறந்தான். யசோதை வாயைப் பார்த்தாள். அந்த அழகிய சிறு வாயில் அவள் பிரபஞ்சங்களிலுள்ள சகல வஸ்துக்களையும் கண்டாள். கண்டதும் பெரு வியப்படைந்து பிரமித்து நின்றுவிட்டாள். அதைக் கண்டு குழந்தையான கிருஷ்ணன் வாயை மூடினான். பிறகு யசோதைக்குத் தன் குழந்தை என்கிற அன்பு உண்டாயிற்று. அதை எடுத்துக் கொஞ்சி முத்தமிட்டாள்.

அப்பால் ஒரு நாள் யசோதை தயிர் கடைந்துகொண்டிருந்தாள். கிருஷ்ணன் பால்குடிக்க அழுதான். யசோதை குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண்டே தயிர் கடைந்தாள். அப்பொழுது பக்கத்தில் அடுப்பில் பால்

காய்ந்துகொண்டிருந்தது. அது பொங்கியது. அதைக் கண்ட யசோதை குழந்தையைக் கீழே விட்டுவிட்டு அடுப்பண்டை போனாள். குழந்தை தயிர்ப்பானையை உடைத்து வெண்ணெயை எடுத்துக்கொண்டு வேறொரு பக்கம் போய்த் நின்றுகொண்டிருந்தான். யசோதை பாலை இறக்கி வைத்துவிட்டு வந்து தயிர்ப்பானையைப் பார்த்தாள். தயிர்ப்பானை உடைந்து தயிரெல்லாம் கீழே கொட்டுண்டிருந்தது. கிருஷ்ணனைக் காணவில்லை. என்ன செய்வாள்! கோபம் வந்துவிட்டது. உடனே கிருஷ்ணனைத் தேடிக் கண்டுபிடித்து, "அடே போக்கிரி, உன்னை என்ன செய்தால் ஆகாது" என்று கேட்டு அடிக்கப்போனாள். அடிக்க மனம் வரவில்லை. அதனால் கயிறுகொண்டு கட்டினாள். எவ்வளவு கயிறு கொண்டுவந்து கட்டியும், கிருஷ்ணனைக் கட்டுவதற்குக் கயிறு இரண்டு விரற்கடை குறைவாகவே இருந்தது. பார்த்து யசோதை ஆச்சரியப்பட்டுப் பிரமித்து நின்றாள். பிறகு கிருஷ்ணன் அந்தக் கட்டுக்கு உட்பட்டான். யசோதை கிருஷ்ணனை ஓர் உரலில் சேர்த்துப் பிணித்துவிட்டு, "நீ இனி என்ன செய்வாய், பார்க்கிறேன்" என்று கூறித் தன் காரியம் செய்யப் போய்விட்டாள்.

பிறகு கிருஷ்ணன் அந்த உரலை இழுத்துக்கொண்டே தவழ்ந்து சென்றான். பத்தடி போனதும், அங்கே இரண்டு மரங்கள் சேர்ந்தாற்போல் நெருங்கி வளர்ந்திருந்தன. அந்த மரங்களின் நடுச்சந்தின் வழியே கிருஷ்ணன் சென்றான். உரல் மரத்தில் குறுக்கிட்டு மாட்டிக் கொண்டது. கிருஷ்ணன் ஒருதரம் வலித்து இழுத்தான். மரங்கள் இரண்டும் அடி பெயர்ந்து, இடிமுழக்கம்போல் சத்தங்கேட்கக் கீழே விழுந்தன. நல்ல வேளையாய் அவை கிருஷ்ணன்மீது விழவில்லை. அம்மரங்களிலிருந்து இரண்டு அசுரர்கள் வெளிப்பட்டு, "நாங்கள் சாபத்தினால் மரமாக

இருந்தோம். எங்களுக்குச் சாபவிமோசனஞ் செய்வித்தாய். ஏ கிருஷ்ணு! உனக்கு அனந்தகோடி நமஸ்காரம்" என்று கூறிவிட்டுப் போய்விட்டார்கள்.

மரங்கள் விழுந்த ஓசையைக் கேட்டு யசோதை முதலியவர்கள் வந்து பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அங்கிருந்த சில இடைப்பிள்ளைகள் நடந்ததைச் சொன்னுர்கள். எல்லோரும் கேட்டு இதுவும் கம்ஸனுல் ஏவப்பட்ட ராக்ஷஸர்கள் செய்யும் வேலையாக இருக்கும் என்று தீர்மானித்தார்கள். யசோதை குழந்தையை எடுத்து முத்தமிட்டு அதற்கு நந்தகோபரைக்கொண்டு திருஷ்டி தோஷம் போக்கிவைத்தாள்.

அப்பால் நந்தகோபர் முதலிய இடையர்களெல்லோரும் சேர்ந்து ஆலோசனைசெய்து, "இங்கிருந்தால் கம்ஸனுடைய தொந்தரவு நமக்கு அடிக்கடி உண்டாகும். ஆதலின் நாம் வேறிடத்திற்குப் போய்விடவேண்டும்" என்று தீர்மானித்தார்கள். அதற்கேற்ப வசுதேவரும் "கோகுலத்தில் இருக்க வேண்டாம்; பிருந்தாவனம் போய் விடுங்கள்" என்று சொல்லி யனுப்பினுர். ஆகவே இடையர்களெல்லோரும் மறுநாளே கோகுலம் விட்டுப் புறப்பட்டுப் பிருந்தாவனம் போய்க் குடியேறிவிட்டார்கள்.

---

## இருபத்தேழாம் அத்தியாயம்

—(o)—

### ஸ்ரீகிருஷ்ணனின் இளமைப் பருவம்

பிருந்தாவனத்தில் ராமகிருஷ்ணர்கள் பல விளையாட்டுகள் விளையாடினர்; ஓடி நடமாடச் சக்தி வந்ததும், மாடுமேய்க்கும் பிள்ளைகளோடு சேர்ந்து கொண்டு மேய்ச்சல் துறைக்குப் போய்ப் பசுமாடுகளை

மேய்த்து வருவாராயினர். அப்படி அவர்கள் ஒருநாள் மாடுகளை ஓட்டிக்கொண்டு போகையில் கம்ஸனுடைய ஏவலால் ஓர் ராக்ஷஸன் 'பசுங்கன்றுபோல் உருவங் கொண்டு மாடுகளோடு சேர்ந்துகொண்டான். அதை யறிந்த கிருஷ்ணன், அக்கன்றைப் பிடித்து வழியில் ஒரு தோப்பிலிருந்த விளாமரத்தின்மீது தூக்கி யெறிந்தான். அதிற் பழுத்திருந்த விளாம்பழங்கள் கலகலவென்று உதிர்ந்தன. கன்றும் உயரத்திலிருந்து கீழே தொப்பென்று விழுந்து இறந்தது. மாடு மேய்க்கும் கோபாலர்களெல்லாம் அந்த விளாம்பழங்களைப் பொறுக்கிச் சந்தோஷமாகத் தின்றனர்.

பின்னொரு நாள், எல்லோரும் சேர்ந்து தங்கள் மாடுகளுக்குத் தண்ணீர் காட்டக் குளக்கரைக்கு ஓட்டிக் கொண்டு போயினர். அக்குளக்கரையில் ஒரு கொக்கு உட்கார்ந்திருந்தது. அதோடு கம்ஸனுடைய நண்பனாகிய பகாசுரன் என்பவனும் ராமகிருஷ்ணர்களைக் கொல்ல அங்கே காத்திருந்தான். அவன் கிருஷ்ணனை விழுங்கி விட்டான். இடைச்சிறுவர்களெல்லோரும் இதைக்கண்டு பயந்தார்கள். உள்ளே சென்ற கிருஷ்ணன் தீயைப்போல் அசுரனுடைய தொண்டையைச் சுட்டான். சுடவே அவன் கண்ணனைக் கக்கிவிட்டானானாலும் மூக்கினால் குத்திக் கொல்லப்பார்த்தான். கிருஷ்ணன் அவன் மூக்கைப் பிடித்துப் பிளந்து கொன்றான்.

இப்படிக் கிருஷ்ணன் செய்தது பிருந்தாவனத்து யாதவர்களுக்கெல்லாம் தெரியவே, அவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். பிறகு ஒருநாள் யாதவச் சிறுவர்களெல்லோரும், காட்டில் வேடிக்கையாக இருந்து விளையாட வேண்டுமென்றெண்ணிக் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு காட்டிற்குச் சென்றனர். எல்லோரும் தத்தம் மாடுகளை மேய விட்டுவிட்டுக் கட்டுச் சோற்றை உண்டு ஓடுவதும்,

பாடுவதும், பறவைபோலக் கூவுவதும், குதிப்பதும், கூத்தடிப்பதுமாய் விளையாடினார்கள். அப்படியிருக்கையில் கம்ஸனுடைய ஏவலால் வந்த பகாசுரன் என்பவன், ஒரு பெரிய பாம்புருவங்கொண்டு, மேல்வாயை ஆகாயத்திலும் கீழ்வாயைப் பூமி மட்டத்திலும் வைத்துக்கொண்டு ராமகிருஷ்ணர்களுக்காகக் காத்துக்கொண் டிருந்தான். விளையாடிய கோபாலர்கள், பாம்பின் வாயை ஒரு பெரிய குகையின் துவாரமென்று கருதி அதனுட் சென்றனர். கிருஷ்ணன் உள்ளே நுழைந்ததும், தன் வாயை மூடிக்கொண்டான். உள்ளே சென்ற கிருஷ்ணன் தன்னுடைய தேகத்தைப் பெரிதாக்கிக்கொண்டான். அந்தப் பகாசுரன் கண்பிதுங்கி மண்டைபிளந்து, வயிறு கிழிந்து இறந்தான். பிறகு கிருஷ்ணன் வெளிவந்து மற்றவர்களை உயிர்பெற்றெழும்படி செய்தான்.

அப்பால் எல்லோரும் முன்போல் வேடிக்கையாக விளையாடத் தொடங்கினர். கிருஷ்ணன் வேணுகானம் செய்து கொண்டிருந்தான். அப்பொழுது மேய்ந்து கொண்டிருந்த மாடுகள் எங்கேயோ மறைந்துவிட்டன. கோபாலர்களெல்லாம் மாடுகளைக் காணேமே யென்று கூறி நான்கு புறமும் பார்த்துக்கொண்டு பிரமித்து நின்றனர். கிருஷ்ணன் தான் தேடி மாடுகளைக் கொண்டு வருவதாக அவர்களிடம் சொல்லிவிட்டுச் சென்றான்; எங்கும் தேடிப்பார்த்தான், காணவில்லை. ஆகவே திரும்பிக் கோபாலர்களிடம் வந்தான். கோபாலர்களையும் காணவில்லை. இது என்ன இப்படி நேர்ந்தது? காரணம் என்னவென்று ஆலோசனை செய்தான். தன்னுடைய லீலையைக் கண்டு மகிழ்ந்த பிரம்மதேவர் இதைவிடச் சிறந்ததான வேறொரு லீலையைப் பார்க்கவேண்டுமென்று இவ்வாறு செய்தார் என்று கண்டுகொண்டான். உடனே கிருஷ்ணன் தானே அந்தப் பசுக்களாகவும் கோபாலர்க

ளாகவும் ரூபங்கொண்டு அவரவர் வீட்டிலிருந்து வந்தான். இப்படி ஒரு வருஷகாலம் இருக்க நேர்ந்தது. பிறகு பிரம்மதேவர் கோகுலம் வந்து பார்த்தார். கிருஷ்ணன் இவ்வாறு மாடுகளாகவும் கோபாலர்களாகவும் விளங்குவதை அறிந்து வியப்படைந்து, காட்டில் முன் போல் மாடுகளும் கோபாலர்களும் இருக்கும்படி செய்தார். கிருஷ்ணனும் அவர்களுக்கிடையில் விளங்கினான். அப்பொழுது பிரம்மதேவர் சாஷ்டாங்கமாகக் கிருஷ்ண பகவானை வணங்கித் துதித்து விடைகொண்டு சென்றார். கோபாலர்களுக்கு இந்த ஒரு வருஷம் போனது தெரியாமலிருக்கும்படி பிரம்மதேவர் செய்துவிட்டபடியால் அவர்கள், "கிருஷ்ணா, மாடு தேடப்போனாயே, மாடுகளை எங்கே கண்டுபிடித்துக்கொண்டு வந்தாய்? வா, சாப்பிடுவோம்" என்று கூறி விளையாடினார்கள். பிறகு வீட்டுக்குப் போனதும் தம் பெற்றோர்களுக்கு, "எங்களைப் பெரிய மலைப்பாம்பு விழுங்கிவிட்டது; கிருஷ்ணன் அதைக் கொன்று எங்களைக் காப்பாற்றினான்" என்று அன்று நடந்ததை விவரமாய்த் தெரிவித்தனர். கிருஷ்ணன் அசுரவதம் செய்தது அவனுடைய ஐந்தாவது வயதில். நடுவில் ஒரு வருஷம் ஆகிவிட்டபடியால், இப்பொழுது கிருஷ்ணனுக்கு ஆறாவது வயது.

அப்பால் ஒருநாள் அவர்களெல்லோரும் மாடு மேய்த்துக்கொண்டு கொஞ்சதூரம் சென்றனர். அங்கொரு பனந்தோப்பு இருந்தது. அதில் பழங்கள் பழுத்துக் குலைகுலையாய்த் தொங்கின. கோபாலர்கள் அப்பழங்களைத் தின்ன விரும்பினர். கிருஷ்ணன், "நான் போய்க் கொண்டு வந்து தருகிறேன்" என்றான். கோபாலர்கள், "இந்தத் தோப்புக்குள்ளே போகாதே; இங்கே தேனுகன் என்கிற அசுரன் இருக்கிறானாம். அவன் யார் போனாலும் அவர்களைக் கொன்றுவிடுகிறானாம்" என்றனர்.

இதைக்கேட்டதும் கிருஷ்ணனும் பலராமனும் நகைத்து உடனே ஓடிப் பனந்தோப்புக்குள் நுழைந்தனர். பலராமன் பனம்பழங்கள் கலகலவென்று உதிரும்படி மரங்களைப் பிடித்து அசைத்தான். கிருஷ்ணன், "ஓடிவந்து பொறுக்கித் தின்னுங்களடா" என்ருன்.

கிருஷ்ணன் பின்னெருநாள் வழக்கம்போல் இடைப் பிள்ளைகளோடு சேர்ந்து மாடு மேய்க்கப்போனுன். அன்று பலராமன் போகவில்லை. மாடுகளை மேய்த்துக்கொண்டே எல்லோரும் நெடுந்தூரம் போயினர். கோடைக்கால மாதலால் வெயில் அதிகமாய் அடித்தது. அதனுல் அவர்களுக்குத் தாகம் அதிகரித்தது. தாகவிடாய் தீர்த்துக் கொள்ள அவர்கள் அங்கிருந்து கொஞ்சதூரம் போய்க் கங்காநதியை அடைந்து அதிலிருந்து காளிந்தி என்னும் மடுவில் நீரருந்தினர். மாடுகளும் நீரருந்தின. உடனே இடைப்பிள்ளைகளும் மாடுகளும் இறந்துபோக, கிருஷ்ணன் தன்னுடைய அமுதநோக்கினுல் அவர்களை உயிர்ப்பித்தான். இந்நீரை யருந்தியதும் எல்லோரும் இப்படி மடிந்துபோகக் காரணம் யாதென்று ஆலோசித்தான். அதில் காளிங்கன் என்று ஒரு ஸர்ப்பம் வசித்துக்கொண் டிருக்கிறதென்றும், அதன் விஷத்தினுல் அந்த மடுவின் நீர் விஷத்தன்மை யடைந்திருக்கிறதென்றும் அறிந்துகொண்டான். உடனே அம்மடுவின் கரையின் மேலிருந்து ஒரு கடம்பமரத்தின் மேலேறி அதில் திடீரென்று குதித்து அதைக் கலக்கினுன். அதிலிருந்த நாகம் சீறிக்கொண்டு மேலே கிளம்பிக் கிருஷ்ணனைச் சுற்றிக்கொண்டது. இதைக் கண்ட கோபாலர்கள் பயந்து குய்யோ முறையோ என்று கத்திக்கொண்டு கீழேவிழுந்து அழுதார்கள். அப்பொழுது பிருந்தாவனத்தில் பெரிய அபசகுனங்கள் உண்டாயின. அதனுல் நந்தகோபர் முதலியவர்கள் கிருஷ்ணனுக்கு என்னவோ ஆபத்து வந்துவிட்டதென்று தீர்மானித்துப்

பயந்து அவனைத் தேடுவதற்காகப் புறப்பட்டனர். பலராமன், "கிருஷ்ணனுக்குஆபத்து வராது. அவனைப்பற்றி நீங்கள் பயப்படவேண்டாம், அவனை எவராலும் ஏதும் செய்யமுடியாது" என்று கூறித் தடுத்தான். அவர்கள் கேளாமல் காடுகாடாகத் தேடிக்கொண்டுபோய்க் காளிந்தி மடுவிற்குப் போயினர்; கிருஷ்ணனிருக்கும் நிலைமையையும் கோபாலர்கள் கதறுவதையும் கண்டார்கள். என்ன செய்வார்கள் பாவம்! தங்கள் உடலில் உயிரற்றவர்கள் போல் ஆனார்கள். பலராமன் அப்பொழுது நகைத்து, "கிருஷ்ணா, எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்; ஏன் தாமதம்?" என்று சொன்னான். கிருஷ்ணன் உடனே சிறு நகை செய்து தன் உடலைப் பெரிதாக்கினான். பாம்பு சங்கடப்பட்டுக் கட்டைத் தளர்த்திக்கொண்டது. கிருஷ்ணன் உடனே வெளிப்பட்டுக் குதித்து அப்பாலே போனான். பாம்பு படமெடுத்துக்கொண்டு கடிக்க வந்தது. கிருஷ்ணன் குதித்தோடி அதன் படத்தைக் கையினால் பிடித்து அதன் மேலேறி நின்று நடனமிட்டு அழுத்தினான்; பெரும் பாரமாகக் காட்டினான். அதனால் காளிங்கன் மூச்சுத் திணறிப்போய் பெருந் தொந்தரவடைந்தது. கிருஷ்ணன் அதை விடுகிற வழியைக் காணோம். அதை யறிந்த காளிங்கனுடைய மனைவி வெளிவந்து கிருஷ்ணனைப் பணிந்து தன் கணவனுக்கு உயிர்ப்பிச்சை தரும்படிக் கேட்டது. கிருஷ்ணன் மனமிரங்கிக் காளிங்கனை விட்டிறங்கி, "இங்கு நீ இனிக் கணமும் தாமதியாதே; இப்பொழுதே நீ முன் இருந்த ரவணகம் என்னும் தீவுக்கு ஓடிப்போ" என்று ஆக்ஞை செய்தான். காளிங்கன் அவ்வாறே அந்தத் தீவுக்குத் தன் குடும்பத்தோடு போய் விட்டது.

காளிங்கனிருந்த அந்தத் தீவில் நாகர்களிருந்தார்கள். அவர்கள் கருடனுக்குப் பயந்து அவர்களில் ஒவ்வொருவரும்

ஒவ்வொரு பக்ஷத்திற் கொருதரம் ஒரு மரத்தடியில் உணவு வைத்துவந்தார்கள். ஒருமுறை அந்த உணவைக் காளிங்கன் தின்றுவிட்டது. அதனால் கருடன் கோபங்கொண்டு காளிங்கனைத் துரத்தியது. காளிங்கன் ஓடிவந்து, இந்த மடுவில் ஒளிந்துகொண்டான். இந்தக் காளிந்தி மடுவிற்குக் கருடன் வருவதில்லை. இந்த மடுவிலிருந்த மீன்களை ஒரு சமயம் கருடன் பிடிக்கவந்தான். அங்கே அப்பொழுதிருந்த ஒரு ரிஷி, "மீன்களைக் கொல்லாதே" என்று கட்டளையிட்டார். பசி மிகுந்திருந்தபடியால் ரிஷி கூறியதைப் பொருட்படுத்தாமல் மீன்களைப் பிடித்துத் தின்றுவிட்டான். அதனால், ரிஷி கோபங்கொண்டு, "நீ இனி இந்த மடுவுக்கு வந்து எந்தப் பிராணியைக் கொன்றாலும் இறப்பாய்" என்று கடுஞ்சாபம் தந்தார். அதனால் கருடனுக்கு இந்த மடுவுக்கு வரப் பயம். பகவானுடைய திருவடிச்சுவடு காளிங்கனுடைய படத்தில் பதிந்திருக்கிறபடியால் கருடன் அதைக் கண்டதும் காளிங்கனை ஒன்றும் செய்யவில்லை. கருடன் பகவானுடைய வாகனமல்லவா?

இவ்வளவு லீலைகளும் முடிவு பெற, அன்று பகல் நேர முழுவதும் கழிந்துபோய் அஸ்தமனம் ஆய்விட்டது. ஆகையினால் கோபாலர்களெல்லோரும் அன்றிரவு அங்கேயே தங்கிவிட்டார்கள். நடு இரவில் ஒரு பெரிய காட்டுத்தீ அவர்களைச் சூழ்ந்துகொண்டது. எல்லோரும் அஞ்சி நடுங்கினர். கிருஷ்ணன் அந்தத் தீயை விழுங்கி எல்லோரையும் காப்பாற்றினான்.

இப்படியிருக்கையில் நாரதர் கம்ஸனிடம் போய், "உன் பகைவர்கள் பலராம கிருஷ்ணர்களாகப் பிருந்தாவனத்தில் இருந்துகொண்டு அநேக லீலைகளைச் செய்கிறார்கள்" என்று சொல்லிவிட்டார். ஆகவே கம்ஸன், அவர்களைப் பிடித்துவர, பிரலம்பன் என்னும் ஓர் அசுரனை ஏவினான். அவன் இடைச்சிறுவனைப்போல் உருக்கொண்டு

இவர்களோடு கலந்துகொண்டான். அவன் வந்துசேரும் போது கிருஷ்ணன் முதலியவர்கள் பலவிதமான விளையாட்டுகள் விளையாடிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு விளையாட்டில் எவன் தோல்வியடைகிறானோ அவன் ஜெயித்தவனை இவ்வளவு தூரம் தூக்கிக்கொண்டு போவதென்று ஒரு நிபந்தனை ஏற்படுத்திக்கொண்டார்கள். பிரலம்பனும் பலராமனும் சேர்ந்து விளையாடினார்கள். அதில் பலராமன் ஜெயித்தான். ஆகவே பிரலம்பன் பலராமனைத் தூக்கிச் சென்றான். கொஞ்சதூரம் போனதும் பிரலம்பன் உயரக் கிளம்பி ஓடப்பார்த்தான். பலராமன் தன் உடல் அதிகமாகக் கனக்கும்படி செய்து கொண்டான். அப்போது அந்த அசுரன் தன் சுயரூபத்தை எடுத்துக்கொண்டான். அதைக் கண்டதும் பலராமன், அவன் மண்டையில் ஓங்கி ஒரு குத்துக் குத்தினான். அவன் உடனே பெருங்குரலிட்டுக்கொண்டு கீழே விழுந்து உயிர் துறந்தான். இதைக் கண்ட எல்லோரும் ஆச்சரியம் அடைந்தார்கள்.

இவ்வாறு கிருஷ்ணன் லீலைகள் செய்துகொண்டு வருகையில் கோபிகைகள் எல்லோரும் கிருஷ்ணனிடம் ஈடுபட்டு அவனைக் கண்டு மகிழ்வதும் அவன் இல்லாத சமயத்தில் அவனைத் தியானித்து ஆனந்த மடைவதுமாய் இருந்தனர். கிருஷ்ணன் அவர்கள் தன்னிடம் கொண்டிருக்கும் அன்பை உணர்ந்து அவர்களுக்கு எப்போதும் ஆனந்தத்தை உண்டாக்கிக்கொண்டிருந்தான்.

பின்பொருநாள் கிருஷ்ணன் இடையர்களோடு மாடு மேய்க்கச் சென்றான். போகும்போது பல பேச்சுகளைப் பேசிக்கொண்டே, அவர்களை வெகுதூரம் அழைத்துக் கொண்டு போய்விட்டான். கோபாலர்களுக்கெல்லாம் பசி உண்டாய்விட்டது. அதை அறிந்த கிருஷ்ணன் அவர்களை யழைத்து, "அதோ அங்கே பிராம்மணர்கள் யாகம்

செய்கின்றனர்; அவர்களிடம் போய் எங்களை ஞாபகப் படுத்தி அன்னம் கேளுங்கள்" என்றான். அவர்கள் அப்படியே செய்தார்கள். பிராம்மணர்கள் அவர்களுக்கு அன்னம் படைக்கவில்லை. பிறகு கிருஷ்ணன் அவர்களை அந்த அந்தணர்களுடைய மனைவிமார்களிடம் போய்க் கேட்கும்படி சொன்னான்; அவர்கள் போய்க் கேட்டார்கள். அவர்கள் பலராம கிருஷ்ணர்களுடைய மகிமையை உணர்ந்து சந்தோஷத்துடன் போஜனம் சமைத்து எடுத்துக்கொண்டு கோபாலர்களுடன் கிருஷ்ணனிடம் வந்து போஜனத்தை வைத்துத் தரிசித்தார்கள். கிருஷ்ணன் சந்தோஷமடைந்து அவர்களைப் பார்த்து, "சந்தோஷம்; உங்களுக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும்" என்றான். அவர்கள் கிருஷ்ணனையும் பலராமனையும் கண்குளிரப் பார்த்துவிட்டு விடைகொண்டு சென்றார்கள். அவர்களுடைய கணவன்மார்கள், தங்கள் மனைவியர் செய்ததைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆனால் கம்ஸனுக்குப் பயந்து அவர்கள் கிருஷ்ணனைத் தரிசிக்க வரவில்லை.

---

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

---

### கோவர்த்தன தாரணமும் ராஸக்கிரீடையும்

**பி**ன்னர் ஒருநாள் கோபாலர்கள் எல்லோரும் சேர்ந்து இந்திரனுக்குப் பூஜைசெய்ய யத்தனித்தார்கள். அதையறிந்த கிருஷ்ணன் அவர்களைப் பார்த்து, இந்திரனுக்கு எதற்காகப் பூஜை போடுவது? அவனால் நமக்கு என்ன உபகாரம்? நாம் பிராம்மணர்களாலும் பசுக்களாலும் பயனை அடைகிறோம். மலை நம்முடைய பசுக்களுக்கு வேண்டிய புல்லைக் கொடுக்கிறது.

ஆகையினால் இவைகளைத் தெய்வ மூர்த்தங்களாகக் கொண்டு பூஜிப்போம்" என்று கூறி, அந்த யத்தனத்தைத் தடுத்தான். கோபாலர்கள், கிருஷ்ணன் கூறியபடியே காட்டிற்குப் போய் மலையையும், பசுக்களையும், பிராம்மணர்களையும் பூஜை செய்தனர். இதனால் இந்திரன் சினங்கொண்டு பிருந்தாவனத்தில் ஏழு நாள் வரையில் கல் மழை பொழியும்படி மேகங்களுக்கு ஆக்ஞை செய்தான். அவ்வாறே மழை பொழியத் தொடங்கியது. கோபாலர்களெல்லோரும் பயந்து கிருஷ்ணபகவானிடம் சரணம் புகுந்தனர். கிருஷ்ணன் உடனே ஒரு பெரிய உருவங் கொண்டு கோவர்த்தனமென்னும் பெரிய மலையைப் பெயர்த்தெடுத்துத் தூக்கிக் குடைபோல் தாங்கி நின்றான். கோபாலர்களெல்லோரும் அந்த மலையினடியிலே போய்த் தங்கியிருந்தனர். ஏழுநாள் அகோராத்திரம் மழை கொட்டியது. இந்திரன் தன்னால் ஒன்றும் செய்ய முடியாதது கண்டு கிருஷ்ணனிடம் வந்து அவனைப் பணிந்து துதித்து, அவனுக்குக் கோவிந்தன் என்னும் பெயர் தந்து சென்றான். கிருஷ்ணனுடைய இந்த அற்புதமான செய்கையைக் கண்ட எல்லோரும் ஆச்சரியம் அடைந்தார்கள்; அவனைப் பகவானென்று அறிந்து மகிழ்ந்தார்கள்.

இப்படியிருக்கையில் ஒருநாள் அசுர வேளையில் நந்தகோபர் காளிந்தியில் அனுஷ்டானம் செய்ய இறங்கினர். வருணதேவனுடைய ஏவலாளாகிய ஓர் அசுரன் அவரைப் பிடித்து இழுத்துக் கொண்டுபோய் வருணதேவனிடம் விட்டான். இதையறிந்த கிருஷ்ணன் வருணலோகம் சென்றான். அங்கே வருணன் கிருஷ்ணனை வணங்கி வரவேற்றுச் சகல உபசாரங்களையும் செய்து, நந்தகோபரையும் கிருஷ்ணனுடன் அனுப்பினான். நந்தகோபர் பிருந்தாவனம் வந்ததும் தாம் வருணனிடம்

போனதையும், அங்கே கிருஷ்ணனுக்கு நடந்த மரியாதைகளையும் கோபாலர்களுக்குச் சொல்லி மகிழ்ந்தார். கோபாலர்களுக்குக் கிருஷ்ணமூர்த்தியின் உண்மை உருவைக் காண வேண்டுமென்கிற அவா உண்டாயது. கிருஷ்ணன் அவர்களெல்லோரையும் பிரம்மகிதை என்கிற மடுவில் முழுகும்படிச் செய்து அங்கே தன் திவ்யரூப தரிசனம் தந்தான். பிறகு அவர்கள் வெளிவந்து பகவானை வணங்கித் துதித்தார்கள்.

பிறகு கிருஷ்ணன் கோபிகைகளுக்குத் தன் லீலைகளால் திருப்தியை உண்டாக்கக் கருதி ஒருநாள் சரத்கால இரவில் சந்திரன் பிரகாசிக்கிற வேளையில் பிருந்தாவனத்திலிருந்த ஒரு சோலைக்குள்ளே போய் நின்று வேணுகானம் செய்தான். கோபிகைகள் வேணுகானத்தைக் கேட்டுப் பரமானந்த மடைந்து கிருஷ்ணனைச் சூழ்ந்துகொண்டு தங்கள் அன்பு முழுவதையும் அவனிடம் செலுத்தினார்கள். கிருஷ்ணனும் அவர்கள் மகிழும்படி செய்தான். அப்பொழுது கோபிகைகள், தங்களைவிடச் சிறந்தவர்களில்லையென்று கர்வங் கொண்டார்கள். அதையறிந்த கிருஷ்ணன் உடனே மறைந்துவிட்டான். எல்லோரும் கிருஷ்ணனைக் காணோமே யென்று தேடத் தொடங்கினார்கள். தேடிக்கொண்டு காட்டு வழியே போகையில் அங்கே கிருஷ்ணனும் ஒரு கோபிகையும் போனதுபோல் அடிச்சுவடுகள் காணப்பட்டன. அவற்றைக் கண்டு, "ஐயோ! இந்தக் கோபிகை பாக்கியஞ் செய்தவள். அந்தப் பாக்கியம் நமக்கில்லாது போயிற்றே" என வருத்தப்பட்டார்கள். சிலர் தாமே கிருஷ்ணனாக எண்ணிக்கொண்டு அவன் செய்த லீலைகளையெல்லாம் செய்துகொண்டு போயினர்.

அப்படி அவர்கள் கொஞ்சதூரம் போனதும் ஒரு கோபிகை கீழே விழுந்து விசனப்பட்டுக்கொண்டிருப்பதைக்

கண்டார்கள். அவளைப் பார்த்து, "ஏனடி அம்மா, இப்படிப்பட்ட கதி உனக்கு?" என்று கேட்க, அவள், "கிருஷ்ணன் என்னை இங்கே அழைத்துக்கொண்டு வந்து புஷ்பங்களால் என்னை அலங்கரித்து என்னோடு விளையாடினான். நான் கர்வங்கொண்டு நடக்கமுடியவில்லை என்றேன். அவன் என்னைத் தூக்கிக்கொண்டு இங்கே வந்ததும், திடீரென்று மறைந்துவிட்டான். பாவி பகவானை இழந்து இங்கே தவிக்கிறேன்" என்றாள். இதைக் கேட்டதும் அவர்கள், கர்வங்கொள்ளக் கூடாதென்று உணர்ந்து பகவானைப் பாடித் துதித்தனர். பகவான் அவர்களுக்குப் பிரத்தியக்ஷமாய் அவர்களோடு யமுனைக் கரை போய் அவர்களோடு அங்கே சற்று நேரமிருந்து அவர்களைப் பார்த்து, "உங்களுக்கு என்னிடம் பக்தி மாறாதிருக்கும் பொருட்டே நான் மறைந்தேன்" என்று கூறி, அவர்களைச் சந்தோஷப்படுத்தினான். கோபிகைகள் வட்டமாகச் சூழ்ந்துநிற்க, தான் அவர்களில் இரண்டுபேருக்கு மத்தியில் ஒவ்வொருவனாக நின்று கொண்டு ராஸக்கிரீடை யென்னும் விளையாட்டு விளையாடினான். அப்பொழுது கோபிகைகள் மெய்ம் மறந்து ஆடிப் பாடினார்கள். அவர்களுக்கு வேறெந்த நினைப்புமில்லை. இவ்வாறு ஆனந்தமடைந்த அவர்களுடன் கிருஷ்ணன் ஜலக்கிரீடை செய்தான். பிறகு பொழுது விடிந்ததும் கோபிகைகள் அவனை விட்டுப் பிரியமாட்டாமல் பிரிந்து தத்தம் வீடு சென்றனர்.

ஒரு நாள் கோபாலர்கள் ஸரஸ்வதி நதிக்கரையி லிருந்து ஒரு விரதம் அனுஷ்டித்தனர். அப்பொழுது நந்தகோபரை ஒரு பெரிய பாம்பு விழுங்கத் தொடங்கி யது. அதைக்கண்ட கோபாலர்க ளெல்லோரும் அதைக் கொள்ளிக்கட்டைகளைக் கொண்டு அடித்துத் துரத்தி னார்கள், அது போகவில்லை. நந்தகோபர், "கிருஷ்ணா,

கிருஷ்ணு!" என்று கத்தினர். கிருஷ்ணன் ஓடிவந்து தன் காலால் அதைத் தீண்டினன். தீண்டிய மாத்திரத்தில், எல்லோரும் ஆச்சரியப்படும்படி அது வித்தியாதர ரூபம் கொண்டது. வித்தியாதரன் கிருஷ்ணனைப் பார்த்து, 'நான் ஒரு சமயம் கர்வத்தினல் சில ரிஷிகளைப் பரிகசித்தேன். அதனல் இப்படிப்பட்ட தாழ்ந்த பிறவியை அடைந்தேன்" என்று சொல்லிப் பணிந்து துதித்து விடைகொண்டு சென்றன்.

பின்னெரு நாள் கிருஷ்ணன் கோபாலர்களோடு மாடுகளை மேய்க்கக் காட்டுக்குச் சென்றிருந்தான். அங்கே கம்ஸனுடைய ஏவலால் அரிஷ்டாஸுரன் என்பவன் பெரிய காளை யுருக்கொண்டு வந்து மாடுகளை வெருட்டினன். அதை யறிந்த கிருஷ்ணன் ஓடி, அதன் கொம்பைப் பிடித்துக் குலுக்கி முன்னும் பின்னுமாக இழுத்துக் கீழே தள்ளி உதைத்துக் கொன்றன். இதைக்கண்டு கோபாலர்கள் கிருஷ்ணனைப் புகழ்ந்து மகிழ்ந்தனர்.

இப்படியிருக்கையில் நாரதர் கம்ஸனுடைய சபைக்குப் போய், அவனிடம் வஸுதேவர் கிருஷ்ணனைக் கோகுலம் கொண்டுபோய் யசோதையினிடம் விட்டுவந்தது முதல், பிறகு நடந்தவைகள் யெல்லாம் சொன்னர். கம்ஸன் இது கேட்டதும் கடுங்கோபங் கொண்டு வஸுதேவரைக் கொல்ல முயன்றன். நாரதர் தடுக்கவே, அவன் தேவகியையும் வசுதேவரையும் சிறையிலிட்டுக் கேசி என்கிற அசுரனை ஏவிக் கிருஷ்ணனைக் கொன்றுவரும்படி அனுப்பினன். அவன் குதிரையுருக்கொண்டு பிருந்தாவனம் வந்து கனைத்துக் குதித்தான். கிருஷ்ணன் அக்குதிரையை அசுரனென்று அறிந்து ஓடி எதிர்த்தான். அது கிருஷ்ணனை உதைத்தது. உடனே கிருஷ்ணன் அதன் வாயில் கையை விட்டுத் தூக்கிக் கீழே தள்ளினன். அது உடனே உயிர் துறந்தது.

ஒருமுறை கோபாலர்கள் திருடர்களைப்போலவும் சேவகர்களைப்போலவும் பாவித்துக்கொண்டு விளையாடினார்கள். சிலர் ஆடுகளைப்போல் கத்திக்கொண்டு விளையாடினார்கள். அப்பொழுது கம்ஸனுடைய ஏவலால் ஓர் அசுரன் அங்கே வந்தான். அவன் திருடனைப்போல் வேடம் பூண்டு நடித்துக்கொண்டே, ஆடுகளைப்போல் நடித்த கோபாலர்களை விளையாட்டுப் போக்கிலேயே அழைத்துக்கொண்டு போய் ஒரு மலைக்குகைக்குள் அடைத்து, மேலே ஒரு பெரிய பாறையை எடுத்துப் போட்டு மூடிவிட்டான். இது கிருஷ்ணனுக்குத் தெரிந்தது. கிருஷ்ணன் ஓடி அவனைப் பிடித்துக் கறகறவென்றிழுத்துக் கீழே தள்ளி உதைத்துப் புரட்டி ஒரு நொடியிற் கொன்று விட்டுக் குகையில் மூடியிருந்த கல்லைப் புரட்டித் தள்ளிக் கோபாலர்களை மீட்டான்.

இப்படியாகவே கம்ஸன் தன் மந்திரிகளுடனிருந்து பலராம கிருஷ்ணர்களைக் கொல்லுவதற்கு வழி யாது என்று ஆலோசித்தான்; வில்விழா, மல் யுத்தம் இரண்டும் ஏற்படுத்துவதென்றும், அன்றைத்தினம் பலராம கிருஷ்ணர்களை வருவிப்பதென்றும், வந்தவுடன் அவர்களைக் குவலயாபீட மென்கிற யானையை ஏவியாவது, மல்லர்களுடன் மல்யுத்தஞ் செய்யவிட்டாவது கொல்வதென்றும் தீர்மானம் செய்திருந்தான், அப்படிச் செய்வதே சிறந்த யுக்தியென மந்திரிகளும் கூறினர். உடனே அந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற நாள் வைக்கப்பட்டது. கம்ஸன் யாதவ சிரேஷ்டராகிய அக்ரூரர் என்பவரை அழைத்து, "நீர் நாளைத்தினமே புறப்பட்டுப் பிருந்தாவனம் போய்ப் பலராம கிருஷ்ணர்களை இங்கே எப்படியாவது அழைத்து வாரும்" என்றான். அக்ரூரர் நல்ல ஞானி; கிருஷ்ணனிடத்தில் பரம பக்தியுடையவர்; அவனை இன்னானென்று உணர்ந்து அவனையே வணங்கும் பக்திமான். அவனுடைய

திறமை அவருக்குத் தெரியும். ஆகையினுல் அவர், "அப்படியே செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு, 'இவனுக்கு முடிவுகாலம் கிட்டிவிட்டது' என்றெண்ணிக் கொண்டே ரதமேறிப் புறப்பட்டுப் பிருந்தாவனம் வந்தார்.

பிருந்தாவனம் வரும்போது சாயங்கால வேளை. நந்த கோபர் வீட்டிற்கருகே தேரை விட்டிறங்கிக் கிருஷ்ணனைத் தியானித்துக்கொண்டே நந்தகோபர் வீட்டிற்குள் பிரவேசித்தார். அங்கே மாட்டுத்தொழுவத்தில் கிருஷ்ண பகவானும் பலராமனும் இருக்கக் கண்டு பரமானந்தம் அடைந்து அவர்களை வணங்கினுர். கிருஷ்ணன் அவரை மார்புறத் தழுவிக்கொண்டு மகிழ்ந்தான். பிறகு பலராமன், அவரைத் தான் இருக்கும் இல்லத்திற்கு அழைத்துச் சென்று செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்தான்.

அப்பால் போஜனம் முடிந்ததும் நந்தகோபர், கிருஷ்ணன், பலராமன் முதலிய யாவரும் ஒருங்கு கூடி மதுரையிலுள்ளார் யோகக்ஷேமங்களை அக்ரூரரிடம் விசாரித்தார்கள். அக்ரூரர் கம்ஸன் செய்யும் அக்கிரமச் செயல்களை எல்லாம் சொன்னுர்; வசுதேவரையும் தேவகியையும் அவன் சிறைப்படுத்தி யிருப்பதையும் கூறினுர். முடிவில் அவன் பலராம கிருஷ்ணர்களைக் கொல்வதற்காகச் சதியாலோசனை செய்திருப்பதையும், அவர்களை அழைத்துவரும்படி தம்மை அனுப்பி இருப்பதையும் கூறினுர். இவற்றை யெல்லாம் கேட்டுப் பலராம கிருஷ்ணர்கள் நகைத்து, "அப்படியே செய்வோம்; புறப்படுவோம் காலையில்" என்றனர். அப்பொழுது எல்லோரும் கம்ஸனை, "மகா பாவி, துரோகி" என்று திட்டினுர்கள்; வருத்தப்பட்டார்கள். கிருஷ்ணன் அவர் களுக்குச் சமாதானஞ் சொல்லித் தேற்றி, மறுநாள் காலையில் புறப்பட்டான். அக்ரூரருடைய ரதத்தில் பலராம கிருஷ்ணர்கள் கால்வைத்து ஏறும்போது

கோபிகைகளெல்லோரும் அவர்களைப் பிரிய நேர்ந்த துக்கம் பொறுக்கமாட்டாமல் அழுதார்கள். பின்னர் அவர்கள் ஒருவாறு சமாதானமடைந்தார்கள்.

அவர்கள் இவ்வாறு புறப்பட்ட கொஞ்சநேரத்திற் கெல்லாம் நந்தகோபரை முன்னிட்டு யாதவர்கள் எல்லோரும் மதுரைக்குப் புறப்பட்டுவிட்டனர். அவர்களுக்குப் பலராம கிருஷ்ணர்களை விட்டுப் பிரிந்திருக்க மனம் துணியவில்லை.

---

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

---

### கம்ஸ வதம்

பலராம கிருஷ்ணர்களும் அக்ரூரரும் வழியில் காளிந்தி நதியின் கரையிலே தங்கினர். அங்கு அக்ரூரர் நதியிலிறங்கி ஸ்நானஞ் செய்தார். நதிக்குள் பகவானைக் கண்டு அவர் ஆனந்தமடைந்தார். உடனே வியப்புடன் பகவான் இங்கே எப்படி வந்தாரென்று எண்ணிக்கொண்டு எழுந்து ரதத்தை நோக்கினர். அதில் பலராம கிருஷ்ணர்கள் இருப்பதைக் கண்டு அதிசயத்துடன் பழையபடி மூழ்கினர். அங்கே பலராம கிருஷ்ணர்கள் இருவரையும் தரிசித்தார். இது என்ன ஆச்சரியம் என்று எழுந்து ரதத்தை நோக்கினர். ரதத்தில் அவர்கள் இருப்பதைப் 'பார்த்து, ஆனந்தத்துடன் பழையபடி மூழ்கினர். அங்கே பகவான் சேஷசாயியாகத் தரிசனம் தந்தார். அதைக் கண்டு அக்ரூரர் தம்மை மறந்தபடி மூழ்கிக்கொண்டே யிருந்தார். உடனே பகவான் மறைந்தார். பிறகு அக்ரூரர், "கண்டேன் காட்சியை; ஆனந்தம் கொண்டேன்!" என்று கூறிக்கொண்டே

எழுந்து ரதத்தில் வந்தேறி மதுரையை நோக்கி ரதத்தை நடத்தினுர்.

அவர்கள் மதுரைக்குப் போனதும் அங்கே நந்தகோபர் முதலிய யாதவர்கள் வந்திருக்கக் கண்டார்கள். கிருஷ்ணன், அக்ரூரரை விட்டுப் பிரிந்து தம் உறவினரோடு நகரத்துக்குள் பிரவேசிப்பதாகச் சொன்னுர். பகவானே விட்டுப்பிரிய மனமில்லாமல் அக்ரூரர் வருந்தினுர். அது கண்ட பகவான் அவரை நோக்கி, "நானும் பலராமரும் உமது வீட்டிற்கு வந்து தங்குகிருேம்; போங்கள்" என்று கூறி அனுப்பிவிட்டுத் தங்கள் உறவினரோடு கலந்து கொண்டனர்.

பிறகு கிருஷ்ணன் எல்லாரோடும் நகரப் பிரவேசஞ் செய்தான். ஜனங்கள் பலராம கிருஷ்ணர்கள்மீது புஷ்பங்களைத் தூவி மகிழ்ந்தனர். வழியில் கம்ஸனுடைய வண்ணுன் வந்தான். அவனைக் கண்ட கிருஷ்ணன் அவனிடம் தனக்கு ஆடைவேண்டுமென்று கேட்டான். அவன் கொடுக்க மறுத்தான். கிருஷ்ணன் அவனிடமிருந்து துணிகளைப் பிடுங்கி உடுத்துக்கொண்டான்; பலராமனுக்கும் கொடுத்தான். அப்பால் கம்ஸனுக்குப் புஷ்பம் கொண்டுபோகும் ஆண்டி எதிரில் வந்தான். கிருஷ்ணன் அவனைப் புஷ்பம் கேட்டான். கேட்டதும் அவன் பகவானுக்கு வேண்டிய புஷ்பங்களைத் தந்து அலங்கரித்து மகிழ்ந்தான். பின்னர்க் கொஞ்சதூரம் போனதும், கம்ஸனுக்குச் சந்தனம் கொண்டுபோனுள் ஒரு கூனி. அவளைச் சந்தனம் கேட்டான் கிருஷ்ணன். அவள் பகவானுக்குப் பக்தியோடு சந்தனங் கொடுத்தாள். கிருஷ்ணன் அவளிடம் சந்தோஷங்கொண்டு அவளுடைய கூனை நிமிர்த்தியருளினுன்.

இப்படி விளையாடல்களைச் செய்து பலராம கிருஷ்ணர்களிருவரும் தனுசு பூஜை நடக்குமிடம் சென்றுர்கள்.

அங்கே ஒரு பெரிய வில் அலங்கரித்து வைக்கப்பட்டு இருப்பதைக் கண்டார்கள். கிருஷ்ணன் உடனே ஓடி அதை எடுக்கப்போனான். காவலாளர்கள் தடுத்தார்கள். அவர்களைக் கிருஷ்ணன் லக்ஷயம் செய்யாமல் அந்த வில்லை வெகு சுலபமாய் எடுத்து நிறுத்தி, இடது கரத்தினால் நாணேற்றினான். அப்பொழுது உண்டான சப்தத்தினால் அந்த மதுராபுரி முழுவதும் நடுங்கியது. கம்ஸனும் ஸ்தம்பித்துப்போய் அச்சங்கொண்டு, இப்படிச் செய்தவன் யாரென வியந்தான்.

மறுநாள் கம்ஸனுடைய சபையில் மல்யுத்தக்களம் ஏற்படுத்திக் கம்ஸன் அங்கு எல்லோரையும் வருவித்தான். நந்தகோபர் முதலியவர்களும் அங்கொரு பக்கம் வந்து உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். பலராம கிருஷ்ணர்கள் அதனுட் பிரவேசிக்கும்போதே அவர்களைக் கொல்லாமல் யுத்தகள வாயிலில் குவலயாபீடம் என்கிற யானையை நிறுத்தி வைத்திருந்தான்.

அந்தச் சபைக்குப் பலராமகிருஷ்ணர்கள் ஆனந்தமாகவும் நிர்ப்பயமாகவும் வந்தார்கள். அவர்கள்மீது யானைப் பாகன் அந்த யானையை ஏவினான். கிருஷ்ணன் அதனோடு விளையாட்டாக யுத்தஞ் செய்து அப்பால் அதைக் கீழே விழுத்திக் காலால் உதைத்துக் கொன்றான். பிறகு அதன் கொம்புகளில் ஒன்றைத் தான் எடுத்துக் கொண்டான். இருவருமாகச் சேர்ந்து யானைப்பாகனை எதிர்த்து அவனைக் கொன்றுவிட்டு ஸபைக்குள் பிரவேசித்தார்கள். இவர்களைக் கண்டதும் அங்கிருந்தவர்கள் எல்லோரும் இவர்களுடைய பிறப்பையும் விளையாடல்களையும் பற்றிப் பேசிக்கொண்டார்கள். அங்கே சாணூரன், முஷ்டிகன் என்ற மல்லர்கள் மல்யுத்தத்திற்கு ஆயத்தமாய் இருந்தார்கள். அவர்களில் சாணூரன் கிருஷ்ணனை எதிர்த்தான். முஷ்டிகன் பலராமனை

எதிர்த்தான். இருவரும் இரண்டு மல்லர்களோடு மல்யுத்த முறைப்படி கொஞ்சநேரம் யுத்தம் செய்தனர். பிறகு யாவரும் வியப்படையும்படி கிருஷ்ணபலராமர் இரண்டு மல்லர்களையும் ஒரு குத்தில் உயிரை வாங்கினர். வேறு சில மல்லகச்செட்டிகள் வந்து எதிர்த்தனர். அவர்களையும் கிருஷ்ணன் யமலோகத்துக்கு அனுப்பினான்.

இவ்வாறு தான் கிருஷ்ணனைக் கொல்வதற்காகச் செய்த முயற்சிகளெல்லாம் வீணாகவே, கம்ஸன் பெருங் கோபங்கொண்டு ஏவலாளர்களைப் பார்த்து, "இந்த இரண்டு பையன்களையும் இக்கணமே இந்த மதுராபுரியை விட்டுத் துரத்துங்கள்; வஸுதேவனையும் தேவகியையும் கொன்றுவிடுங்கள்" என்று கூறி ஆர்ப்பரித்தான்.

இதைக் கேட்டதும் கிருஷ்ணன் உடனே ஓர் ஓட்டத்தில் கம்ஸனிருந்த ஆசனத்தின்மீது தாவி, அவனை மயிரைப் பிடித்துக் கீழே தள்ளிக் குத்திக் கொன்றான். கிருஷ்ணனிடம் கொண்ட பயத்தினால், கம்ஸன் எப்போதும் அவனையே நினைத்துக் கொண்டிருந்தமையினால், பகவானைப் போன்ற திருவுருவம் பெற்றான். கம்ஸனுடைய தம்பி மார்களைப் பலராமன் சங்கரித்தான். அவர்களுடைய மனைவிமார்களெல்லாம் அங்கே வந்து கதறினார்கள். கிருஷ்ணன் அவர்களுக்குத் தேறுதல் சொல்லி இறந்தவர் களுக்கு ஈமக்கடன் செய்யும்படி செய்துவிட்டுக் கம்ஸனுடைய தந்தையையும், வசுதேவ தேவகிகளையும் சிறையிலிருந்து விடுவித்தான். உக்ரசேனனை மதுராபுரிக்கு அரசனாக்கினான். கம்ஸனுக்குப் பயந்து அந்த ஊர்ப்பக்கம் வராமலிருந்த யாதவர்கள் எல்லோரையும் பகவான் அழைப்பித்து மதுரையில் குடியேற்றினான்.

பலராமகிருஷ்ணர் இருவரும் மதுரையிலேயே இருந்து விட்டார்கள். நந்தகோபர் பகவானிடம் விடைகொண்டு

தன் இனத்தவரோடு கோகுலம் போனுன். அப்பால் வசுதேவர், பலராமகிருஷ்ணர்களுக்கு உபநயனம் செய்வித்தார். அவர்களிருவரும் அவந்திபுரியில் வசித்த சாந்தீபினி மகரிஷியிடம் போய்ச் சிஷ்யர்களாயிருந்து வேதம் வேதாங்கம் முதலிய சகல கலைகளையும் இரண்டு மாத காலத்திற்குள் ஓதி உணர்ந்தனர். பிறகு கிருஷ்ணன் தன் குருவிற்குத் தக்ஷிணை கொடுக்க விரும்பினுன். சாந்தீபினி ஆலோசித்து, கொஞ்ச காலத்திற்குமுன் கடலில் விழுந்து இறந்துபோன தம்முடைய குழந்தையை உயிர்ப்பித்துத் தரவேண்டும் என்று கிருஷ்ணனைக் கேட்டார்.

கிருஷ்ணன், அதற்கு இணங்கிச் சமுத்திரத்திற்குப் போய்ச் சமுத்திர ராஜனை அழைத்தார். அவன் உடனே எதிர் தோன்றிப் பணிந்து, செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்தான். கிருஷ்ணன் தான் வந்த காரியத்தைச் சொன்னுன். சமுத்திர ராஜன், "குழந்தை இங்கில்லை. ஓர் அசுரன் பாஞ்சஜன்யம் என்கிற சங்கு ரூபமாக இருக்கிருன். அவன் மறைத்து வைத்திருக்கக்கூடும்" என்ருன். கிருஷ்ணன் உடனே சமுத்திரத்தில் அவ்வசுரனைக் கண்டுபிடித்துக் கொன்று, அவனிடமிருந்த சங்கைப் பார்த்தான். குழந்தை அதில் இல்லை. ஆகவே பாஞ்சஜன்யம் என்ற அந்தச் சங்கை எடுத்துக் கொண்டான். குழந்தை யமபட்டணத்திலேதான் இருக்க வேண்டுமென்று நிச்சயித்தான். உடனே யமனுடைய பட்டணத்திற்குப் போய், பாஞ்சஜன்யம் என்ற சங்கை ஊதினுன். அந்தச் சத்தம் கேட்டதும் யமன் ஓடிவந்து மரியாதை செய்து, வந்த காரியத்தை விசாரித்துத் தெரிந்து கொண்டு, உடனே சாந்தீபினி மகரிஷியின் குழந்தையைக் கொண்டுவந்து பகவானிடம் கொடுத்து வணங்கினுன். பிறகு கிருஷ்ணன் பூலோகம் வந்து சாந்தீபினி முனிவரிடம்

அந்தக் குழந்தையை ஒப்பித்து அவரை வணங்கி ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டான்.

---

## முப்பதாம் அத்தியாயம்

—o—

### கோபாலர்களுக்கு உத்தவரது உபதேசம்

உத்தவர் என்பவர் ஒரு பக்திமான். அவர் விருஷ்ணி வகுப்பைச் சேர்ந்தவர். கிருஷ்ணன் குருதக்ஷிணை கொடுத்து விட்டு மதுராபுரி வந்துசேர்ந்ததும், உத்தவரை அழைத்துத் தன் பிரிவாற்ருமல் வருந்தும் நந்தகோபர் முதலிய கோபாலர்களுக்கு ஞானுேபதேசம் செய்யும்படி அனுப்பினுன். உத்தவர் கிருஷ்ணனுடைய கட்டளைப்படியே கோகுலம் போய் நந்தகோபர் வீட்டில் இறங்கினுர். நந்தகோபரும் மற்றக் கோபாலர்களும் பகவானிடம் ஈடுபட்டு அவர்களுடைய விளையாடல்களைப் புகழ்ந்து பேசிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருப்பதைக் கண்டு பரம சந்தோஷமடைந்தார். அவர்களைக் காணும்படியான பாக்கியம் தமக்கிருந்ததைப் பெரும் புண்ணியமென்று கருதினுர். நந்தகோபர், யசோதை இவர்களை முன்னே வைத்துக்கொண்டு கோபாலர்களுக் கெல்லாம், “பகவான் உங்களுக்குத் திவ்ய தரிசனம் தருவார். அவர் உங்களுக்குச் சமீபத்திலேயே சதாகாலமும் இருப்பார்; கவலைப்படாதே யுங்கள்” என்று கூறிக் கிருஷ்ண பகவானுடைய மகிமையைப்பற்றிப் பேசி அவர்களைத் தேற்றினுர். கோபிகைகளை நோக்கி, “உங்களுக்குப் பகவத் கிருபை பரிபூரணமாக இருக்கிறது. நீங்களே பெரியவர்கள். நீங்கள் உலகத்திலுள்ள மற்றப் பற்றுகள் எல்லாவற்றையும் விட்டு, பகவானிடத்தில் மனத்தைச் செலுத்தியிருக்கிறபடி

யால் உங்களுக்கு எல்லா நன்மைகளும் சித்திக்கும்; கவலைப்பட வேண்டாம். பகவான் எங்கும் இருப்பவர். அவர் உங்களை விட்டு எப்படிப் பிரிந்தவராவர்?" என்று கூறி அவர்களைத் தேற்றினர். பிறகு கொஞ்சநாள் வரையில் கோகுலத்திலேயே இருந்து, கிருஷ்ணனுடைய விளையாடல்களையும் மகிமைகளையும் அங்குள்ளவர்களுக்குச் சொல்லி அவர்களைச் சந்தோஷப்படுத்தி வந்தார். அப்பால் மதுராபுரி போய்க் கிருஷ்ண பகவானிடம் கோபால கோபிகைகளுக்கு இருக்கும் பக்தியைத் தெரிவித்து மகிழ்ந்தார்.

இப்படியிருக்கையில், ஒருநாள் பகவான் கூனியின் வீட்டிற்குப்போய்க் கொஞ்சநாள் இருந்து அவளுக்கு வேண்டிய வரங்களைத் தந்தார். முன்பு அவள் சந்தனங் கொடுத்தாளல்லவா? பின்பு பகவான் அக்ரூரருடைய வீட்டிற்குப் போய் அவரை மகிழ்வித்து அவரைப் பார்த்து, "இப்பொழுது பாண்டவர்கள் தந்தையை இழந்து கஷ்டப்படுகிறார்கள் அல்லவா? நீர் ஹஸ்திநபுரி போய் அவர்களைக் கண்டு சொல்லவேண்டியதைச் சொல்லித் தேற்றிவிட்டு வாரும். திருதராஷ்டிரன், தன் பிள்ளைகளை ஒருவிதமாகவும், அவர்களை ஒருவிதமாகவும் பார்க்கிறான் அதனுல் அவர்கள் வருத்தப் படுவார்கள். அதையும் தடுக்க உம்மாலியன்ற வரையில் ஏதாவது பிரயத்தனம் செய்யும்" என்றான். அக்ரூரர் உடனே பகவானைப் பணிந்து விடைகொண்டு புறப்பட்டு ஹஸ்திநபுரம் போய்ப் பாண்டவர்களைக் கண்டு க்ஷேமம் விசாரித்தார்; திருதராஷ்டிரன் பக்ஷபாதமாயிருக்கிறான் என்பது கேட்டுத் துக்கப்பட்டார். பிறகு திருதராஷ்டிரனுடைய சபைக்குப் போய் அவனைக் கண்டு அவனுக்குச் சொல்லவேண்டிய நியாயங்களையும் தருமங்களையும் சொல்லிவிட்டு மதுராபுரி வந்துசேர்ந்தார். கிருஷ்ணனிடம் பாண்டவர்களுடைய

நிலைமையையும் திருதராஷ்டிரனுடைய போக்கையும் தெரிவித்தார்.

---

## முப்பத்தோராம் அத்தியாயம்

### ஜராஸந்த வதம்

இவ்வாறு கம்ஸவதம் முடியவே, அவனுடைய மனைவிகள் தங்கள் தந்தையாகிய ஜராஸந்தன் காலில் விழுந்து அழுதார்கள். ஜராஸந்தன் மிகப் பொல்லாதவன். கம்ஸனோடு சம்பந்தஞ் செய்துகொண்டவன் எப்படி இருப்பான்? அவன் உடனே மிக்கக் கோபங்கொண்டு பெரும் படையோடு வந்து மதுரையை முற்றுகையிட்டான். அப்பொழுது பகவானுக்குமுன் இரண்டு ரதங்கள் ஆகாயத்திலிருந்து இறங்கின. ஒன்றில் கருடத்துவஜம் இருந்தது. மற்றொன்றில் பனைமரக்கொடி இருந்தது. கருடத்துவஜமுடைய ரதத்திலே பகவான் ஏறிக் கொண்டார். பனைக்கொடியுடைய ரதத்தில் பலராமர் ஏறிக்கொண்டார்.

இருவரும் வெகு கோலாகலத்துடன் போய் ஜராஸந்தனை எதிர்த்தார்கள். ஜராஸந்தன் பகவானைச் சிறு பிள்ளையென்று விலக்கிவிட்டுப் பலராமரோடு சண்டைசெய்தான். பலராமர் சண்டையில் அவனைக் குத்திப் புரட்டி உதைத்துத் தள்ளிக் குற்றுயிராக்கி விட்டார். பகவான் மற்றவர்களைக் கொன்றார். ஜராஸந்தன் தப்பிப் பிழைத்துத் தன் ஊர்போய்ச் சேர்ந்தான்.

பிறகு இப்படிப் பதினேழுமுறை யுத்தத்திற்கு வந்து தோல்வியடைந்து ஓடினான். அப்பால் வெட்கமில்லாமல்

பதினெட்டாவது தடவை சண்டைக்கு வந்தான். அவன் வரும்போது காலயவனன் என்பவன், பெரும் சேனையோடு வந்து மதுரையை முற்றுகையிட்டான். பகவான், தெய்வத் தச்சனைக்கொண்டு மேற்குக் கடலிலே ஒரு தீவில் ஒரு பட்டணத்தை உண்டாக்கி அதற்குத் துவாரகையென்று பெயரிட்டு அங்கே மதுராபுரி வாசிகளைக் குடியேற்றினன். பலராமரை அவர்களுக்குக் காவலாக வைத்துவிட்டுத் தான் மாத்திரம் மதுரையிலிருந்து எதிரிகளை எதிர்த்தான்.

காலயவனன் பகவான் நிராயுதபாணியாய் வந்து இருப்பதைக் கண்டதும், தானும் நிராயுதபாணியாய் இருந்து எதிர்த்தான். கண்ணன் அவனுக்குப் பயந்து ஓடுவதுபோல் ஓடினன். அவனும் துரத்தினன். பகவான் வெகுதூரம் ஓடி ஒரு மலையடிவாரத்துக்குக் கொண்டு போய், அம்மலையிலிருந்த ஒரு குகைக்குள் நுழைந்தான். காலயவனனும் நுழைந்தான். பின்பு அங்கே பகவானைக் காணவில்லை.

அங்கொருவர் படுத்துக்கொண்டிருந்தார். காலயவனன் அவரைக் கண்டதும், "அடே கிருஷ்ணு, உன் மாயம் எனக்குத் தெரியும்! யாரை ஏமாற்றுகிருய்?" என்று கூறி ஆர்ப்பரித்துக் குத்தப் போனன். தூங்கினவர் விழித்துக் கொண்டார். அவர் விழித்த மாத்திரத்தில் காலயவனன் சாம்பலானன்.

குகையில் தூங்கினவர் யாரென்ருல் மாந்தாதாவின் மைந்தராகிய முசுகுந்த சக்கரவர்த்தி. அவர் பரம பக்திமான்; இணையற்ற பராக்கிரமசாலி. அவர் ஒரு சமயம் தேவர்களுடைய சேனைகளுக்கு அதிபதியாய் இருந்தார். சுப்பிரமண்யர் தேவசேனதிபதி யானதும், முசுகுந்தர் தமது சிரமத்தைத் தீர்த்துக்கொள்வதற்கேற்றபடி, நல்ல தூக்கம் தமக்கு உண்டாக வேண்டுமென்று தேவர்களைக் கேட்டுக்கொண்டார். தேவர்கள் அந்த வரத்தைக்

கொடுத்தார்கள். கொடுக்கும்போது, "உன்னை யார் தூக்கத்திலிருந்து எழுப்புகிறார்களோ, அவர்கள் உன்னுடைய கண் நோக்கடைந்த மாத்திரத்தில் சாம்பலாவார்கள்" என்று கூறி அனுப்பினார்கள். இப்படி வரம் பெற்றுவந்து அவர் இங்கே தூங்கிவருகையில் அவருடைய திருஷ்டி பட்டமாத்திரத்தில் காலயவனன் சாம்பலானான்.

அவன் சாம்பலானவுடன், பகவான் முசுகுந்த சக்கரவர்த்திக்குக் காட்சி தந்தான். முசுகுந்தர் பகவானுடைய திவ்யதரிசனத்தைத் திடீரென்று கண்டதும் பிரமித்து நின்று, மிகவும் வணக்கமாய்க் கண்ணனை யாரென்று விசாரித்தார். பகவான் தன் வரலாறு கூறினான். முசுகுந்தர் இது கேட்டதும் பரமானந்தமடைந்து பகவானைத் துதித்து மெய்ம்மறந்து நின்றார். பிறகு மீண்டும் துதித்துத் தம்மைக் கர்ம பந்தத்திலிருந்து விடுவிக்கும்படி கேட்டார். பகவான், "நீ இந்தப் பிறவியில் என்னை மறவாமல் இரு. அதனால் நீ அரசு செலுத்திய காலத்தில் வேட்டையாடிய பாபமெல்லாம் நீங்கும். அடுத்த ஜன்மத்தில் நீ ஒரு ஸத் விப்ரனாகப் பிறப்பாய். பின்னர்ப் பரமபதம் அடைவாய்!" என்று வரந்தந்து மறைந்தான்.

பிறகு முசுகுந்தர் அந்தக் குகையை விட்டு வெளிப்பட்டுப் பதரிகாசிரமம் போய்த் தவம் புரியலானார்.

பகவான் அப்பால் மதுரைக்குப் போய் ஜராஸந்தனை எதிர்த்தார். சண்டையில் பகவான் அவனுக்குப் பயந்தவர் போல் நடித்து ஓடத் தலைப்பட்டார். ஜராஸந்தனும் பகவானைத் தொடர்ந்தான். பகவான் வெகுதூரம் ஓடி, ப்ரவர்ஷணம் என்கிற மலையை அடைந்து அதன் மேலேறி மறைந்தார். ஜராஸந்தன் பகவானை அந்த மலையில் கஷ்டப்பட்டு நெடுகிலும் தேடினான். அங்கே பகவான் அகப்படவில்லை. அதனால் அவன் கோபங்கொண்டு அந்த

மலையைத் தீயிட்டுக் கொளுத்திவிடும்படி தன் சேனைகளுக்கு ஆணையிட்டான். அப்படியே அவர்கள் கொளுத்தினார்கள். கண்ணபிரான் அதிலிருந்து அவனுக்குத் தெரியாமல் வெளிப்பட்டுத் துவாரகை போய்விட்டார். மலை முற்றும் எரிந்து தணிந்தது. பகவான் தீயில் அகப்பட்டு இறந்து விட்டதாக எண்ணிச் சந்தோஷங்கொண்டு ஜராஸந்தன் திரும்பிப் போய்விட்டான்.

---

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

——(o)——

### பலராம கிருஷ்ணர்களின் விவாகம்

அப்பால் கிருஷ்ணபலராமர்களுக்கு விவாகம் செய்ய யத்தனம் செய்யப்பட்டது. ரேவதன் என்கிற ஓர் அரசன் தன் பெண் ரேவதி என்பவளைப் பிரம்மாவின் கட்டளைப்படி பலராமருக்கு விவாகம் செய்துகொடுத்தான்.

இந்தக் காலத்தில் லக்ஷ்மிதேவியே விதர்ப்பாதிபதியாகிய பீஷ்மக ராஜனுக்குப் பெண்ணாக அவதரித்திருந்தாள். அவள் கிருஷ்ண பகவானுடைய குணாதிசயங்களைக் கேள்விப்பட்டு அவனையே கல்யாணம் செய்துகொள்ள விருப்பங் கொண்டிருந்தாள். பகவானும் அவளையே மணஞ் செய்துகொள்ள நிச்சயித்திருந்தான். அவள் பெயர் ருக்மிணி. ருக்மிணிக்கு நான்கு தமையன்மார்கள். அவர்களுள் மூத்தவன் பெயர் ருக்மி. நால்வரும் துஷ்டர்கள். ருக்மி பகவானிடம் விரோதம் கொண்டிருந்தான். அதனால் அவன் தன் தங்கை ருக்மிணியைச் சேதி தேச அரசனுடைய பிள்ளையாகிய சிசுபாலனுக்குக் கொடுப்பதாகப் பேசித் தீர்மானித்து முகூர்த்தம் வைத்தான். முகூர்த்தப் பத்திரிகை எல்லோருக்கும்

அனுப்பப்பட்டமையினால் அரசர்கள் எல்லோரும் வந்துசேர்ந்தனர்.

ருக்மிணி தன் விருப்பத்திற்கு விரோதமாகக் கல்யாணஞ்செய்ய யத்தனம் நடப்பதை யெண்ணித் துக்கப்பட்டாள். அவளை ஒருவரும் கவனிக்கவில்லை, அதனால் அவள் பகவானுக்கு ஒரு கடிதம் எழுதி அதை ஒரு பிராம்மணன் மூலமாக அனுப்பினாள்.

பிராம்மணன் கடிதத்தை எடுத்துக்கொண்டு துவாரகைக்குப் போய்க் கிருஷ்ண பகவானிடம் கொடுத்தான். பகவான் கடிதத்தைப் படித்தார். அதில், "என் ஆசை முழுவதும் உம்மிடமே இருக்கிறது. ஆதலால் என்னை எப்படியாவது மணஞ் செய்துகொண்டு ஆதரிக்க வேண்டும். என்னைச் சிசுபாலனுக்கு விவாகம் செய்து கொடுக்க என் அண்ணன் நிச்சயித்துவிட்டான். முகூர்த்தம் நடக்க இன்னும் இரண்டு நாட்களே இருக்கின்றன. என்னைச் சிசுபாலன் கொண்டு போகாமல் காப்பாற்ற வேண்டும். எங்கள் குலாசாரப்பிரகாரம் கல்யாணத்திற்கு முதல் நாள் என்னைக் கௌரி பூஜைக்கு அனுப்புவார்கள். அப்பொழுது என்னைத் தாங்கள் ராக்ஷஸ விவாக முறைப்படி அங்கிகரித்தருள வேண்டும். இதைத் தவிர வேறு உபாயத்தைக் காணேன். என்னை மன்னிக்க வேண்டும்" என்று எழுதியிருந்தது.

கடிதத்தைப் படித்ததும் கண்ணன் ருக்மிணியிடம் இரக்கங்கொண்டு பிராம்மணனிடம், "நான் வந்து ருக்மிணியின் விருப்பத்தை நிறைவேற்றுவதாகச் சொல்லும்" என்று கூறி அனுப்பிவிட்டான். பிறகு கண்ணன் விதர்ப்ப தேசம் போனான். பலராமரும் யாதவ சேனைகளுடன் அவனுக்குத் துணையாகச் சென்றார். ருக்மிணி கௌரி கோவிலுக்கு வரும் வழியில் கிருஷ்ண

மூர்த்தி ரதத்துடன் காத்துக்கொண் டிருந்தான். கல்யாணத்துக்கு முதல் நாள் ருக்மிணி குலாசாரப்படி கௌரி கோவிலுக்கு மேளவாத்தியத்துடன் சென்று கௌரி பூஜை செய்துவிட்டுத் திரும்பினுள். அப்பொழுது கண்ணன், அவளைத் தூக்கித் தன் ரதத்தில் வைத்துக் கொண்டான். பகவானை ருக்மிணியின் தமையனுன ருக்மி எதிர்த்தான். அவனுடைய சேனைகளையும் அவனைச்சார்ந்த அரசர்களையும் யாதவசேனையும் ,பலராமரும் சேர்ந்து அதமாக்கினர், ருக்மி கிருஷ்ணனனைத் தைரியமாய்த் தொடர்ந்தான். பகவான் அவனைக் கொல்ல ஓர் அம்பை எடுத்தார். அப்பொழுது ருக்மிணி அவனைக் கொல்லாமல் விட்டுவிடும்படி பகவானைக் கேட்டுக்கொண்டாள். கண்ணன் அவனைப் பிடித்துத் தனது தேர்க்காலோடு கட்டி ஐங்குடுமி வைத்துத் துரத்திவிட்டான். அவன் தன் ஊருக்குள் போக வெட்கப்பட்டுக்கொண்டு ஊருக்கு அருகிலிருந்த போஜகடம் என்னும் பட்டணத்திலிருந்து அரசுபுரிந்துவந்தான். பிறகு கிருஷ்ணன் ருக்மிணியைத் துவாரகைக்குக் கொண்டுபோய் நல்ல சுபமுகூர்த்தத்தில் வேதவிதிப்படி விவாகம் செய்துகொண்டான்.

கிருஷ்ண பகவானுக்கு ருக்மிணியினிடம் குழந்தை பிறந்தது. அதற்குப் பிரத்யும்னனென்று பெயரிட்டார்கள். அவனைத் தன் பகைவனென அறிந்த சம்பரன் என்கிற அசுரன், தன் மாயா சக்தியினுல் ருக்மிணியின் பிரசவ அறைக்குட் பிரவேசித்துச் சிசுவை எடுத்துக் கடலில் எறிந்துவிட்டான். அந்தக் குழந்தையை ஒரு பெரிய மீன் விழுங்கியது. அந்த மீன் வலைஞர் வலையிலே சிக்கியது. அவர்கள் அதைச் சம்பராசுரனுக்குக் கொடுத்துச் சன்மானம் பெற்ருர்கள். சம்பராசுரனுடைய சமையற் காரர்கள் அந்த மீனை அறுத்தனர். அதன் வயிற்றில் குழந்தை உயிரோடிருந்தது. அது பகவானுடைய குழந்தை

யல்லவா? அதை மாயாவதி யென்கிற வேலைக்காரியினிடம் கொடுத்தார்கள். மாயாவதி அந்தக் குழந்தையை வைத்திருக்கப் பயந்தாள். நாரதர் அவள்முன் தோன்றி, "பெண்ணே, நீ முன் ஜன்மத்தில் ரதி; இவன் முன் ஜன்மத்தில் மன்மதன். ஆகையினால் இவனை நீ காப்பாற்றி வா. இவன் சம்பராசுரனை வதஞ்செய்து உனக்கு மணவாளனுவான்" என்று கூறித் தேற்றி மறைந்தார். பிறகு மாயாவதி பயமின்றிப் பிரத்யும்னனை வளர்த்துவந்தாள். அவன் பெரியவனுனதும் மாயாவதியினிடத்திலிருந்து, அசுரமாயைகளைத் தடுத்து அச்சம்பரனை வெல்லும் விதத்தை அறிந்தனன். அறிந்தவுடன் அந்தச் சம்பரனை எதிர்த்துப் பொருது வதஞ்செய்து மாயாவதியுடன் துவாரகையை அடைந்தான்.

பிரத்யும்னன் முதலில் அந்தப்புரத்தில் பிரவேசித்தபடியால் அவனைக் கண்ட ருக்மிணிக்கு அவனிடம் அன்பு உண்டாயிற்று. ருக்மிணி அதனால் வியப்படைந்து, 'இவன் யாரோ தெரியவில்லையே! இவனிடம் எனக்கு அன்பு உண்டாகிறதே' என்று எண்ணித் திகைத்து நின்றாள். அப்பொழுது அங்கே கிருஷ்ணபகவான் வந்தான். நாரதரும் அச்சமயத்தில் வந்து சேர்ந்தார். நாரதர் பிரத்யும்னனையும் மாயாதேவியையும் பற்றி அவர்களுக்கு விஸ்தாரமாகச் சொன்னார். எல்லோரும் சந்தோஷமடைந்து பிரத்யும்னனையும் மாயாவதியையும் ஆசிர்வதித்தார்கள். பிறகு அவர்கள் இருவருக்கும் விவாகம் விமரிசையாக நடந்தது. பிரத்யும்னனுக்கு அநிருத்தன் என்று ஒரு பிள்ளை பிறந்தான்.

துவாரகாபுரிக்கருகில் சத்துருஜித்து என்று ஒரு வேந்தன் இருந்தான். அவன் சூரிய பகவானிடம் பக்தி செலுத்தும் உத்தமன். சூரிய பகவான் அவனுக்கு ஸ்யமந்தகம் என்னும் ஒரு மணியைக் கொடுத்தார். அந்த

மணி சூரியனைப்போன்ற பிரகாசமுடையது. அது வியாதிகளைத் தடுக்கக்கூடிய சக்தி வாய்ந்தது. நாள் ஒன்றுக்கு எட்டுப் பாரம் தங்கம் கொடுக்கும். அதை அவன் ஒரு நாள் தன் கழுத்தில் அணிந்துகொண்டு பகவானிடம் வந்தான். பகவான் அந்த மணியைக் கண்டதும் அது தனக்கு வேண்டுமென்று கேட்டார். அவன், "இது எனக்குச் சூரிய பகவான் தந்தது. இதைக் கொடுத்தற்காகாது" என்று சொல்லிப் போய்விட்டான்.

பிறகு ஒருநாள் அந்த அரசனுடைய தம்பி அந்த மணியை அணிந்துகொண்டு வேட்டைக்குப் போனான். வேட்டையாடி வருகையில் ஒரு சிங்கம் அவனைக் கொன்று அந்த மணியைக் கவ்விக்கொண்டு ஓடியது. வழியில் அதை ஜாம்பவான் மடக்கிக் கொன்று அந்த மணியைத் தன் பெண்ணுக்கு ஆபரணமாக்கிக் கொண்டது.

தம்பி இறந்ததையும், மணி காணமற் போனதையும் சத்துருஜித் அறிந்து விசனப்பட்டான். "கிருஷ்ணன் என்னிடத்தில் மணியைக் கேட்டான்; நான் அவனுக்கு அதைக் கொடுக்க மறுத்தேன். அவன்தான் இந்த வேலை செய்து விட்டான் போலும்" என்று சொன்னான். அரசன் இப்படிச் சொன்னது பகவானுடைய காதிற் பட்டது. கண்ணன், "சை! இப் பழியை நாம் நீக்கிக்கொள்ள வேண்டும்" என்றெண்ணி உடனே தன் பரிவாரங்களோடு புறப்பட்டுச் சத்துருஜித்தின் தம்பி இறந்துகிடந்த இடத்திற்குப் போய்ப் பார்த்தான். அங்கிருந்து அடிச்சுவடு ரத்தம் முதலியவற்றைப் பிடித்துக்கொண்டு ஒரு குகைக்குப் போய் அதில் நுழைந்தான். பரிவாரங்கள் எல்லாம் வெளியே இருந்தனர். போனவன் வெகு நேரமாகியும் வெளியே வரவில்லை. அதனால் அவர்கள் துவாரகைக்கு ஓடி நடந்ததைக் கூறினர்.

அதைக் கேட்டதும் எல்லோரும் சத்துருஜித்தைத் திட்டினார்கள்; பகவான் க்ஷேமமாய் வரவேண்டுமே என்று பூஜை முதலியன செய்தார்கள். பிறகு பகவான் பத்தொன்பதாவது நாள், ஸ்யமந்தக மணியோடும் ஜாம்பவதி யென்கிற ஒரு பெண்ணோடும் துவாரகை வந்து சேர்ந்தான். மணியைச் சத்துருஜித்தினிடம் கொடுத்தான். ஜாம்பவதியைப் பகவான் மணந்துகொண்டான்.

பகவான்மேல் பழி சுமத்தியது சத்துருஜித்தின் மனத்தைத் துன்பப்படுத்தியது. அதனால் அவன் தன் பெண் ஸத்யபாமையைப் பகவானுக்குக் கல்யாணம் செய்துகொடுத்து, அந்த மணியையும் கொடுத்து மனத்திருப்தி யடைந்தான்.

பிறகு, பாண்டவர்கள் அரக்குமாளிகையில் துரியோதனனுடைய சூழ்ச்சியினால் இறந்துவிட்டார்கள் என்ற செய்தி கேட்டுப் பகவானும் பலராமரும் ஹஸ்தினபுரம் போனார்கள். அப்பொழுது சததன்வா என்பவனொருவன் சத்துருஜித்தை இரவில் கொன்றுவிட்டு மணியைக் கொண்டுவந்துவிட்டான். ஸத்யபாமை மிகத் துக்கமடைந்து தன் தந்தையின் தேகத்தைத் தைலக் கொப்பரையிலிட்டுப் பத்திரப்படுத்திவிட்டு ஹஸ்தினபுரம் சென்று கிருஷ்ண பகவானிடம் சொன்னாள். பகவான் உடனே பலராமருடன் புறப்பட்டுச் சததன்வாவைக் கொல்லவந்தான். அவன் பயந்து சத்துருஜித்தைக் கொல்லும்படி தன்னைத் தூண்டிய அக்ரூரர், கிருதவர்மா இவர்களிடம் வந்து சரணமடைந்தான். அவர்கள், "பகவானுக்குமுன் நாங்கள் எம்மாத்திரம்?" என்று கூறவே அவன் ஸ்யமந்தகம் என்கிற அந்த மணியை அவர்களிடம் கொடுத்துவிட்டு ஓடிவிட்டான். பகவான் அவனைப் பின்தொடர்ந்து கொன்றான். அவனிடம் மணி இல்லாதிருக்கவே, "சை, இவனைக் கொன்றது வீண்" என்றெண்ணித் திரும்பித் துவாரகை வந்துசேர்ந்தான்.

பலராமர் அப்படியே மிதிலை போய், அங்கே அத் தேச ராஜனிடம் சில வருஷகாலம் தங்கினர். பிறகு பகவான் சத்துருஜித்துக்கு ஈமக்கடன்களைச் செய்து முடித்தான். சததன்வா இவ்வாறு இறந்ததைக் கேட்டதும் அக்ரூரரும் கிருதவர்மாவும் பகவானுக்குப் பயந்து ஊரை விட்டு ஓடிப்போய் விட்டார்கள். அக்ரூரர் சென்றதும் துவாரகையில் மழையற்றுப் போய்விட்டது. ஜனங்கள் கஷ்டப்பட்டார்கள். பிறகு பகவான் அக்ரூரரைத் தேடி அழைத்துக்கொண்டு வந்து அவரை உபசரித்து அவரிடம் ஸ்யமந்தகமணி இருக்கக் கண்டு சந்தோஷமடைந்து அந்த மணியை அவருக்கே கொடுத்துவிட்டான்.

அப்பால் ஒரு நாள் கண்ணபிரான் பாண்டவர்களைப் பார்க்க இந்திரப்பிரஸ்தம் போனான். அங்கிருந்து அர்ஜுனனோடு வேட்டையாடச் சென்று யமுனாநதியில் நீர் அருந்தி இருவரும் களைப்பினால் அதன் கரைமேல் சற்றுத் தங்கினர். அப்பொழுது அங்கே அழகிய பெண் ஒருத்தி வந்தாள். அவளைக் கண்டதும் அர்ஜுனன் யாரென்று விசாரித்தான். அவள், "நான் பகவானைக் கல்யாணஞ் செய்துகொள்ள விரும்பியுள்ளவள்; என் பெயர் காளிந்தி. நான் அவரை விவாகம் செய்துகொள்ளும் வரையில், என் தந்தை இந்த யமுனையிலே கட்டியுள்ள பட்டணத்திலேயே இருப்பேன்" என்றாள். அர்ச்சுனன் பகவானிடம் இதைச் சொன்னான். பகவான் சந்தோஷம் அடைந்து அவளை ரதத்தில் ஏற்றி வைத்துக்கொண்டு ஹஸ்தினாபுரம் வந்தான். பிறகு காளிந்தி தேவியுடன் துவாரகை சென்று அவளை மணம் செய்துகொண்டான்.

பிறகு கண்ணன் தன் அத்தை பெண்ணாகிய மித்ரவிந்தா தேவி என்பவளைப் பலாத்காரமாகக் கொண்டு வந்து விவாகம் செய்துகொண்டான். இவள் பகவானை ஸ்வயம்வரத்தில் வரனாக வரித்தாள். இவள் சகோதரர்கள்,

துரியோதனனிடம் கொண்ட பயத்தால் பகவானுக்குக் கொடுக்காமல் வைத்திருந்தார்கள்.

பிறகு பகவான் ஸத்யவதிதேவி என்பவளை மணந்து கொண்டார். இவள் அயோத்தியை ஆண்டுவந்த ரத்னஜித் என்பவனுடைய பெண். ரத்னஜித் ஏழு கொழுத்த எருதுகள் வைத்திருந்தான். அவைகளை அடக்கிக் கொல்லுகிறவர்களுக்குத் தன் பெண்ணைக் கொடுப்பது என்று கூறிவந்தான். கண்ணன் அவனது அந்த ஏழு எருதுகளையும் பிடித்து அடக்கிக்கொன்று ஸத்யவதியை மணந்துகொண்டான்.

அப்பால் அவன், சுருதகீர்த்தி தேவியை மணந்து கொண்டான். இவள் கேகய ராஜன் பெண். பகவானுடைய அத்தை மகள். இவளை அவள் சகோதரர்களே பகவானுக்கு விரும்பி விவாகம் செய்துகொடுத்தார்கள்.

அதன் பிறகு கிருஷ்ணன் மத்திர தேசாதிபதியின் பெண்ணாகிய பிருஹத்ஸேனை என்பவளை ஸ்வயம்வரத்தில் மணந்துகொண்டான்.

இவ்வாறு பகவான் எட்டுப் பட்ட மகிஷிகளை அடைந்தான்.

பிராக்ஜ்யோதிஷம் என்னும் பட்டணத்தில் நரகாசுரன் என்றோர் அசுரராஜன் இருந்தான். அவன் மகா கொடியவன். அவனுக்காக எல்லோரும் பயந்து அடங்கியிருந்தனர். அவன் ஒரு சமயம் இந்திரனுடைய குடையையும் அவன் அன்னையின் கர்ண குண்டலங்களையும் திருடிக்கொண்டு வந்துவிட்டான். அதை அறிந்த பகவான் அவ்வசுரன்மீது படையெடுத்துச் சென்றான். ஸத்யபாமையும் சென்றிருந்தாள். பகவான் அவ்வசுரனைக் கொன்று அவனுடைய பட்டணத்திற்குள் நுழைந்தான். அங்கு அவ்வசுரனால் சிறையாக்கப்பட்டிருந்த

பதினாறாயிரத்து நூறு ராஜ கன்னிகைகளைக் கண்டான். அவர்கள் பகவானைக் கண்டதும், அவனையே விவாகம் செய்துகொள்ள விரும்பினர். அதையறிந்த கண்ணன் அவர்கள் விருப்பப்படி அவர்களை விவாகம் செய்து கொண்டான். ஆகவே பகவானுக்குப் பதினாறாயிரத்து நூற்றெட்டு மனைவிமார்களாயினர். பகவான் அவர்கள் எல்லோரையும் துவாரகைக்கு அனுப்பிவிட்டுத் தேவலோகம் போனான். அங்கே போய்த் தேவேந்திரனிடம் அவனுடைய குடையையும் அவன் அன்னையினிடம் அவளுடைய கவச குண்டலங்களையும் கொடுத்தான். ஸத்யபாமையின் விருப்பத்திற் கிணங்கி அங்கிருந்த பாரிஜாத மரத்தை வேரோடு பெயர்த்துக் கருடன்மீது ஏற்றிக்கொண்டு பூலோகத்துக்கு வந்து ஸத்யபாமையின் வீட்டுக் கொல்லையில் அதை நட்டான். பிறகு கிருஷ்ணன் தன்னுடைய மனைவிமார்களுடன் சுகமாய் இருந்து வந்தான்.

---

## முப்பத்து மூன்றாம் அத்தியாயம்

### உஷா பரிணயம்

இதன் பிறகு ஒரு நாள், ருக்மிணியின் பிள்ளை பிரத்யும்னனுக்கு ருக்மியின் பெண்ணைப் பகவான் விவாகம் செய்துவைத்தார். அவள் பெயர் ருக்மாவதி. ஸ்வயம்வரத்தில் ருக்மாவதி பிரத்யும்னனுக்கு மாலை யிட்டாள். பகவானிடம் ருக்மி பகை கொண்டிருந்த போதிலும், ருக்மாவதி ஸ்வயம்வரத்தில் மாலை யிட்டபடியால் அவளைப் பிரத்யும்னனுக்கு விவாகம் செய்துகொடுத்தார். பிறகு அவன் தன் பேத்தி ரோசனை

என்பவளைப் பிரத்யும்னன் பிள்ளை அநிருத்தனுக்குக் கொடுத்தான்.

இந்தக் கல்யாணத்தில் ருக்மியும் பலராமரும் சூதாடினர். அந்த ஆட்டத்தில் ருக்மி இரண்டு மூன்று தடவை அவரை வஞ்சித்தான். அதனால் அவர் கோபங் கொண்டு அவனைக் கொன்றார்; அவன் பக்கத் துணையாயிருந்தவர்களுடைய பல்லையும் தகர்த்து அவமானம் செய்தார்.

இப்படியிருக்கையில் ஒருநாள் அநிருத்தன் காணமற் போய்விட்டான். யாதவர்கள் எல்லோரும் நாலு பக்கங்களிலும் ஓடி அவனைத் தேடிப் பார்த்தார்கள். எங்கும் காணவில்லை. அதனால் அவர்கள் மிகவும் துக்கப்பட்டார்கள். அப்பொழுது நாரதர் வந்து, "அநிருத்தனைப் பாணாசுரன் சிறை யிட்டுவிட்டான்" என்று கூறினர். உடனே பகவான் அவனோடு போருக்குப் புறப்பட்டார்.

பாணாசுரனென்பவன் சோணித புரத்தில் அரசுபுரிந்து வந்தான். அவன் மகாபலியினுடைய முதற் பிள்ளை. அவனுக்குத் தொண்ணூற்றென்பது தம்பிமார்கள். பாணாசுரன் பிரபல சிவபக்தன். சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து ஆயிரங் கரங்களைப் பெற்றான். இதனையன்றி அந்தப் பரமசிவத்தையே தன் நகரத்திற்குள் காவலாகச் செய்துகொண்டான்.

இப்படிக் கர்வங்கொண்டிருந்த பாணாசுரன், ஒருநாள் பரமசிவத்தை நோக்கி, "நீண்டகாலமாகச் சண்டையில்லை; ஆகையினால் என் தோள்களில் தினவுண்டாகின்றது; எனக்கு நீரே சமமானவர்; அல்லது என்னோடு போர் செய்ய வல்லவர் யார்?" என்று பெரிய இறுமாப்புக் கொண்டு சொன்னான். பரமசிவம், "கொஞ்சம் பொறு.

வெகு சீக்கிரத்தில் என்னைப்போன்ற ஒருவர் உன்னோடு சண்டைக்கு வருவார்'' என்று சொல்லியனுப்பினார்.

பாணாசுரனுக்கு உஷை யென்று ஒரு பெண் இருந்தாள். அவள் அநிருத்தனைத் தன் கனவில் கண்டாள்; கண்ட அந்தச் சுந்தர புருஷனையே தான் விவாகம் செய்து கொள்ள வேண்டுமென்று எண்ணங்கொண்டாள். அதை ஒருவரோடும் சொல்லவில்லை; ஆனால் மனக் கவலையோடிருந்தாள். அதை அறிந்த தோழி சித்திரலேகை என்பவள் அவளைத் தனியே அழைத்து, "நீ ஏதோ கவலை கொண்டிருக்கிறாய் என்று தெரிகிறது. அதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டாள். உஷை அவளிடம் தன் மனக் கவலைக்குக் காரணத்தைச் சொன்னாள்.

சித்திரலேகை சித்திரம் எழுதுவதில் சாமர்த்தியம் உடையவள். அவள் அநேக ராஜகுமாரர்களுடைய சித்தி ரத்தை எழுதிக்காட்டினாள். அவற்றில் அநிருத்தன் படமும் ஒன்று. அதைக் கண்டதும் உஷை வெட்கப்பட்டாள். "ஓ இவன்தான், இவள் கனவிலே கண்ட சுந்தரரூபன்'' என்று சித்திரலேகை நிச்சயித்து, அன்றிரவில் தன் மாயா சக்தியினால் ஆகாயமார்க்கமாய்த் துவாரகை போய் மாளிகையில் நித்திரை செய்திருந்த அநிருத்தனைத் தூக்கிக்கொண்டு வந்து உஷையினிடம் சேர்த்தாள். இதுதான் அநிருத்தன் காணாமற் போனதற்குக் காரணம்.

அநிருத்தன் உஷையோடு சுகமாயிருந்தான். அவள் அவனை வெளியே போகவிடவில்லை. இது பாணாசுரனுக்குத் தெரிந்தது. அவன், "நம்மை அறியாமல் இந்தப் பயல் இந்தக் காரியம் செய்வதா?'' என்று சினங்கொண்டு அநிருத்தனைப் பிடித்துச் சிறையில் அடைத்துவிட்டான்.

இச்சமயம் யுத்தத்திற்குப் புறப்பட்ட பகவான் சோணிதபுரத்தை வந்து வளைத்துக்கொண்டார்.

பாணாசுரனும் யுத்தத்திற்கு ஆயத்தமானான். பரமசிவம் சிவகணங்களோடு அவனுக்குச் சகாயமாய் நின்றார். பிறகு கிருஷ்ணருக்கும் பாணாசுரனுக்கும் போர் மூண்டது. போரில் பரமசிவம் அவனுக்காக யுத்தம் செய்வதுபோல் சற்று நேரம் யுத்தஞ் செய்துவிட்டுப் பிறகு வேண்டு மென்றே தோல்வி அடைந்தார். பாணாசுரனுடைய இறுமாப்பைக் குலைக்கவேண்டுமென்பதல்லவா அவர் கருத்து? இப்படியாகவே பாணாசுரனைக் கிருஷ்ண பகவான் எதிர்த்துப் பெரும்போர் புரிந்து அவனுடைய கரங்களை வெட்டித்தள்ளிக் கொல்ல முயன்றான். அவனுடைய தாய் வந்து குறுக்கே நின்று அவனைத் தப்புவித்தாள். பாணாசுரன் ஓடிப்போய்த் தன் பட்டணத்திற்குள் புகுந்து கொண்டான். பகவான் அவனைப் பிடித்து அவனுடைய கரங்களில் நான்கைத் தவிர, மற்றவற்றைச் சேதித்து அவனை உயிரோடு விட்டார். அப்பால் அவன் அநிருத்தனையும் உஷையையும் பகவானிடம் ஒப்பித்தான். துவாரகையில் அவர்களுக்கு விவாகம் விமரிசையாக நடந்தது.

---

## முப்பத்துநான்காம் அத்தியாயம்

—(O)—

### பலராம கிருஷ்ணர்களின் வீரச் செயல்கள்

இப்படியிருக்கையில் ஒரு நாள் பிரத்யும்னன் சிலரோடு தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருந்தான், அவர்களுக்குத் தாகம் உண்டாயிற்று. தாகவிடாய் தீர்த்துக்கொள்ள அவர்கள் ஒரு கிணற்றுக்குப் போனார்கள். அக்கிணற்றில் ஒரு பெரிய ஓணான் வெளியேற முடியாமல் தவித்துக்கொண்டிருந்தது. அதைக்

கண்டதும் பிரத்யும்னன் இரக்கங்கொண்டு அதை எடுத்து வெளியே விட முயன்றான். அவனால் முடியவில்லை. மற்றவர்களும் முயன்றார்கள். அவர்களாலும் முடிய வில்லை. ஒருவன் ஓடி இதைக் கிருஷ்ண பகவானிடம் சொன்னான். பகவான் வந்து பார்த்து, அந்த ஓணானைத் தனது இடது கரத்தினால் வெகு சுலபமாகத் தூக்கிக் கரை யேற்றினார். அந்த ஓணான் கரை சேர்ந்ததும், ஒரு திவ்ய புருஷனாய்விட்டது. பகவானுடைய கரஸ்பரிச மகிமை இது என்று எல்லோரும் தெரிந்துகொண்டு சந்தோஷப்பட் டார்கள்.

அந்தப் புருஷன், "நான் இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தவன். என் பெயர் நிருக சக்கரவர்த்தி. நான் தினந்தோறும் பிராம்மணர்களுக்கு அநேக கோதானங்கள் செய்துவந்தேன். ஒரு பிராம்மணனுக்குக் கொடுத்திருந்த பசு, ஒருநாள் எங்கள் பசுவோடு வந்து சேர்ந்துவிட்டது. அதை ஒருநாள் வேறொரு பிராம்மணனுக்குத் தானம் செய்துவிட்டேன். முன் தானம் வாங்கிய பிராம்மணன், தன் பசுவைப் பின்னே தானம் வாங்கினவன் அபகரித்துக் கட்டிக்கொண்டதாக வழக்குக் கொண்டுவந்தான். அந்த வழக்கைத் தீர்த்து அவர்களைத் திருப்திசெய்து அனுப்பு வதற்கு என்னால் முடியவில்லை, அதனால் நான் ஓணானாகப் பிறக்க நேர்ந்தது" என்று கூறிப் பகவானைத் துதித்து வணங்கிவிட்டு விடைகொண்டு மறைந்தான். பிறகு கண்ண பிரான் அங்கிருந்த யாதவர்களை யெல்லாம் பார்த்து, "பிராம்மணர்களுடைய சொத்தை அபகரிக்கலாகாது; அது விஷத்தைவிடக் கொடியது" என்று போதித்தார்.

அப்பால் ஒருநாள் பலராமர் கோகுலம் போனார். அங்கிருந்தவர்களெல்லோரும் பலராமரிடம் ஓடிவந்து பகவானுடைய யோகக்ஷேமத்தை மிகுந்த ஆவலாய் விசாரித் தார்கள். பகவான் முன் செய்த லீலைகளை யெண்ணி

இனி எப்போது அவரைப் பார்ப்பது என்று கூறி வருந்தினார்கள். பலராமர் அவர்களைத் திருப்தி செய்வித்துக் கொண்டு இரண்டு மாதகாலம் அங்கிருந்தார். அப்பொழுது ஒருநாள் பலராமர் கோபிகைகளோடு யமுனைக்கரையில் விளையாடினார். தமது விளையாட்டுக்கு உதவிசெய்யும்படி யமுனையைத் தாங்கள் இருக்கும் இடத்துக்கு வரும்படி அழைத்தார். அது அவ்வாறு வரவில்லை. உடனே பலராமர் தமது கலப்பை ஆயுதத்தால் அந்த யமுனையை வளைத்துத் தேக்கிவிட்டார். பிறகு யமுனை வேண்டிக்கொண்டதனால் ஓடும்படி விட்டார்.

இப்படி, பலராமர் கோகுலத்தில் இருக்கையில், கருஷ தேசத்து அரசனான பௌண்ட்ரக வாஸுதேவன் என்பவன் பகவானைத் தூதன் மூலமாகச் சண்டைக்கு அழைத்தான். அவன் பகவானுடைய சின்னங்களை யெல்லாம் தாங்கிக்கொண்டு தானே பகவான் என்று சொல்லிக் கொண்டு இறுமாப்புட னிருந்தான். அவனோடு கண்ண பிரான் போர் புரியப் போனார். அவன், ''நானல்லவா உண்மையான வாஸுதேவன்; என் அடையாளங்களை நீ தரித்துக்கொண்டு ஏன் வீண் புரட்டுச் செய்கிறாய்? என்னோடு இப்பொழுது சண்டை செய்து உன் பராக்கிரமத்தைக் காட்டு'' என்று கூறினான். பகவான், "ஆகா, அப்படியே செய்து காட்டுகிறேன்'' என்று கூறி அவனோடு சண்டைசெய்து அவனைச் சங்கரித்துத் துவாரகை சென்றார்.

ஒருநாள் பலராமர் ரெய்வதக பர்வதத்தில் விளையாடிக் கொண்டிருந்தார். அங்கே துவிதன் என்னும் ஒரு குரங்கு வந்து தான் கண்டதையெல்லாம் அசுத்தப்படுத்தி அழித்தது. அது மிகப் பொல்லாத குரங்காயிருந்தது. அது ராமாவதாரத்தில் சுக்கிரீவனுக்கு நட்பாயிருந்த குரங்குகளில் ஒன்று. அதனைப் பலராமர் எதிர்த்துச் சண்டை செய்து கொன்றார்.

ஜாம்பவதிக்குச் சாம்பன் என்ெருரு மைந்தன் பிறந்தான். அவன் துரியோதனனுடைய பெண் லக்ஷ்மணை என்பவளைச் சுயம்வரத்தில் அவள் விருப்பப்படி எடுத்து வந்தான். இதைக்கண்டு மனம்பொருத துரியோதனுதியர் சாம்பனைப் பிடித்துச் சிறையிட்டனர். இதைக் கேள்விப் பட்ட பலராமர் உத்தவருடன் ஹஸ்திஞபுரம் போய்த் துரியோதனுதியரைச் சமாதானம் செய்யப் பார்த்தார். அவர்கள் சமாதானத்துக்கு வரவில்லை. பலராமர் அந்த ஹஸ்திஞபுரியையே கங்கையில் எறிந்துவிடுகிறவர்போல் கோபங்கொண்டார். அதைக் கண்டு பயந்து துரியோதனன் சாம்பனையும் தன் பெண் லக்ஷ்மணை யென்பவளையும் பலராமரிடம் கொண்டுவந்து ஒப்பித்தான்.

பிறகு ஒருநாள் நாரதர், கிருஷ்ணர் ஒரு பதினுருயிரத்து நூற்றெட்டு ஸ்திரீகளிடமும் எவ்வாறு இல்லறம் நடத்துகிருரென்று பார்ப்பதற்காக வந்தார். பகவான் ஒரு வீட்டில் ஸ்நானம் செய்துகொண்டிருந்தார்; ஒரு வீட்டில் ஸ்நானஞ் செய்து அநுஷ்டானம் செய்து கொண்டிருந்தார்; ஒரு வீட்டில் போஜனம் செய்து கொண்டிருந்தார்; வேறு ஒரு வீட்டில் உத்தவர் முதலியவர்ளோடு சந்தோஷமாக வீற்றிருந்து ஆலோசனை செய்துகொண்டிருந்தார். இப்படி ஒவ்வொருவருடைய வீட்டிலும் ஒவ்வோர் அலுவலிற் பிரவேசித்துப் பகவான் அவர்களைத் திருப்தி செய்வதைக்கண்டு நாரதர் சந்தோஷங் கொண்டு பகவானிடம் விடைகொண்டார். பகவான் அவருக்குத் தகுந்த மரியாதை செய்தனுப்பினர்.

---

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

---

### சிசுபால வதம், குசேல உபாக்கியானம்

இப்படியிருக்கையில் கண்ணபிரான் ஒருநாள் காலையில் சுதர்மை என்ற சபையில் வீற்றிருந்தார். அப்பொழுது ஒரு தூதன் வந்து பகவானை வணங்கி, "நான் ஜராஸந்தனது பட்டணமாகிய கிரிஹரத்திலிருந்து வருகிறேன். அங்கே சிறைப்பட்டு வருந்தும் வேந்தர்கள் என்னை அனுப்ப நான் இங்கே வந்தேன். ஜராஸந்தன் உம்மை ஜயித்துவிட்டானும்; அதனால் தனக்கு ஒருவரும் ஈடில்லையென்று இறுமாப்படைந்திருக்கிறான். அரசர்கள் எல்லாம் தங்களுடைய உதவியை விரைவில் எதிர் பார்க்கிறார்கள்" என்று கூறினான்.

பகவான் அதைக் கேட்டதும், "ஓ, தெரிந்து கொண்டேன். அப்படியே செய்கிறேன்; போ" என்று கூறியனுப்பினார். அவன் சென்றதும் நாரதர் சபைக்கு வந்தார். அவர் இந்திரப்பிரஸ்தத்தில் தருமபுத்திரர் ராஜஸூய யாகம் செய்யத் தீர்மானித்திருப்பதாகச் சொல்லிச் சென்றார். பிறகு கண்ணபிரான் உத்தவரை வருவித்து அவரிடம் ஜராஸந்தனைக் கொல்வதற்கு உபாயம் எப்படி என்று விசாரித்தான். உத்தவர், "ஸ்வாமி, இப்பொழுதுதான் தருமபுத்திரர், ராஜஸூய யாகம் செய்யப் போகிறாரே; அதற்காக அவர் எல்லா அரசர்களையும் தம் வசப்படுத்த வேண்டும். அப்படிச் செய்ய முடியாதவர்களை அவர் கொல்லவேண்டும். ஜராஸந்தன் அவர் வசத்திற்கு உட்படமாட்டான். அப்பொழுது அவன் இறப்பான். ஸ்வாமி, அவனுக்கேற்ற பலமுடைய வீரன் பீமன்தான். அவனைத் தாங்கள்

தாண்டிவிடவேண்டும்; அவன் பிராம்மண ரூபத்துடன் ஜராஸந்தனிடம்போய்த் துவந்துவ யுத்தம் செய்ய அவனை அழைக்கவேண்டும். அழைத்தால் ஜராஸந்தன் வராமல் இரான். வந்தால் அவனைப் பீமன் தவருமல் கொல்வான். இதுதான் அவனைக் கொல்ல உபாயம் " என்ருர்.

கண்ணபிரான் இதைக் கேட்டதும் சந்தோஷமடைந்து தம் பரிவாரங்களுடன் புறப்பட்டு இந்திரப்பிரஸ்தம் சென்ருர். பகவானைத் தருமபுத்திரர் முதலிய ஐவரும் சகல மரியாதைகளுடனும் வரவேற்று உபசரித்தார்கள். தாங்கள் ராஜஸூய யாகம் செய்ய நிச்சயத்திருப் பதைக் கூறி, அதற்கு உதவி செய்யவேண்டும் என்றும் வேண்டிக்கொண்டனர். "எல்லா அரசர்களும் வழிக்கு வந்துவிடுவார்கள்; ஜராஸந்தன் பரம துஷ்டன்; ஆகையினுல் அவன் வழிக்கு வரமாட்டான். அவனை வதஞ் செய்து தீரவேண்டும்; இதற்கென்ன உபாயஞ் செய்யலாம் ?" என்று கேட்டார்கள்.

பகவான் உத்தவர் கூறிய உபாயங்கூறிப் பீமனையும் அர்ஜுனனையும் பிராம்மண வேஷம் பூண்டுகொள்ளும்படி உத்தரவிட்டுத் தாமும் பிராம்மண வேஷங்கொண்டு அவர்களிருவரையும் அழைத்துக்கொண்டு ஜராஸந்த னுடைய பட்டணம் போனுர். அந்தப் பட்டணத்துக் கோட்டை மதிலேறிக் குதித்து ஜராஸந்தனைக் கண்டார்கள். ஜராஸந்தன் இவர்களைக் கண்டதும், "பிராம்மணர்களோ அல்லவோ ?" என்ற சந்தேகத் தோடேயே உபசரித்து, "வந்த காரியமென்ன ? நீங்கள் யார் ?" என்று கேட்டான். அவர்கள் தாங்கள் இன்னு ரென்ற உண்மையைச் சொல்லி, "நாங்கள் உன்னேடு சண்டை செய்ய வந்திருக்கிருேம். எங்களுக்குள் எவனேடேயாவது நீ போர்புரியலாம்" என்ருர்கள்.

ஜராஸந்தன் பீமனோடு போர்புரியச் சம்மதித்தான். பிறகு அவ்விருவரும் போர் செய்யச் சித்தமானார்கள். இருவரும் பதினான்குநாள் போர்புரிந்தனர். பதினான்காவது நாள் இரவில் ஜராஸந்தன் களைப்படைந்தான். பிறகு இருவரும் ஆயுதங்களில்லாமல் துவந்துவ யுத்தம் செய்யத் தொடங்கினார்கள். இந்த யுத்தத்தில் பீமன் வல்லவனானதனால், கொஞ்ச நேரத்தில் ஜராஸந்தனைக் கீழே தள்ளிக் குத்திக் கொன்று வீரகர்ஜனை செய்தான்.

மறுநாட்காலையில் மூவரும் ஜராஸந்தனுடைய ரதத்தில் ஏறிக்கொண்டு இந்திரப்பிரஸ்தத்திற்குப் புறப்பட்டார்கள். அப்பொழுது ஜராஸந்தனுடைய பிள்ளைவந்து பகவானைச் சரணமடைந்தான். எம்பெருமான் அவனுக்குப் பட்டங்கட்டி வைத்துவிட்டுப் புறப்பட்டு பீமார்ஜுனர்களுடன் இந்திரப்பிரஸ்தம் வந்துசேர்ந்தார்.

அப்பால் பாண்டவர்கள் திக்விஜயம் செய்துவந்து ராஜஸூய யாகம் நடத்தத் தொடங்கி அதை நன்கு நடத்தினர். கடைசி நாள் சபையோருக்கு அக்கிரபூஜை செய்ய வேண்டியதாயிற்று. அப்பொழுது தர்மபுத்திரர் யாருக்கு அந்தப் பூஜை செய்வதென்று ஆலோசித்தார். பீஷ்மர் கிருஷ்ணபகவானுக்குச் செய்யும்படி ஆக்ஞாபித்தார். அவ்வாறே பகவானுக்கு அவர் பூஜை செய்தார். இது சிசுபாலனுக்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கியது. அவன் கிருஷ்ணபகவானிடம் விரோதங்கொண்டவன். இவன் மணந்துகொள்ள எண்ணியிருந்த ருக்மிணியைப் பகவான் மணந்தாரல்லவா? சிசுபாலன் பகவானை வரம்பு கடந்து தூஷித்தான். பகவான், "இனி இவனை வதஞ் செய்தே தீரவேண்டும்" என்றெண்ணி அவனை எல்லோரும் அறிய யுத்தம் செய்து கொன்றார்.

இவ்வாறு பகவான் ராஜஸூய யாகம் நிறைவேறுதற்குரிய காரியத்தில் ஈடுபட்டு இந்திரப்பிரஸ்தத்தில்

இருக்கையில் சால்வன் என்னும் அரசனொருவன் துவாரகையின்மேல் படையெடுத்துவந்து இருபத்தேழுநாள் போராடித் துவாரகையை அழித்தான். சால்வன் சிசுபாலனுக்கு நண்பன். தன் நண்பனைப் பகவான் கொன்றமையினால் அவன் கோபங்கொண்டு இவ்வாறு செய்தான். தவிர, இவன் பரமசிவத்தை நோக்கித் தவமிருந்து எல்லோரையும் தூக்கிச் செல்லக்கூடிய இரும்பு விமானமொன்று பெற்றிருக்கிறான்.

இவன் பகவானில்லாத வேளையில் துவாரகையை நிர்ப்பயமாய்ப் பாழ்படுத்திவிட்டுச் சென்றான். அப்பொழுது இந்திரப்பிரஸ்தத்தில் சில அபசகுனங்கள் காணப்பட்டன. கண்ணபிரான் துவாரகையில் ஏதோ அபாயம் நேர்ந்திருக்கிறதென்று அறிந்து, பலராமருடன் துவாரகை வந்து துவாரகை யிருக்கும் நிலைமையைக் கண்டு பலராமரை அங்கே காவல் வைத்துவிட்டுச் சால்வ ராஜனை எதிர்க்க ரதத்தில் ஏறிக்கொண்டு புறப்பட்டார்.

பிறகு இருவருக்கும் போர் நடந்தது. சால்வன் பகவானுடைய கதையால் அடியுண்டு ரத்தத்தைக் கக்கினான். கக்கிக்கொண்டிருந்தவன் திடீரென்று மறைந்துவிட்டான். கிருஷ்ணபகவான், "சால்வன் எங்கே மறைந்தான்?" என்று மலைத்து நின்றார். சற்று நேரத்திற்கெல்லாம் சால்வன் வஸுதேவருடன் பகவான்முன் வந்து, "இதோ உன் தந்தையை வெட்டுகிறேன். உன் சாமர்த்தியத்தை இப்பொழுது காட்டு" என்று கூறி, அக்கணமே அவருடைய தலையை வெட்டி அவரை எடுத்துக்கொண்டு மறைந்தான். கிருஷ்ணபிரான் கோபங்கொண்டு சால்வராஜனைத் தொடர்ந்து சென்று மடக்கிக்கொண்டு போர்புரிந்து அவனுடைய இரும்பு விமானத்தை உடைத்தெறிந்து அவனையும் சங்கரித்தார்.

இப்படிப் பகவான் சால்வனைக் கொன்றதைக் கேட்ட அவனுடைய நண்பனாகிய தந்தவக்கிரன் என்ற அசுரன் பகவானிடம் கோபங்கொண்டு போருக்கு வந்து மாண்டான். பிறகு அவனுடைய தம்பி விடூரதன் என்பவன் சண்டைக்கு வந்தான். அவனைப் பகவான் சக்கராயுதத்தினால் கொன்றார்.

இதன் பின்பு பாரத யுத்தம் நடக்கப்போவதாகத் தெரியவந்தது. அதில் பலராமர் இரண்டு கக்ஷியிலும் சேர மனமில்லாமல் தீர்த்தயாத்திரை புறப்பட்டுப் போனார். போகையில் நைமிசாரண்யத்தில் சூதபுராணிகர் என்பவர் உயர்ந்த ஆசனத்திலே வீற்றிருந்தார். அவர் இவரைக் கண்டதும் எழுந்திருக்கவில்லை. அதனால் பலராமர் கோபங் கொண்டு தமது கரத்திலிருந்த தருப்பைப் புல்லினாலே அவரைக் கொன்றார். அதைக்கண்ட நைமிசாரண்ய முனிவர்கள் ஓடிவந்து பலராமரைப் பார்த்து, "சூதபுராணிகர் எங்கள் வேண்டுகோட்கு இணங்கி அவ்வாறு அமர்ந்திருந்தார். அவரைக் கொன்றதனால் உமக்குப் பிரம்மஹத்தி தோஷம் உண்டாயிருக்கிறது" என்று கூறி அதற்குப் பிராயச்சித்தமும் சொன்னார்கள். பலராமர் அவர்கள் தெரிவித்தபடி பிராயச்சித்தம் செய்து கொண்டார்; பிறகு அந்தப் புராணிகரை எழுப்பித் தந்தார்; அந்த ரிஷிகளுக்கு இடையூறு செய்துவந்த அசுரனையும் கொன்றார்.

இப்படியான பிறகு, பகவானிடம் ஒருநாள் குசேலர் என்ற ஒரு முனிவர் வந்தார். அவர் பகவானுடன் சேர்ந்து ஸாந்தீபினி மகரிஷியினிடம் படித்தவர். இருவரும் அப்பொழுது பரம சிநேகிதர்களாய் இருந்தனர். குசேலர் இப்பொழுது இன்னது வேண்டும் என்கிற விருப்பம் இல்லாமல் பகவானிடம் பக்தி செய்துகொண்டு பரம பக்தராக விளங்கிவந்தார். அவருக்கு இருபத்தேழு

குழந்தைகள். அவர் மிகுந்த கஷ்ட ஸ்திதியில் இருந்தமையினால், அவர் மனைவி அவரை நோக்கி, "துவாரகாநாதர் உம்முடைய நண்பராயிற்றே! அவரிடம் போய் நமது கஷ்டத்தைக் கூறி ஏதேனும் திரவியம் கொண்டுவந்தால் எவ்வளவு உதவியாய் இருக்கும்!" என்றாள்.

குசேலர் தம் மனைவியைத் திருப்தி செய்வதற்காகப் பகவானிடம் வந்தார். வரும்போது அன்போடு கையுறையாகக் கொடுக்க நான்கு பிடி அவலை முடிந்து எடுத்துக்கொண்டு வந்தார். கண்ணபிரான் அவரைக் கண்டதும், என்றும் அடையாத ஆனந்தம் அடைந்து வரவேற்று, வீற்றிருக்கச்செய்து உபசரித்து அவருக்குக் கால் கழுவினார்; கால் பிடித்தார்; ஸ்நானம் செய்வித்தார்; அப்பால் போஜனஞ் செய்வித்து, இருவரும் ஓரிடத்தில் அமர்ந்து தாங்கள் மாணவராயிருந்த காலத்தில் செய்தவைகளையும் நடந்தவைகளையும் பற்றிப்பேசிக் கொண்டிருந்தார்கள். கோபாலர் குசேலர் எதற்காக வந்திருக்கிறார் என்பதைத் தெரிந்துகொண்டார்; குசேலர் எதையும் விரும்பி, 'இது வேண்டும்' என்று கேட்க மாட்டார் என்பதையும் உணர்ந்தார். ஆகையினால் அவரைப் பார்த்து, "எனக்குக் கொடுக்க ஏதாவது கொண்டுவந்திருக்கிறீரா?" என்று கேட்டார். குலேசர் தாம் கொண்டுவந்த அவலைக் கொடுக்க வெட்கப்பட்டு மறைத்தார். கண்ணபிரான் அந்த அவல் முடிச்சைத் தாமே அவர் கரத்திலிருந்து பெற்று அவிழ்த்து, ஒரு பிடி அவலை யெடுத்து வாயில் போட்டுக்கொண்டு, "நன்றாயிருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே தின்றார்; மற்றொரு பிடி யெடுத்து வாயிற் போட்டுக்கொள்ளப்போனார். அருகில் இருந்த ருக்மிணி தேவி, "போதும்" என்றாள். பகவானும் உடனே நிறுத்திவிட்டார்.

கிருஷ்ணர் ஒரு பிடி அவல் வாயிலே போட்டுத் தின்றவுடன் குசேலருக்கு அவர் ஊரில், வீடு வாசல் முதலிய சகல ஐசுவரியங்களும் உண்டாகிவிட்டன. இனிமேல் வேண்டியதொன்றுமில்லையே யென்று கருதி ருக்மிணிதேவி தடுத்தாள். இந்த ரகசியம் குசேலருக்குத் தெரியாது. குசேலர் அன்றைத்தினம் முழுவதும் பகவானோடு இருந்து மறுநாட் காலையில் புறப்பட்டுப் பகவானைத் தியானித்துக்கொண்டே தம் ஊர் வந்தார்.

இங்கே அவருக்குத் தம் வீடு எது என்று அறிய முடியவில்லை. அவர் இருந்த குடிசை மாளிகையாய் இருக்கிறது. அதில் எல்லாம் நிறைந்திருந்தன. குசேலர் ஆச்சரியப்பட்டுப் பகவானைத் தியானித்துக்கொண்டு நின்றார். அவர் மனைவி ஓடிவந்து வணங்கி, வீட்டிற்குள் அழைத்துப்போய் வேண்டிய உபசாரங்கள் செய்தாள். குசேலர் எதையும் கவனிக்கவில்லை. பகவானிடமே மனத்தைச் செலுத்திக்கொண்டிருந்தார். மனைவிக்குத் தாம் பகவானிடம் போய்வந்த வைபவத்தைக் கூறி மகிழ்ந்தார்.

பிறகு, ஒருநாள் பூரண ஸூர்யோதய புண்ணியகாலம் வந்தது. அப்பொழுது யாதவர்கள் எல்லோரும் பரசுராமர் உண்டாக்கிய ஸ்யமந்தபஞ்சகம் என்னும் தீர்த்தத்திற்கு ஸ்நானஞ் செய்யப்போனார்கள். கண்ணபிரானும் போனார். அங்கே பாண்டவர்களும் மற்ற நண்பர்களும் ஸ்நானத்திற்கு வந்திருந்தார்கள். கிருஷ்ணர் தம்முடைய உறவினரையும் நண்பரையும் கண்டு சந்தோஷம் அடைந்தார். அச்சமயத்தில் பகவானைப் பார்க்க அங்கே மகரிஷிகள் வந்தார்கள். வசுதேவர் அவர்களைப் பார்த்துத் தமக்குப் பரமபதம் சித்திக்கத்தக்க ஒரு யாகம் செய்விக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டார். அவர்கள், 'ஓகோ, இவர் பகவானைத் தம் பிள்ளையென்று எண்ணி மயங்கி இவ்வாறு கேட்கிறார்' என்றறிந்து, 'இருக்கட்டும்;

இப்பொழுது இவர் விருப்பப்படி இவருக்கு யாகம் செய்விக்காமல் பகவானுடைய உண்மையை நாம் இவருக்குக் கூறினல் இவர் திருப்தி யடையமாட்டார். ஆகையினல் யாகம் செய்வித்துப் பிறகு உண்மையைக் கூறுவோம்' என்று தீர்மானித்துக்கொண்டு, அவர் விருப்பப்படி அங்கே யாகம் செய்வித்தார்கள். பிறகு கிருஷ்ண பகவானுடைய உண்மைச் சொரூபத்தை வசுதேவருக்கு உபதேசித்தருளினர்கள். பின் எல்லோரும் தத்தம் இருப்பிடம் அடைந்தனர்.

பகவானுடைய உண்மை இவ்வாறு வெளியானதும் தேவகி தேவி அவரிடம் போய்த் தன்னுடைய ஆறு பிள்ளைகளையும் பார்க்கவேண்டுமென்று கேட்டாள். கண்ணபிரான், முன் தம்முடைய குருவின் மைந்தனை உயிர்ப்பித்துக் கொடுத்திருக்கிரு ரல்லவா? அதையும் தேவகி இச்சமயம் எடுத்துக் கூறினள்.

பகவான் தம் தாயைத் திருப்தி செய்விக்க வெண்ணி உடனே பலராமரோடு பாதாளலோகம் சென்று அங்கிருக்கும் மகாபலியைக் கண்டு, "உம்மிடமிருக்கும் இந்த ஆறு பிள்ளைகளும் மரீசி மகரிஷியின் பிள்ளைகள். பிரம்மதேவர் ஆதியில் ஸரஸ்வதியை மணஞ்செய்து கொண்ட காலத்தில் இவர்கள் அவரைப் பார்த்து நகைத்தார்கள். இதற்காக முதலில் இவர்கள் ஹிரண்யகசிபுவின் பிள்ளைகளாகப் பிறந்தார்கள். பிறகு தேவகிக்குப் பிள்ளைகளாகப் பிறந்து உடனே இறந்து, இப்போது தமது பூர்வ பதவியில் ஞானிகளாக விளங்குகின்றனர். தேவகி இவர்களைப் பார்க்க விரும்புகிருள். இவர்களை அழைத்துக்கொண்டுபோய் அவளிடம் காட்டிவிட்டு இவர்களை இவர்களிருப்பிடத் திற்கு அனுப்பிவிடுகிறேன்" என்று கூறி, அவர்களோடு துவாரகை வந்து தேவகிக்கு அவர்களைக் காட்டித் திருப்தி

செய்துவிட்டு, "உங்களுடைய ஸ்தானத்திற்குப் போங்கள்" என்று கூறி அவர்களை அனுப்பிவிட்டார்.

---

## முப்பத்தாரும் அத்தியாயம்

—o—

### அர்ச்சுனன் சுபத்திரையை மணத்தல்

பரீக்ஷித்து மகாராஜா சுகப்பிரம்ம ரிஷியை நோக்கி அர்ச்சுனன் சுபத்திரையை மணந்தது எப்படி என்று கேட்டான்.

ஸ்ரீ சுகர் கூறுகிறார் :—

வேந்தே, அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை புறப்பட்டு நெடுகிலும் போய் ஆங்காங்குள்ள தீர்த்தங்களில் நீராடி முடிவில் துவாரகை வந்தான். அங்கே பிரபாஸம் என்கிற தீர்த்தத்தில் நீராடினான். அவனுக்குக் கிருஷ்ணபகவானுடைய தங்கை சுபத்திரையை மணந்து கொள்ளவேண்டுமென்கிற விருப்பம் இருந்தது. சுபத்திரையைத் துரியோதனனுக்குக் கொடுப்பதாகப் பலராமர் வாக்களித்திருக்கிறாரென்று இச்சமயம் அவன் கேள்விப்பட்டான். அவன் மனங்கலங்கி என்ன செய்வதென்று ஆலோசித்துப் பகவானைத் தியானித்தான். கண்ணபிரான் உடனே அவன் முன் தோன்றி அர்ச்சுனனை ஸந்நியாஸி வேஷம் பூண்டு பக்கத்திலிருந்த ரெய்வதகபர்வதக் குகையில் வந்து இருக்கும்படி சொல்லிவிட்டுச் சென்றார்.

அர்ச்சுனன் அவ்வாறே ஸந்நியாஸி வேஷம் பூண்டு ரெய்வதக பர்வதக் குகையிலிருந்தான். கொஞ்சநாளைக்குப் பிறகு ஓர் உற்சவம் வந்தது. யாதவர்கள் அந்த

உற்சவத்தை ரெய்வதக பர்வதத்திற்கருகே நடத்துவது வழக்கம். அந்த வழக்கப்படி உற்சவத்தன்று சகல யாதவர்களும் அங்கே வந்தார்கள். யாவரும் அர்ச்சுன ஸந்நியாஸியைக் கண்டு தொழுதார்கள். பலராமருக்கு ஸந்நியாஸிகளிடம் அதிக அன்பு உண்டு. இவரும் அவரைக் கண்டதும் வந்தனம் செய்தார். கிருஷ்ண பகவான் இந்த ஸந்நியாஸியை நம்பலாகாதென்று கூறி, தூரவே நின்று விட்டார். பலராமர், "பெரியவர்களைத் தூஷியாதே" என்று சொல்லிவிட்டு ஸந்நியாஸியைத் துவாரகைக்கு வரும்படி அழைத்தார். அர்ச்சுனன் வர இணங்கினான். கிருஷ்ணமூர்த்தி பலராமரைப் பார்த்து, "ஸந்நியாஸியை ஊருக்குள் அழைத்துப் போவானேன்? வேண்டாம்" என்று தடுத்தார். அவர் கேட்காமல், அர்ச்சுனனை அழைத்துக்கொண்டுபோய்ச் சுபத்திரை முதலியவர்கள் இருக்கும் கன்னியா மாடத்தருகில் ஒரு தோட்டத்தில் வைத்து, சாதுர்மாஸ விரதம் முடிகிற வரையில் அங்கேயே இருக்கும்படி வேண்டிக்கொண்டு, சுபத்திரையை அவனுக்குத் தொண்டு செய்துவரும்படி ஏற்பாடு செய்தார்.

சாதுர்மாஸ முடிவில் துவாரகைக்குச் சமீபத்திலுள்ள பிண்டாரக தீர்த்தத்தில் ஒரு பெரிய உற்சவம் நடப்பது வழக்கம். அந்த உற்சவம் வந்தது. அதை நடத்துவதற்காக யாதவர்கள் எல்லோரும் பிண்டாரக தீர்த்தம் சென்றார்கள். அர்ச்சுன ஸந்நியாஸியும் ஸுபத்திரையும் ஒரு யாதவ சேனாதிபதியும் போகவில்லை. அன்றிரவில் அர்ச்சுனன் சுபத்திரைக்குத் தன் சுயரூபத்தைக் காட்டித் தன்னை மணந்துகொள்ளச் சொன்னான். சுபத்திரை கிருஷ்ணமூர்த்தி யில்லாமல் மணம் செய்துகொள்ள முடியாதென்றாள். அர்ச்சுனன் கிருஷ்ணமூர்த்தியைத் தியானம் பண்ணினான். கோபாலர் உடனே அங்கே

தோன்றி, அந்த இடத்திற்குத் தேவேந்திரன் பிரகஸ்பதி முதலியவர்களைத் தம் மகிமையினால் வருவித்து விதிப்படி அவர்களிருவருக்கும் விவாகத்தை நடத்தி முடித்தார். சுபத்திரைக்கு ரத ஸாரத்யம் தெரியும். ஒரு ரதத்தை ஸித்தம் செய்துகொண்டு, "இப்பொழுதே நீயும் அவளும் புறப்பட்டுப் பொழுது விடிவதற்குமுன் இந்திரப்பிரஸ்தம் போய்ச் சேருங்கள்" என்று கிருஷ்ணர் கட்டளையிட்டுச் சென்றார்.

அர்ச்சுனனும் சுபத்திரையும் அவ்வாறே புறப்பட்டுச் சென்றார்கள். வழியில் அவர்களை ஒரு யாதவ சேனாதிபதி எதிர்த்தான். அவனைக் கிருஷ்ணபகவானே அனுப்பி யிருந்தாராதலால் அவன் அர்ச்சுனனைத் தடுத்துப் போர் புரிவதுபோலச் சற்று நேரம் பாசாங்கு செய்துவிட்டுத் திரும்பிவிட்டான்.

அர்ச்சுனன் பொழுது விடிவதற்குள் இந்திரப்பிரஸ்தம் போய்ச் சேர்ந்தான்.

இதையறிந்த பலராமர் அர்ச்சுனனிடம் பெருங் கோபங்கொண்டார். அவனைக் கொல்லவேண்டுமென்று பெருஞ் சேனையோடு புறப்பட்டார். புறப்படுகையில், "முதலில் கிருஷ்ணன் ஸந்நியாஸியை நம்பலாகாதென்று சொன்னான். அவன் பேச்சைக் கேளாமற் போனதனால் இந்தத் தொந்தரவு வந்தது. இப்பொழுது அவனைக் கலந்து பேசுவோம்" என்று எண்ணிக் கிருஷ்ணரிடம் ஆலோசித்தார். அவர், "அண்ணா, அர்ச்சுனனோடு சண்டையிட்டு அவனைக் கொன்றால் நம் சுபத்திரைக்கு அது பெருந் துன்பமாகும். நாம் தோல்வி அடைந்தோமானால் அது நமக்குப் பெரிய அவமானம். அந்தச் சண்டையால் இருவிதத்திலும் நமக்குச் சங்கடம் இருக்கிறது. ஆகையினால் நாம் சண்டைக்குப்

போவது உசிதமல்ல. நாமே விரும்பி நம் சுபத்திரையை அர்ச்சுனனுக்குக் கொடுத்ததாகக் கொண்டு, வேண்டிய சீர்வரிசைகளை அனுப்பிக் கொடுத்துச் சமாதானமாய்ப் போவதே நல்லது" என்றார். பலராமருக்கும் மற்ற யாதவர்களுக்கும் அப்படிச் செய்வதே யுக்தமென்று தோன்றியபடியால் அவ்வாறே செய்து ஒருவிதமான குற்றம் குறைகளில்லாமல் நடந்துகொண்டார்கள்.

இன்னும் பகவான் செய்த லீலைகளைக் கேள் :—

இதன் பின்பு பகவான் மிதிலா நகரம் போனார். அங்கிருக்கும் தம் பக்தரான சுருததேவர் என்னும் ஏழைப் பிராம்மணர் வீட்டில் தமது பரிவாரத்துடன் உண்டு அவரைத் திருப்தி செய்வித்தார். அதே சமயத்தில் அந் நகர அரசன் அரண்மனையிலும், தம் பரிவாரத்துடன் உண்டு அவனையும் திருப்தி செய்வித்தார். அப்பால் அவர்களிருவருக்கும் உபதேசம் செய்துவிட்டுத் துவாரகை வந்தார்.

துவாரகையில் வசித்த ஒரு பிராம்மணனுக்குக் குழந்தைகள் பிறந்து உடனுக்குடன் இறந்துகொண்டே வந்தன. இப்படி ஒன்பது குழந்தைகள் பிறந்து இறந்தன. அந்தப் பிராம்மணன் ஒவ்வொரு தடவையும் பகவானுடைய அரண்மனைக்குப் போய் முறையிட்டுப் பார்த்தான். அவனை ஒருவரும் கவனிக்கவில்லை. அவனுக்குப் பத்தாவது குழந்தை பிறக்கும் தருணத்தில் அர்ச்சுனன் துவாரகைக்கு வந்திருந்தான். அவனிடம் பிராம்மணன் தன் குறையைச் சொல்லிக்கொண்டான். அர்ச்சுனன், "நான் உன்னுடைய இந்தக் குழந்தையைக் காப்பாற்றுகிறேன்" என்று வாக்களித்தான். கிருஷ்ண பகவான், "நீ எப்படிக் காப்பாற்றுவாய்? உன்னால் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டார். அர்ச்சுனன்,

"நான் எப்படியாவது காப்பாற்றுகிறேன்" என்று கூறி அந்தப் பிராம்மணன் வீடு சென்று பிரசவ அறையைச் சுற்றிச் சரக்கூடு போட்டு வெகு ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு காலக்கிரமத்தில் குழந்தை பிறந்தது. பிறந்தவுடன் மாயமாக மறைந்து விட்டது. அர்ச்சுனன் இது என்னவென்று வியப்படைந்து பகவானிடம் போனான். பகவான், "நான் முன்பே சொல்லவில்லையா? உன்னால் என்ன செய்ய முடிந்தது?" என்று கூறிப் பரிஹாஸம் செய்தார். அர்ச்சுனன் தன் வாக்கைக் காப்பதெப்படியென்று மயங்கினான். பகவான் உடனே அவனுடன் வைகுண்ட லோகம்போய் மகாவிஷ்ணுவை வணங்கினார். மகாவிஷ்ணு, "உங்களிருவரையும் இங்கு வருவிக்கவே நான் பிராம்மணனுடைய பத்துக் குழந்தைகளையும் இங்கே கொண்டுவந்தேன். குழந்தைகளை இனிப் பிராம்மணனிடம் சேர்ப்பிக்கலாம்" என்றார். பிறகு கண்ணபிரானும் அர்ச்சுனனும் குழந்தைகளுடன் பூலோகம் வந்து பிராம்மணனிடம் அவற்றை ஒப்பித்தார்கள். அர்ச்சுனன் இப்பொழுது பிராம்மணனுக்கு மகாவிஷ்ணுவின் மகிமையை எடுத்துக் கூறினார்.

அப்பால் கோபாலர் எப்பொழும் தம்முடைய அரிய பெரிய செயல்களாலே தர்மத்தை உலகத்துக்கு விளக்கிக் கொண்டு சுகமாக இருந்தார். இப்படிப்பட்ட மகா மகிமை வாய்ந்த பகவானுடைய சரித்திரத்தைக் கேட்பவர்களுக்குச் சித்தசுத்தி உண்டாகும்; முடிவில் அவர் மோக்ஷ ஸாம்ராஜ்யமும் பெறுவர் - என்று கூறி முடித்தனர்.

---

## முப்பத்தேழாம் அத்தியாயம்

——(o)——

### யாதவர்களின் சாபம், உத்தவருக்கு உபதேசம்

துவாரகைக்கு அருகே பிண்டாரக தீர்த்த மென்றெரு தீர்த்தம் இருக்கிறது. இந்தத் தீர்த்தத்தில் பகவானைத் தரிசிப்பதன் பொருட்டுச் சில ரிஷிகள் வந்து தங்கியிருந்தார்கள். யாதவப் பிள்ளைகளிலே சிலர், சாம்பனுக்குக் கர்ப்பிணியைப்போல் வேஷம்போட்டு அழைத்துக்கொண்டு ரிஷிகளின் முன்புபோய் அவனைக் காட்டி, "இந்த மாதுக்கு என்ன குழந்தை பிறக்கும்?" என்று கேட்டார்கள். ரிஷிகள், இவர்கள் பின்னே பரிகாசஞ் செய்ய எண்ணியிருப்பதை அறிந்து மிகுந்த கோபங்கொண்டு, " உங்கள் குலத்தை முழுதும் நிர்மூலம் ஆக்கும் உலக்கையையே இவள் பெறுவாள்" என்று கூறினார்கள்.

இதைக் கேட்டதும் யாதவப் பிள்ளைகள் பயமடைந்து சாம்பனது வேஷத்தைக் கலைத்தார்கள். இரும்பு உலக்கை யொன்றிருந்தது. அதைக்கண்டு வியப்படைந்து என்ன செய்வது என்று எண்ணிக்கொண்டு உலக்கையுடன் ஊருக்குள் வந்து நடந்ததை யாதவப் பெரியவர்களுக்குச் சொன்னார்கள் ; எல்லோரும் பயந்து அந்த உலக்கையைப் பொடிப் பொடியாக அரங்கொண்டு அராவி, கடலில் எறிந்தார்கள். கடைசியில் ஒரு சிறு துண்டு மிஞ்சியது. அது எவ்வளவு அராவியும் குறையவில்லை. அதையும் அவர்கள் கடலில் எறிந்துவிட்டனர்.

பிறகு கொஞ்சநாளில் அந்த இரும்புத் தூள்கள் எல்லாம் மண்ணோடு கலந்து கோரைப்புற்களாக முளைத்தன. அராவ முடியாமற்போய் எறிந்துவிட்ட சிறு

துண்டை ஒரு மீன் விழுங்கிவிட்டது. அதை ஒரு செம்படவன் பிடித்து அறுக்கையில் அந்த இரும்புத் துண்டு அவன் கையில் அகப்பட்டது. அதை அவன் ஒரு வேடனுக்குக் கொடுத்தான். வேடன் அதைத் தன் அம்பின் நுனியில் வைத்துக் கட்டிக் கூர்மையாய்த் தட்டிக் கொண்டான்.

இது இப்படி நடந்து முடிந்தபின், ஒரு நாள் வசுதேவர் நாரதரை வணங்கி, "மோக்ஷபதமான ஞானோபதேசம் செய்யவேண்டும்" என்று கேட்டார்.

நாரதர், பகவத் அவதார புருஷர்களுள் ஒருவரான ரிஷபயோகியின் பிள்ளைகளுக்கும், நிமி சக்கரவர்த்திக்கும் நடந்த சம்பாஷணையின் மூலமாக அவருக்கு ஞானோபதேசம் செய்வித்தார். "வஸுதேவரே, உமக்குப் பகவானே பிள்ளையாகப் பிறந்திருக்கிறபடியால் உமக்கு மேன்மை உண்டாவதில் தடையிராது" என்று கூறியருளினார்.

இதன் பிறகு பகவானைப் பார்க்கப் பிரம்மா முதலிய தேவர்களும் ரிஷிகளும் வந்து பகவானைப் பணிந்து வைகுண்டம் வரும்படி அழைத்தனர். கிருஷ்ணர், "என் காரியம் முடிந்துவிட்டது. யாதவர்களுக்கும் முடிவு வந்து விட்டது. நீங்கள் போங்கள். விரைவில் உங்களைத் திருப்தி செய்விக்கிறேன்" என்று கூறி அவர்களை அனுப்பினார்.

அப்பால் துவாரகையில் பல அப சகுனங்கள் தோன்றின. அதனால், ரிஷிகளின் சாபம் பலிக்கும் என்று யாதவர்கள் தெரிந்துகொண்டார்கள். பகவான் அவர்களைப் பார்த்து, "இனி நாம் இங்கிருப்பது கூடாது. பிரபாஸ தீர்த்தம்போய்த் தான தர்மாதிகளைச் செய்து நம் பாபங்களைத் தொலைப்போம்" என்று கூறினர். யாதவர்கள் அப்படிச்செய்ய உடன்பட்டார்கள்.

அப்பால் துவாரகாநாதர் தனித்திருக்கையில் அவரிடம் உத்தவர் போய் வணங்கி, "உம்மை விட்டுப் பிரியச் சமயம் வந்துவிட்டதே" என்று துக்கித்தார். கண்ணபிரான் அவரைத் தேற்றி மகாராஜனுக்கும் தத்தாத்திரேயருக்கும் நடந்த சம்பாஷணையின் மூலமாக உபதேசம் செய்வித்தார்.

தத்தாத்திரேயர், "பூமி, வாயு, ஆகாசம், நீர், நெருப்பு, சந்திரன், சூரியன், புரு, மலைப்பாம்பு, கடல், தேனீ, விட்டில், யானை, கருவண்டு, மான், மீன், பிங்கலை என்னும் தாஸி, மீன்கொத்தி, குழந்தைகள், குளவி, புழு ஆகிய இவைகளையே நான் குருவாகக்கொண்டு உபதேசம் பெற்று மேன்மை அடைந்தேன்" என்றார்.

யது மகாராஜன் அதை விளக்கும்படி கேட்டான்.

தத்தாத்திரேயர் கூறுகிறார் :—

"பூமியை நாம் எவ்வளவு வெட்டி உழுது வருத்திய போதிலும் அது நமக்கு வேண்டிய பழங்களைக் கொடுக்கக் கூடிய மரங்களை வளரச்செய்கின்றது. அவைகள் வெட்டுந் தோறும் வளர்ந்து நமக்கு நிழலையே கொடுக்கின்றன. மலைகளும் அவ்வாறே நமக்கு வேண்டியவைகளைத் தருகின்றன. ஆதலால் பூமியினிடமிருந்து பரோபகாரம், பொறுமை முதலியவைகளைத் தெரிந்துகொண்டேன்.

காற்று, துர்க்கந்தமான வஸ்துக்களை அடித்துக் கொண்டுபோகிறது. ஆயினும் துர்க்கந்தம் அதிற் சம்பந்தப் படுவதில்லை. அதுபோல் பிரபஞ்ச விஷயங்களின் மத்தியி லிருந்தாலும் ஞானிகள் அவற்றிற் சம்பந்தப்படாமல் இருப்பார்கள் என்று தெரிந்துகொண்டேன்.

ஆகாயத்தில் ஓடியாடி வரும் மேகங்களை ஆகாயம் உள்ளே அடங்கிக்கொண்டு அதன் உள்ளும் வெளியும்

எங்கும் சம்பந்தமில்லாமலே பரவியிருக்கிறது. இதனால் பரப்பிரம்மத்தோடு இரண்டறக் கலந்த ஞானிக்கு ஆத்மா இவ்வாறு எங்கும் பரவி நிறைந்திருக்கிறது என்பது தெரியும் என அறிந்துகொண்டேன்.

ஜலம் தன்னை அண்டினவர்களைப் பரிசுத்தப்படுத்துகிறது. ஆனால் அது அதனால் மாசடைவதில்லை. இது போலவே ஞானிகளும் பிறரால் மாசடைவதில்லை. அவர்களாலே பிறர் பரிசுத்தமடைவார்கள் என்பதை உணர்ந்தேன்.

சந்திரன் வளர்வதும் தேய்வதுமாய் இருந்தாலும், அதனால் யாதொரு குறைவும் அடையாதிருப்பதுபோல், ஞானிகளும் காமக்குரோதாதிகள் ஆத்ம தர்மமல்லவென்றும், அவைகளால் ஆத்மாவுக்கு யாதொரு கேடுமில்லை என்றும் இருப்பார்கள் என்பதை உணர்ந்தேன்.

சூரியன், கடல்நீரை ஆவியாகும்படிச் செய்து மழையாக்குகிறான். அவன், தான் ஒருவனாகவே இருந்தும் நீர் நிலைகளிலும் அலைகளிலும் வெவ்வேறாகப் பிரதிபிம்பிக்கிறான். அதுபோல் ஞானிகள் சகல விஷயங்களையும் கிரகிப்பார்கள். ஆனால் அவர்கள் அவைகளில் தாக்கற்றிருந்து தம்மிடம் வருபவர்களுக்குக் கொடுப்பார்களென்றும், ஆத்மா பாமரர்களுக்குப் பலமாகத் தோற்றினாலும், ஞானிகளுக்கு அது ஒன்றாகவே தெரியும் என்றும் உணர்ந்தேன்.

ஒரு மரத்தில் ஓர் ஆண் புறாவும், ஒரு பெண்புறாவும் வெகுகாலமாக வாழ்த்துவந்தன. அவைகளுக்குச் சில குஞ்சுகள் உண்டாயின. ஒரு நாள் அவை இரைதேடப் போயிருந்தன. அப்பொழுது வேடன் வலைவீசிக் குஞ்சுகளைப் பிடித்துவிட்டான். அதைத் தாய்ப் பறவை அறிந்தும் துக்கப்பட்டுத் தானும் அந்த வலையிலே போய்ச்

சிக்கிக்கொண்டது. பிறகு ஆண் பறவையும் அவ்வாறே துக்கமடைந்து அந்த வலையிலேபோய்ச் சிக்கிக்கொண்டது. இதனால் மக்கள் மனைவியிடத்தில் கொள்ளும் பற்றே நாசத்திற்குக் காரணமென்று உணர்ந்தேன்.

மலைப்பாம்பு அசையாமல் ஓரிடத்திலே படுத்துக் கிடக்கும். அதன் அருகே ஏதாவது வந்தால் அது அதை இன்னதென்று கவனியாமற்கூடப் புசிக்கும்; இல்லா விட்டால் ஆகாரமில்லாமல் கிடக்கும். இதுபோலவே ஞானியும் இருப்பான் என்று உணர்ந்தேன்.

கடலில் நதிகளெல்லாம் வந்து கலக்கின்றன. கலந்த போதிலும் அது மாறுவதில்லை; அவற்றையெல்லாம் தன் மயமாக்குகிறது. அது குறைவதுமில்லை; மிகுவதுமில்லை. அதுபோல் ஞானிகள், உலகவிஷயம் எது வந்து தங்களை அண்டினாலும் அதனால் விகாரப்படாமல் இருப்பார்கள். எதையும் தம்மய மாக்கிக்கொண்டு அவைகளின் கெட்ட குணங்கள் பயன்படாம லிருக்கும்படிச் செய்வார்கள் என்பது தெரிந்துகொண்டேன்.

விட்டில் பூச்சி விளக்கில் ஆசைகொண்டு அதில் விழுந்து இறக்கிறது. அதுபோல் உலகத்தில் மானிடர் களும் விஷய சுகங்களில் மயங்கி விழுந்து அழிகிறார்கள் என்று உணர்ந்தேன்.

தேனி, மலர்கள்தோறும் சென்று தேனைச் சேக ரிக்கிறது. ஆனால் மலர்களைக் கெடுப்பதில்லை. அதுபோலவே ஞானிகள் வீடுகள்தோறும் சென்று ஒருவரையும் வருத்தாமலே உணவையேற்று உண்கிறார்கள். அவர்கள் சேர்த்து வைப்பதில்லை. சேர்த்துவைத்தால் தேனிக்கள் சேர்த்து வைத்து நாசமடைவது போல் நாசமடைவார்கள். இதனையன்றி, தேனி அநேக மலர்களி லிருந்து தேனைக் கிரகிப்பதுபோல் ஞானிகள் அநேக சாஸ்திரங்களிலிருந்து

உண்மைகளைத் தேடி அடைவார்கள். இவற்றையும் உணர்ந்தேன்.

யானைக் கூட்டங்களுள், பழகிய யானை சென்று அவைகளிலொன்றைத் தொட்டுத் தன்னிடம் ஆசை காட்டி அதனைப் பாகனிடம் கொண்டுவந்துவிடும். இதனால் ஸ்பரிச சுகத்தில் ஆசைவைப்பது கூடாது என்று கண்டேன்.

வண்டு, தாமரை மலரின் வாசனையில் ஈடுபட்டு நாள் முழுவதும் அதிலேயே கிடந்து, பிறகு அஸ்தமனவேளையில் அது மூடிக்கொள்ளும்போது அதில் அகப்பட்டு இறக்கிறது. இதிலிருந்து வாசனையில் ஈடுபட்டால் அபாயம் வருமென்று உணர்ந்தேன்.

வேடர்கள் குழல் ஊதக் கேட்டு, மான்கள் அவர்களைத் தொடர்ந்து வலையில் அகப்படுகின்றன. இதனால் சப்தத்தில் ஈடுபடுவதும் தவறென்று உணர்ந்தேன்.

மீன், தூண்டில் முள்ளிலிருக்கும் சிறிய உணவிற்கு ஆசைப்பட்டுப் பிடிபடுகின்றது. இதனால் நாக்கின் சுவையில் ஆசை கொள்வதும் தவறென்று உணர்ந்தேன்.

பிங்களை யென்னும் தாசி, பணத்தாசை கொண்டிருந்தாள். ஒருநாள் ஒருவரும் அவளை விரும்பி வந்து பணம் கொடுக்கவில்லை. அன்றிரவு அவள் வெகு நேரம் விழித்து எவரேனும் வருவாரென்று எதிர்பார்த்திருந்தாள். அவள் அப்பொழுது, 'அந்தோ, நான் இந்த ஆசையைப் பகவானிடம் வைத்து ஆராதித்திருந்தால் மனத்துக்கு எவ்வளவு சுகமிருந்திருக்கும்?' என்றெண்ணிப் பணத்தாசையை விட்டொழித்துப் பகவானைத் தியானித்துக்கொண்டு சுகமாக நித்திரை போனாள். இதனால் விஷயங்களில் நிராசையே பரம சுகம் என்று உணர்ந்தேன்.

மீன்கொத்திப் பறவை, மீனைக் கொத்தி எடுத்துக் கொண்டு பறந்து போகிறது. அதை அநேகம் பறவைகள் தொடர்ந்து தொந்தரவு செய்கின்றன. அதனால் அப்பறவை மீனை எறிந்துவிடுகிறது. அதற்காக மற்றப் பறவைகள் சண்டையிட்டுக் கொள்கின்றன. இதனால் பலர் விரும்பக் கூடிய ஒன்றை ஒருவர் விரும்புவதனால் சண்டை உண்டாகுமென்று உணர்ந்தேன்.

குழந்தைகளுக்கு அவமானமும் மானமும் தெரிய வில்லை. அவர்களுக்கு மனச் சஞ்சலம் இல்லை. அது போலவே ஞானிகளும் ஒன்றிலும் பற்றில்லாதிருக்க வேண்டும் என்று தெரிந்துகொண்டேன்.

ஒரு வீட்டில் ஒரு கன்னிகை இருந்தாள். அந்த வீட்டிற்குச் சில விருந்தாளிகள் வந்தனர். அந்த வீட்டில் அந்த வேளையில் அந்தக் கன்னிகையைத் தவிர வேறொருவரும் இல்லை. ஆகையினால் அந்தக் கன்னிகையே வந்தவர்களை உபசரிக்கவேண்டியதாயிற்று. வீட்டில் அரிசியில்லை. அதனால் அவள் நெல்லெடுத்துப் போட்டுக் குத்தினாள்; குத்தும்போது அவள் கைகளிலணிந்திருந்த வளையல்கள் சத்தப்பட்டன. அதனால் வந்தவர்கள் தன் வீட்டு நிலையை அறிந்து கொள்வார்களென்று அஞ்சிக் கைவளையல்களில் இரண்டைத் தவிர மற்றவைகளை உடைத்தெறிந்து விட்டுப் பழையபடி குத்தினாள். அப்படியும் சத்தமுண்டாகியது. பிறகு ஒரு வளையை உடைத்தெறிந்தாள்; சத்தம் உண்டாகவில்லை. இதனால், அநேகம்பேர் ஒன்றுகூடுவதனால் வீண் சண்டை சச்சரவு வந்துசேருமே யல்லாமல் வேறு பயனிராது; ஆதலால் ஏகாந்தமே இனிது என்று தெரிந்துகொண்டேன்.

அம்பு செய்வோன் வெகு கவனமாய்ச் சாணைபிடிக்க வேண்டும். தப்பினால் அம்பு கையைத் துண்டித்துவிடும்.

ஆகையினுல் அவன் அதிலேயே கவனமாயிருப்பான். அப்படி ஒருவன் அம்புசெய்தான். அவன் பக்கமாக ஓர் அரசன் பரிவாரங்களோடு போனுன். அது அவனுக்குத் தெரியவில்லை. இதனுல், 'மனோ நிரோதமுடையவனுக்கு உள்வெளிப் பிரபஞ்சங்களே கிடையா. அவை உண்டு என்கிற நினைப்பே அவனுக்கு இராது' என்று தெரிந்து கொண்டேன்.

பாம்பு, கறையான் புற்றையே தனக்கு வீடாக்கிக் கொள்கிறது. அது மறைந்து வெகு ஜாக்கிரதையாய் உலாவுகிறது. இதனுல், தனக்கென்று சொந்தமில்லாத மடம் சத்திரம் முதலியவைகளில் ஞானி தங்கவேண்டு மென்பதையும், பாம்பைப்போல் மறைந்து உலகத்தவரோடு அதிகமாகப் பழகாமலிருக்க வேண்டுமென்பதையும் உணர்ந்தேன்.

சிலந்திப்பூச்சி, தன்னிடமிருந்தே நூலை உண்டாக்கிக் கூடுகட்டி அதனைத் தானே காக்கிறது. அதைத் தான் உள்ளே அடக்கிக்கொள்கிறது. அதுபோல் பிரம்மமும் ஸிருஷ்டி ஸ்திதி லயகர்த்தாவாக விளங்குகிறது என்பது தெரிந்துகொண்டேன்.

குளவி புழுக்களை எடுத்துச் சென்று தன் கூட்டினுள் வைத்து அவற்றைக் கொட்டிவிட்டு அவற்றின்முன் போய்ச் சப்திக்கின்றது. அதையே நினைத்துக்கொண்டிருக்கும் புழு, காலக்கிரமத்தில் குளவியாய் விடுகின்றது. அது போல், மனிதனும் விஷயங்களுக்குப் பயந்து பிரம்மத்தைத் தியானஞ் செய்வதால் முடிவில் பிரம்மம் ஆகலாம் என்று தெரிந்துகொண்டேன்" என்று கூறி மகாராஜனிடம் விடைகொண்டு சென்ருர். "ஆதலின், மனிதன் பலத்தை விரும்பாமலே தன் கருமத்தைச் செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவன் பந்தத்திலிருந்து விடுபடுவான்.

என்னை அடைவதற்கு ஸத்ஸங்கமே காரணமாகும். யோகம், வேதாத்தியயனம் முதலிய வழிகளால் என்னை அடைவது அரிது. ஆதலின் எதையும் நீ கவனியாமல் கோபிகைகளைப் போல் என்னிடம் அன்புகொண்டு சரணமடை. நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்'' என்று பகவான் உத்தவருக்கு உபதேசித்தார்.

பிறகு அவ சரணாகதி விஷயத்தை விளக்கியருளினார்; அப்பால் பகவத் தியான விஷயத்தையும் அணிமாதி சித்திகளையும் கூறினார். முடிவில் பகவான் உத்தவரைப் பதரிகாசிரமம் போய்க் கங்கையில் ஸ்நானஞ் செய்து காட்டிலுள்ள பழங்களைப் புசித்துத் தம்மைத் தியானஞ்செய்து பரமபதம் அடையும்படிக் கட்டளையிட்டு அனுப்பினார்.

---

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

---

### ஸ்ரீகிருஷ்ணர் பரமபதம் செல்லல்

முன்பு பகவான் சொல்லியபடி யாதவர்கள் எல்லோரும் பிரபாஸ தீர்த்தம் சென்று ஸத்கருமங்களைச் செய்தார்கள், வெகு ஜாக்கிரதையாக இருந்துவந்தார்கள். இருந்தும், குடிவெறியால் அவர்களுக்குள் கலகம் நேர்ந்தது. அதனால் ஒருவரை ஒருவர் சமுத்திரக் கரையில் முளைத்திருந்த கோரைப் புற்களைப் பிடுங்கிக்கொண்டு அடித்துக்கொண்டனர். கோரைப்புற்கள் அவர்கள் கையில் இரும்பு போன்ற கடின வஸ்துக்களாயின. ரிஷிகளின் சாபத்தினால் வந்த இரும்புலக்கை யல்லவா அவை? அவர்களுடைய கலகத்தை அடக்கப் பலராமரும் ஸ்ரீகிருஷ்ண பகவானும் முயன்றனர். அவர்களையும்

யாதவர்கள் அடிக்கத் தொடங்கினார்கள். அதனால் அவர்கள் ஒதுங்கிவிட்டனர். பலராமர் தமது காலம் முடிந்துவிட்டதை அறிந்து சமுத்திரக்கரையில் உட்கார்ந்து பரம்பொருளைத் தியானம் செய்துகொண்டே தேகத்தை நழுவவிட்டுப் பரமபத மடைந்தார். பகவானும் தமது வாழ்நாள் முடிவடைந்ததைக் கருதி ஓர் அரச மரத்தடியிலே போய்ச் சதுர்புஜரூபத்தோடு வீற்றிருந்தார். அம்மூர்த்தியை வெகு தூரத்தில் வந்த ஜரன் என்ற வேடன் கண்டான். அவனுக்குப் பகவானது நான்கு புயங்களும் நான்கு கால்கள் போலவும், பகவானுடைய சிவந்த உள்ளங்கால் முகம்போலவும் தோன்றின. அதனால் அவன் பகவானை, மானென்று படுத்திருக்கிறது என்று நினைத்து அவர்மீது அம்பெய்தான். அவன்தான் தன்னுடைய அம்பு நுனியில் ரிஷிகளுடைய சாபத்தினால் வந்த இரும்புலக்கையின் அராவமுடியாத துண்டைப் பொருத்தி வைத்துக்கொண்டவன். இப்பொழுது பகவான் மீது பாய்ந்த அம்பு அதுதான். அம்பு பகவான்மீது பட்டதும், வேடன் ஓடிவந்து பார்த்துப் பகவானாயிருக்கக் கண்டு, தான் அறியாமற் செய்ததை எண்ணி எண்ணி வருந்தினான். பகவான், "துக்கப்படாதே! நடக்க வேண்டியது நடந்தது" என்று கூறி அவனைத் தேற்றி அவனுக்கு நற்கதி அளித்தார். பிறகு அந்த இடத்திற்குப் பகவானுடைய சாரதி தாருகன் வந்தான். பகவான் அவனைப் பார்த்து, "நீ போய் உக்கிரஸேனர் முதலியவர் களிடம் உங்களுக்கு நேர்ந்த கதியைச் சொல். சிலநாட்களில் சமுத்திரம் பொங்கித் துவாரகையை அழிக்கப்போகிறது. ஆகையினால் நீயும் வைராக்கியமடைந்து சாந்தநிலையை மேற்கொள்" என்று கூறி அனுப்பினார்.

தாருகன் அவ்வாறே சென்று உக்கிரஸேனன் முதலியவர்களுக்குச் செய்தி தெரிவித்தான். உக்கிரஸேனன்,

வசுதேவர் முதலியவர்களும் அவர்கள் மனைவிமார்களும் உடனே பிரபாஸம் வந்து பார்த்துத் துக்கம் பொறுக்க முடியாமலிருந்தனர். அர்ச்சுனன் அவர்களுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்துமுடித்தான். பிறகு அவன் சில யாதவச் சிறுவர்களுடனும் சிறுமிகளுடனும் பரதகண்டம் வந்து அவர்களை ஓரிடத்தில் வைத்து வஜ்ரன் என்ற யாதவ குலத்தலைவனை அவர்களுக்கு அரசனாக்கி விட்டு இந்திரப்பிரஸ்தம் போனான்.

பிறகு பகவானைத் தரிசிக்கத் தேவர்கள் எல்லோரும் அந்த மரத்தடிக்கு வந்தனர்; மலர்மாரி பொழிந்து பகவானைத் துதித்தனர். பகவான் அவர்களைப் பார்த்ததும் தம் திரு நயனங்களை மூடிக்கொண்டார். உடனே அவர் தமது திருமேனியுடனே பரமபதம் சென்றார். அவர் சென்றது தேவர்களுடைய கண்களுக்கு மட்டுமே புலப்பட்டது.

---

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

—o—

### யுக தர்மங்களின் விவரணம்

இதன் பின்பு சுகப்பிரம்மரிஷி பரீக்ஷித்துவுக்குக் கலி யுகத்தில் அரசாளப்போகிற அரசர்களைப்பற்றிக் கூறினார்; கலியுக தர்மம் இன்னதென விளக்கினார்:

கலியுகத்தில் வருணாசிரம தருமம் குறைந்து கேவலம் வேஷ மாத்திரத்தில் நிலைத்திருக்கும். பலமுடையவனே பெரியவன். அவனே நியாயவாதி, தார்மிஷ்டன் என்று புகழப்படுவான்; பணக்காரனே உயர்ந்த குடிப்பிறப்பு உரிமைபெற்று விளங்குவான். விவாகம் பெரியோருடைய சம்மதப்படி நடவாமல் மணமகன் மணமகளுடைய

சம்மதப்படியே நடக்கும். மோசமே வியாபாரமாயிருக்கும். வாக்குச் சாதுரிய முடையவனையே நன்ருய்ப் படித்தவ னென்றும், ஸத்தியஸந்தனென்றும் நினைப்பார்கள். அருகிலிருக்கும் கோயில் குளங்களை விட்டுத் தூரத்தி லிருக்கும் கோயில் குளங்களையே விசேஷமாகக் கொள்வார்கள். தலைமயிரைப் பலவிதமாக வெட்டிக் கொள்வார்கள். நண்பர்களுக்கும் உறவினர்களுக்குமே விருந்து செய்வித்து மகிழுவார்கள். கீர்த்தியின்பொருட்டே தருமம் அநுஷ்டிக்கப்படும். ஜனங்களுக்கு வரிகள் அதிகப் படும். மழையில்லாமல் பஞ்சமும் உண்டாகும். அடிக்கடி சண்டைகளும் ஏற்படும். ஜனங்கள் உறுதியான மன முடையவர்களாய் இருக்கமாட்டார்கள். அவர்கள் அக்கிரமங்கள் செய்யத் தலைப்படுவார்கள். அதனுல் அவர்களுக்குப் பலக்குறைவு உண்டாகும். ஆயுளும் குறையும். புருஷாயுள் ஐம்பதாய்விடும். ரிஷி ஆசிரமங்க ளெல்லாம் கிருஹஸ்தர்களுடைய வீடுகள்போ லாகும். பெண்சாதியைச்சார்ந்த உறவினரையே ஒவ்வொருவரும் தம்முடைய நெருங்கிய பந்துவாய் எண்ணுவார்கள். மருந்துகளுக்கும் வீரியம் குறைந்துபோகும். பொதுவாகக் கலியுகத்தில் ஜனங்களுக்குக் கஷ்டமே மிகுதியாகும்.

இந்தச் சமயத்தில் பகவான் சம்பளம் என்னும் ஊரில் விஷ்ணுயக்ஷன் என்னும் பிராம்மணனுக்குப் பிள்ளையாகப் பிறப்பார். இதுதான் கல்கி அவதாரம்.

அவருக்குத் தேவர்கள் ஒரு குதிரை கொடுப்பார்கள். அதில் அவர் ஏறிக்கொண்டு ஆங்காங்குச் சென்று தருமம் தவறி நடப்பவர்களைத் தண்டிப்பார். தண்டனை ஏற்படுங் காலத்தில் மனிதர்கள் மனக்களங்கம் நீங்கிச் சுத்தமடை வார்கள். இந்த அவதாரம் முடிந்ததும் கிருதயுகம் தொடங்கும்.

இந்த யுகத்தில் ஜனங்களெல்லோரும் ஸத்தியம், தயை, தவம், கொடை முதலிய உத்தம குணங்களோடு விளங்குவார்கள். எல்லாவற்றையும் அவர்கள் சமமாகப் பார்ப்பார்கள். பகவத் தியானத்தினுல் இந்த யுகத்தில் முக்தி பெறுதல் கூடும்.

பிறகு திரேதாயுகம் உண்டாகும். அதில் தர்மம் நான்கில் ஒரு பங்கு குறைந்துவிடும். ஜனங்கள் பொருமை, பொய், கோபம் முதலிய தீய குணங்களுக்கு இருப்பிட மாவார்கள். ஆனுல் அவர்களுக்குத் தவம் முதலியவற்றில் சிரத்தை இருக்கும். பிராம்மணர்கள் வேதசாஸ்திர ஞானமுடையவர்களாக இருப்பார்கள். யாகம், பகவத் ஆராதனம் முதலியவைகளால் இந்த யுகத்தில் முக்தி சித்திக்கும்.

அப்பால் துவாபர யுகம் உண்டாகும். அதில் தர்மம் பாதி குறைந்துவிடும். க்ஷத்திரியர்கள் அக்காலத்தில் விருத்தியாவார்கள். அவர்கள் வேதசாஸ்திர விற்பன்னராய் விளங்குவார்கள். ஸத்கர்மங்களை அனுஷ்டித்துக்கொண் டிருக்கிற இல்லற வாழ்க்கையிலேயே இருப்பார்கள். அந்த யுகத்தில் பகவத் கைங்கரியத்தினுலே முக்தி யுண்டாகும்.

அதன் பிறகு கலியுகம் உண்டாகும். இந்த யுகத்தில் தர்மம் கால் பங்காகக் குறைந்துவிடும். பிறகு வர வர அதுவும் குறைந்து போய்விடும். ஜனங்கள் தகாத வழியிலே சென்று கஷ்டப்படுவார்கள். குழந்தைகள் அதிகமாகப் பிறக்கும். ஸ்திரீகள் தங்கள் கற்புநிலை தவறி நாணமொழிந்து அலைவார்கள். அவர்களிடம் திருட்டு முதலிய தீய குணங்கள் குடிகொள்ளும். பிராம்மண க்ஷத்திரிய வைசியர் முதலியவர்கள் தங்கள் சுகத்தையே பெரிதாகக் கொள்வார்கள். துறவிகள் ஆசைக்குள்ளாகி அலைவார்கள். யஜமானன் வேலைக்காரன், குரு சிஷ்யன்

இவர்களுள் மரியாதைக் கிரமம் வெளிக்கு மாத்திரமே இருக்கும். பொதுவில் ஜனங்கள் அவரவர் கர்மங்களை விட்டுப் பல வழியில் உழன்று திரிவார்கள். ஆனால் இந்த யுகத்தில் சுலபமான வழியில் முக்தி யுண்டாகும். பகவந் நாம ஸங்கீர்த்தனம் செய்துவந்தால் போதும்.

அப்பால் உலகமெல்லாம் பிரளயத்தினாலே அழியும். மறுபடியும் சிருஷ்டி உண்டாகும். பரீக்ஷித்து மகாராஜனே, கேள். பகவானுடைய உண்மைச் சொரூபத்தைக் கூறுகிறேன். பகவான் எங்கும் பரவியிருப்பவர்; அழிவற்றவர். மரணம் என்பது உண்மையானதல்ல; தேகம் அநித்தியமானது; ஆத்மா அழிவற்றது. இதையறிந்து நடப்பவனே பரம்பொருளோடு கலப்பான். ஆகவே மனத்தைச் சஞ்சலப்பட விடாமல் உன் ஆத்மாவைத் தியானஞ்செய்து பரம்பொருளை அடை. தக்ஷகன் உன்னை வந்து கடிப்பான். கடித்தபோதிலும் உன்னைக் கொல்ல முடியாது. ஏனெனில் நீ மரணத்திற்கு அப்பாற்பட்டவனாய் விடுகிறாய்.

இவ்வாறு கூறி மரணத்தை ஜயிக்கும்படி அநுக்கிரகம் செய்துவிட்டு, சுகர் ரிஷிகளுடன் புறப்பட்டு நெகிடுலும் சஞ்சாரம் செய்யச் சென்றார்.

---

## நாற்பதாம் அத்தியாயம்

### பரீக்ஷித்து மோக்ஷமடைதல்

சுகப்பிரம்மரிஷி சென்ற பிறகு பரீக்ஷித்து அவர் உபதேசித்தபடியே தியானம் செய்யத் தொடங்கினான். அவன் மனம் பரம்பொருளில் லயித்துவிட்டது. அவனுக்குத் தேக நினைப்பே இல்லாமற் போய்விட்டது. இப்படி

யிருக்கையில் தக்ஷகன் பிராம்மண உருவங்கொண்டு அரசனைக் கடிப்பதற்காக வந்தான். வழியில் காசியபன் என்ற பிராம்மணனொருவன் தன் மந்திர பலத்தினால் தக்ஷகன் விஷத்தை இறக்கி அரசனைப் பிழைப்பித்து அவனிடம் பெரும் பரிசுபெற வேண்டுமென்ற நோக்கத்துடன் வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்ட தக்ஷகன், "நீர் யார்? எங்கே செல்கிறீர்?" என்று கேட்டான். காசியபன் தான் செய்யப்போவதை மறைக்காமல் சொன்னான். தக்ஷகன் இந்த அந்தணனுக்கு விஷத்தை இறக்கும் தன்மை உண்டாவென்று அறிய எண்ணி, "ஸ்வாமி, நீர் ஏன் போய் இதில் கஷ்டப்படுகிறீர்? தக்ஷகன் கொடிய விஷமுள்ள பாம்பு. அது கடித்தால் அந்த விஷத்தை உம்மால் இறக்கமுடியாது. வீணாசை ஏன்? திரும்பிப் போம்" என்றான்.

காசியபன், "நான் எப்படிப்பட்ட விஷத்தையும் இறக்கிவிடுவேன். அந்தச் சக்தி எனக்குண்டு" என்றான். உடனே தக்ஷகன் தன் உண்மைச் சொரூபத்தை எடுத்துக் கொண்டு அங்கிருந்த ஒரு மரத்தைக் கடித்து, "இதனை முன்போல் தழைக்கும்படி செய்யும் பார்க்கலாம்" எனவே, காசியபன் தன் கையிலிருந்த மந்திர ஜலத்தில் கொஞ்சமெடுத்து மந்திரம் உச்சரித்து மரத்தின் சாம்பலின்மேல் தெளித்தான். தெளித்த மாத்திரத்தில், மரம் முன்போல் தழைத்து வளர்ந்தது. இதைக் கண்டதும் தக்ஷகன், "சரி, நீர் சாமர்த்தியமுடையவரே; ஆனால் பிராம்மண சாபத்தை மாற்றமுடியாது. உமக்குப் பொருள்தானே வேண்டும்? நான் தருகிறேன்; பெற்றுக்கொண்டு வந்தவழியே திரும்பி விடும்" என்று கூறி நாகரத்தினத்தைக் கக்கி அந்தணன் கையில் கொடுக்க அவன், 'நமக்கேன் வீண் சங்கடம்? நாம் விரும்பியது நமக்குக் கிடைத்துவிட்டது' என்றெண்ணிச் சந்தோஷத்துடன் திரும்பிவிட்டான்.

பிறகு தக்ஷகன் பிராம்மண ரூபங்கொண்டு பரீக்ஷித்து வினிடம் போய் அவனைக் கடித்தான். கடித்ததும் அவன் தேகம் அந்த விஷத்தினுல் பஸ்மமாயிற்று. அவனுடைய ஆத்மா பிரம்மத்தோடு கலந்தது.

அப்பால் பரீக்ஷித்துவினுடைய பிள்ளை ஜனமேஜயன் என்பவன், தன் தந்தை சர்ப்பத்தினுல் இறந்தபடியினுல் ஸர்ப்பங்களின்மீது கோபங்கொண்டு அவைகளையெல்லாம் அழிக்க ஒரு யாகம் செய்தான். அந்த யாககுண்டத்தில் சகல ஸர்ப்பங்களும் வந்து விழுந்து இறந்தன. ஆனுல் தக்ஷகன் மட்டும் பயந்து இந்திரனுடைய கட்டிற்காலைச் சுற்றிக்கொண்டு ஒளிந்திருந்தான். யாக மகிமையானது தக்ஷகனைக் கட்டிலோடு யாக குண்டத்துக்கு நேரே அந்தரத்தில் கொண்டுவந்து விட்டது. அப்பொழுது அஸ்திகர் என்னும் ரிஷி அங்கே தோன்றி, "போதும், இந்த யாகத்தை இப்படியே நிறுத்திவிடவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். அரசன் அவர் சொல்லை மறுக்க மனம் வராமல் யாகத்தை நிறுத்திவிட்டான்.

இவ்வாறு பாகவதம் முடிந்தது. பிறகு ஸூத புராணிகர் சௌனகாதி மகரிஷிகளுக்கு, வேதம் பிரம்மா வினிடமிருந்து வந்த வரலாற்றையும், வேதவியாஸர் வேதத்தை நான்கு வகையாகப் பிரித்ததையும், புராணங் களின் கணக்கையும், அவற்றின் லக்ஷணங்களையும் விளக்கி யருளினுர். பிறகு மார்க்கண்டேயர் தவம் செய்ததையும் கூறியருளினுர் :—

மார்க்கண்டேயர் மிருகண்டு என்பவரின் புத்திரர். அவர் சிறுவயதிலேயே தவஞ்செய்து மரணபயத்திலிருந்து நீங்கினுர். பிறகு ஒரு சமயம் அவர் மகாவிஷ்ணுவை நோக்கித் தவஞ்செய்து, "உமது மாயையை உள்ளபடி உணர வேண்டும்" என்று வரங் கேட்டார். பகவான்

பிரத்தியக்ஷமாகி, "அவ்வாறே செய்வோம்" என்று வரமளித்து மறைந்தார்.

அப்பால் ஒருநாள் மார்க்கண்டேயர், புஷ்பபத்திரா நதிக்கரையில் உட்கார்ந்து ஜபம் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது பெரிய புயல்காற்று அடித்தது. உடனே ஆகாயத்தில் மேகம் பரவிக் கவிந்துகொண்டு பெரு மழை பொழிந்தது. அப்பால் கொஞ்ச நாழிகையில் கடல்பொங்கி உலகமெல்லாம் பெருகிவிட்டது. அந்தப் பிரளயத்தில் மார்க்கண்டேயர் மாத்திரம் நீந்திக்கொண்டு தத்தளித்தார். பிரவாகம் அவரைக் கடலிற் கொண்டுபோய்ச் சேர்த்தது. அதில் ஒரு பெரிய ஆலமரம் மூழ்கியிருந்தது. அதன் நுனியில் ஓர் இலையில் ஒரு சிறு குழந்தை படுத்திருக்கக் கண்டார். அதனுடைய தேஜஸ் அவருடைய கண்களைக் கவர்ந்தது. அது புன்னகை செய்துகொண்டு தன் காற்பெரு விரலை வாயில் வைத்துச் சப்பிக்கொண்டிருந்தது. அதைக் கண்டதும் மார்க்கண்டேயருக்கு ஆனந்த முண்டாயிற்று. அதனால் அவர் பரவசமடைந்தார். பின் அதனருகே நீந்திக் கொண்டு போய் அதை உற்று நோக்கினார். உடனே ஒரு கொசுவின் உருக்கொண்டு அந்தக் குழந்தையின் மூக்கினுள் நுழைந்து வயிற்றுக்குள் போய்ப் பார்த்தார். வயிற்றில் அண்டபிண்ட சராசரங்கள் அனைத்தையும் கண்டு பிரமித்துப் பரவசரானார்.

உடனே திடீரென்று அந்தக் குழந்தையின் மூச்சு வழியே அவர் வெளியே வந்தார். வந்ததும் அந்தக் குழந்தையை நாராயணமூர்த்தியென உணர்ந்து ஆனந்த மடைந்து துதித்து அவரைக் கட்டிக்கொள்ளப் போனார். அக்கணமே பகவானுட்படச் சகல தோற்றங்களும் மறைந்தன. மார்க்கண்டேயர் முன்போல் புஷ்பபத்திரா நதிக்கரையில் வீற்றிருந்தார்.

இவ்வாறு பகவான் மார்க்கண்டேயருக்குத் தமது மாயாதரிசனம் செய்வித்தார். பிறகு மார்க்கண்டேயருக்குப் பரமசிவம் தமது தரிசனம் தந்து, "என்றும் மாறாப் பெரும் புகழுடன் விளங்கக் கடவாய்" என்று வாழ்த்தி மறைந்து அருளினார்.

இதை இவ்வாறு கூறியபின், ஸூதபுராணிகர் தந்திர மார்க்க ஆராதனைக் கிரமத்தையும், மகாவிஷ்ணுவின் விசுவரூபவர்ணனையையும், பகவான் சூரிய ரூபமாகவிருந்து உலகத்தைச் செழிப்படையச் செய்வதையும் கூறியருளினார். பாகவத ஸாரம், வைதிகதர்ம ஸாரம் முதலியவைகளையும் விளக்கியருளி அவர் பாகவதத்தை முடித்தார்.

முற்றும்



பங்கிம் சந்திரர்

அரிய நூல்கள்

விஷ விருக்ஷம்
ஆனந்தமடம்
துர்க்கேசநந்தினி
மாதங்கினி
தேவி சௌதராணி
கிருஷ்ணகாந்தன் உயில்
கபாலகுண்டலா
இந்திரா
ரஜனி
ஹிரண்மயி
ராதாராணி
மிருணாளினி
ராஜஸிம்ஹன்
சந்திரசேகரன்

"எஸ். வி. வி"

ஹாஸ்ய நூல்கள்

உல்லாஸ வேளை
வாழ்க்கையே வாழ்க்கை
வஸந்தன் வரலாறு
புது மாட்டுப் பெண்
ஸம்பத்து

(இங்கிலீஷ்)

The Marriage
Much Daughtered
Soap Bubbles
More Soap Bubbles
Holiday Trip
Chaff & Grain



திரு. வி. க.

அரிய நூல்கள்

மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்
பெண்ணின் பெருமை
தமிழ்த் தென்றல்
இந்தியாவும் விடுதலையும்
முருகன் அல்லது அழகு
முடியா? காதலா?
நாயன்மார் வரலாறு
உள்ளொளி
சீர்திருத்தம்
திருக்குறள் விரிவுரை
பொதுமை வேட்டல்
ராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்

சரத் சந்திரர்

அரிய நூல்கள்

விஜயா
அமூல்யன்
ஸௌதாமினி
லலிதா
வைகுந்தன் உயில்
இந்துமதி
ஹேமநளினி
அனுபமா
இருளில் ஒளி
காசிநாதன்
மாதவி
சந்திரநாத்
தேவதாஸ்
ஹேமாங்கினி
சரத் சந்திரர் கதைகள்

